# ஸ்ரீ எஸ். சத்தியமூர்த்தி அவர்களுடைய பிரசங்கங்களும் கட்டுரைகளும்

நாமக்கல் கவிஞர்

ஸ்ரீ வெ. இராமலிங்கம் பிள்ளை அவர்களின்

முன்னுரையுடன் கூடியது.

தமிழ்ப் பண்ணை

தியாகராய நகர், :: சென்னை.

# சத்தியமூர்த்தி நாமம் வாழ்க!

## முதற்பதிப்பின் பதிப்புரை

"என் ஜீவனே! நீ ஏதேதோ இனிய பொருள்களைச் சுவைத்திருக்கிறாய். நல்ல திராட்சையின் ரஸத்தை குடித்திருக்கிறாய். பாலையும் கறந்தவாறு பல்லாயிரம் தடவை பருகியிருக்கிறாய். தேவலோகம் சென்று எத்தனையோ ஜன்மங்களில் அமுதம் உண்டு அதன் ருசி அறிந்திருக்கிறாய். உண்மையைக் கூறு. எங்காகிலும் "கிருஷ்ணா" என்ற சொல்லின் இனிமையைக் கண்டதுண்டா?" என்று ஒரு சமஸ்கிருதக் கவிஞர் பக்திப் பரவசத்தில் பாடுகிறார்.

தமிழ் மக்களே! சொல்லுங்கள். எத்தனையோ அறிஞர்கள் நம்மிடையே வாழ்ந்தார்கள், வாழ்கிறார்கள். எத்தனையோபேர் நம்மிடம் பேசினார்கள்; பேசுகிறார்கள். எத்தனையோபேர் நமக்குச் சேவை செய்தார்கள்; செய்கிறார்கள். உண்மையைக் கூறுங்கள். எங்காகிலும் நமது தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களின் வாழ்க்கையைப் போலும், அவர் பேச்சின் கம்பீரம் போலும், அவர் செய்த சேவையைப் போலும் கண்டதுண்டா?

சத்தியமூர்த்தி பேசுகிறார் என்றால் லட்சக்கணக்கான மக்கள் குதூகலத்துடன் கூடினார்கள். உற்சாகத்துடன் கேட்டார்கள்.

சத்தியமூர்த்தி பேசுகிறார் என்றால் எதிர்க்கட்சியினர் பயபக்தியுடன் செவி சாய்ப்பார்கள்.

சத்தியமூர்த்தி பேசினால் படித்தறியாத ஏழைக் கிழவனும் துடித்து எழுவான்; தன் மெலிந்த தோளைக் கொட்டுவான்; தொளை மிகுந்த கந்தல் உடையைச் சுருக்கிக்

கட்டுவான்; "எடுத்தெறிய வேணுமிந்த அடிமை வாழ்வை" என்று அடித்துரைத்து ஆவேசம் கொள்ளுவான்.

அவருடைய பேச்சைக் கேட்டு எத்தனையோ ஆயிரக் கணக்கான இந்தியர்கள் விடுதலைப் போராட்டத்தில் வீறுகொண்டு குதித்தார்கள். கலைமலாச்சியில் புதிய ஊக்கம் கொண்டார்கள்.

அவருடைய மூச்சு அடங்கி இரண்டு வருடங்களாகி விட்டன. ஆனால் அவருடைய கம்பீரமான குரலின் நாதம் இன்னும் நம் காதில் ஒலித்துக் கொண்டிருக்கிறது.

அவர் வெறும் அரசியல் தலைவர் மட்டுமல்ல, சிறந்த நடிகர். இலக்கியக் கடலில் வாழ்ந்த பெரிய திமிங்கிலம் வாழுக்கையை இன்பத்துடன் அநுபவிக்கத் தெரிந்த மகான்.

தேச பக்தர் ஸ்ரீ சிவஞான கிராமணியார் சொல்வது போல, "வீரர் ஸ்ரீ சத்தியமூர்த்தி மறைந்தார். அவரது சேவையின் சின்னங்களாக விளங்குவது இரண்டு.

ஒன்று ஜஸ்டிஸ் கட்சியின் சமாதி; மற்றொன்று பூண்டித்தண்ணீர் தேக்கம்.

முன்னது அழிவு; பின்னது ஆக்கம்.

ஆம், ஆக்கவும் வல்லார், அழிக்கவும் வல்லார் ஸ்ரீ சத்தியமூர்த்தி. வாழ்க அவர் நாமம்"

இந்தியாவின் குரல் ஒன்றுசேர்ந்து கோஷிக்கிறது. "வாழ்க சத்தியமூர்த்தி நாமம், வாழ்க! வாழ்க!!"

* * *

அவருடைய பிரசங்கங்கள், ரேடியோ பேச்சு, அவர் எழுதிய கட்டுரைகள் முதலியவற்றைத் தொகுத்து வெளியிட வேண்டுமென்று நானும் எனது அருமை நண்பர் ஸ்ரீ எஸ். ஏ. ரஹீம் அவர்களும் எண்ணினோம். நாங்கள் இரு

வரும். ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களுக்குப் பலவகையில் கடமைப்பட்டவர்கள்.

தலைவா அவர்களின் இல்லத்திற்குச் சென்று எங்கள் அபிப்பிராயததை அன்னுருடைய அருமை மனைவி யார் ஸ்ரீமதி பாலசுந்தரம்மாள அவர்களிடம வெளியிட்ட போது அவர்களும் அதற்கு இசைந்து தலைவா அவர்க ளுடைய "பைலகளை"த தநதாாகள. அது ஒரு வண்டி இருககும. இதை எபபடிப் பாாதது பிரிப்பது என்று நானும ஸ்ரீ ரஹீம் அவர்களும் திகைததுவிட்டோம். ஒரு வாறு தைரியததை வரவழைததுக்கொண்டு ஒவ்வொரு 'பைலா'கப பிரிகக ஆரம்பிததோம. என்ன ஆச்சரியம்!

அவ்வளவு அறபுதமாக, ஒழுங்காக ரகவாரியாகத் தேதிபபடி எலலா விஷயங்களையும சேகரித்து வைத்திருந் தாா. ஆகையால எங்களுக்கு விஷயங்களைப் படிப்பதிலும் தேடுவதிலும சிரமம ஏறபடவில்லை.

ஆனல் அவைகளில் எதைத தேர்ந்தெடுபபது என்பது கஷ்டமான பிரச்னையாகி விட்டது. அததனையும் அருமை யான விஷயங்கள்!

நல்ல சமயத்தில் நமது தலைவர் அவர்களின் அருமைப் புதல்வி ஸ்ரீமதி லெட்சுமி தேவி அவர்களும் அவரது கண வர் ஸ்ரீ கிருஷ்ணமூர்ததி அவர்களும் எங்களுக்கு உதவி செய்தார்கள். அதன் பலன் இபபுத்தகம.

*　　　*　　　*

"சத்திய மூர்த்தி பேசுகிருர்!"

ஆம், நமது தலைவர் இன்றும் பேசுகிருர், நாளையும் பேசுவார். என்றும் பேசுவார். அவருடைய கம்பீர மான குரலும் ஆணித்தரமான அபிப்பிராயங்களும் கிராம போன் ரெக்காாடு மூலம் நாம் கேட்க முடியும். தமிழி லும் ஆங்கிலத்திலும், நமது தலைவரின் பேச்சுக்கள் "ரெக்கார்டு" செய்யப்பட் டிருக்கின்றன.

அதில் "அஹிம்ஸை"யைப் பற்றி "ரெக்கார்"டில் பேசியிருப்பதே இப்புத்தகத்தின் முகப்பு. அதனால்தான் இப்புத்தகத்திற்கு "சத்தியமூர்த்தி பேசுகிறார்" என்று பெயர் சூட்டப்பட்டது.

ஸ்ரீ சத்தியமூர்த்தியின் பேச்சைக் கோடிக்கணக்கான மக்கள் கேட்க ஆவலாக இருந்தார்கள்; அவரது புத்தகத்தையும் லட்சக்கணக்கான மக்கள் படிக்கத் தயாராக இருக்கிறார்களென்பதும் நாம் சொல்லித் தெரியவேண்டிய சங்கதி அல்ல.

ஆனால் நாங்கள் என் செய்வோம்? சர்க்காரின் காகிதக் கட்டுப்பாடு உத்தரவினால் கட்டுண்டோம்; பொறுத்திருப்போம், காலம் மாறும்.

தியாகராயநகர்,
26—3—45

சின்ன அண்ணாமலை.

# உள்ளுறை

# நமது தலைவரும் நானும்

## நாமக்கல் கவிஞரின் முன்னுரை

ஸ்ரீ சத்தியமூர்த்தி ஐயரவர்களுடைய சில பிரசங்கங்களின் தொகுதியான இந்தப் புத்தகத்துக்கு நான் முன்னுரை எழுத வேண்டும் என்று சத்தியமூர்த்தியவர்களுடைய குடும்பத்தார் விரும்புவதாக இதை வெளியிடும் உரிமை பெற்ற 'தமிழ்ப்பண்ணை' சின்ன அண்ணாமலையவர்கள் எழுதினதைக் கண்டு நான் மிகவும் பெருமையடைகின்றேன்.

சத்தியமூர்த்தியவர்களைப் பற்றி நினைக்கும்போதெல்லாம் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சியும் ஒப்பற்ற ஒரு உத்ஸாகமும் உதிப்பதுண்டு. ஆதலின் அவரைப்பற்றி இரண்டொரு வார்த்தைகளை எழுத எனக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததைப்பற்றி மிகவும் சந்தோஷப்படுகிறேன்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்கள் மிகவும் இனிமையான மனிதர். மனித சமூகத்தின் நல்வாழ்விற்கு அவசியமான பல துறைகளிலும் நல்ல அறிவாளி. கல்வியில் அளவற்ற ஆர்வமுள்ளவர். கலைகளில் ரஸனை மிகுந்தவர். அன்பர்களுக்கெல்லாம் ஒரு ஆசைப் பொருள். வம்பர்களுக்கெல்லாம் வாயடைக்கும் கருவி. தொண்டர்களின் துணைவர். உழைப்பாளிகளின் ஊக்கம். பிரசங்கத் திறமை அவருக்குப் பிறவிக்குணம். தர்க்கரீதி தவறாத வாதம் அவருடைய தனிச்சிறப்பு.

இவற்றிற்கெல்லாம் மேலாக ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்கள் நம்முடைய நாட்டின் மிகச்சிறந்த அரசியல் அறிஞருள் ஒருவர். இந்திய நாட்டின் புராதன இலக்கியங்களிலும் இதர நாடுகளின் நவீன இலக்கியங்களிலும் ஆழ்ந்த ஆராய்ச்சி யுள்ளவர். இப்போது உலகத்தில்

டந்துவரும் வெவ்வேறு ஆட்சி முறைகளையும் தனித்தனி யாக ஆய்ந்தறிந்த அரசியல் வாதி.

சுமார் பத்து வருஷங்களுக்கு முனனல், ஸ்ரீ சததிய மூர்த்தியவர்கள் நாமக்கல்லில் ஒரு பிரமாண்டமான பொதுக்கூட்டத்தில் பேசினர். அந்தக் கூட்டத்திற்கு நான் தலைமை வகிக்க நேர்ந்தது. பிரசங்கியவர்களைப் பற்றிக் கூட்டத்தின் தலைவர் அறிமுகப்படுத்தவேண்டிய முறையில் நான் "நம்முடைய இந்திய நாட்டின் மிகச் சிறந்த அரசியல் ஞானிகளில் ஒருவர் நமது சத்தியமூர்தி யவர்கள் என்பதை நம்மில் பலபேர் அறிவார்கள் அது போதாது நமது சத்தியமூர்த்தி அவர்கள் இந்த உலகத் திலுள்ள எந்த நாட்டிலும் இன்றைய தினத்திலும் இதற்கு முன்னுலும் உள்ள அரசியல் அறிவாளி எவருக் கும் எந்த விதத்திலும் குறைந்தவரல்லரென்பதே என் னுடைய துணிபு. ஆதலின் இன்றைக்கு உலகிலுள்ள மிகச்சிறந்த அரசியல் வாதிகளில் ஒருவரான ஸ்ரீ சத்திய மூர்த்தியவர்கள் நம்முடைய சுதந்திர முயற்சிகளைப்பற்றி உபதேசிக்க நம்மிடையே வந்திருப்பது, நமக்கு மிகவும் பெருமைதரக் கூடிய விஷயம்........" எனறு பேசினேன்

இந்தப் புகழுரையைக் கேட்டுப் பூரித்துப்போன ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்கள் தம்முடைய பிரசங்கத்தின் ஆரம்பத்தில் "நாமக்கல் மிகவும் விசேஷமான விஷ்ணு ஸ்தலம் என்பதை அறிவேன். அத்துடன் ஸ்ரீ சுப்ரமண்ய பாரதியவர்களுடைய பிரதிநிதி போல நம்முடைய சுதந் திரப் போராட்டத்திற்கு வேண்டிய அநேக அருமையான தேசாபிமானப் பாட்டுக்களை கவனம் செய்து கொடுத்து வரும் கவிஸ்ரேஷ்டரான நமது ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை வசிக்கும் இடமாக இருப்பதால் இந்த ஊர் என்னைப் போன்ற காங்கிரஸ் ஊழியர்களுக்கு ஒரு க்ஷேத்திரமாக இருக்கின்றது. அப்படிப்பட்ட இந்த ஸ்தலத்தில் அதே கவிஸ்ரேஷ்டர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளையவர்களின் அக்ரா சனத்தினகீழ் நான் இன்று பேசக் கிடைத்தது பெரும்

பாக்யமென்றே கருதுகின்றேன். கவியவர்களுடைய வாக்கால் நான் உலகத்திலுள்ள சிறந்த அரசியல் ஞானிகளில் ஒருவன் என்று புகழப் பெற்றதை ஒரு பெரிய சம்பத்தாகவே சந்தோஷிக்கிறேன். வாஸ்தவத்தில் நான் இன்றைக்கு அப்படிப்பட்ட ஒரு அரசியல் அறிஞனாக இருக்கிறேனோ இல்லையோ எனக்குத் தெரியாது. ஆனால் அப்படிப்பட்ட ஒரு அரசியல்வாதி ஆக வேண்டும் என்பதுதான் என்னுடைய அபிலாஷை. கவிஞருடைய வாக்குப் பலிக்க வேண்டுமென்று உங்களுடைய ஆசீர்வாதத்தையும் பகவானுடைய அனுக்ரகத்தையும் அவலம்பிக்கின்றேன்........." என்றார்.

என் நினைவில் நெடு நாளாக இருந்துவரும் இந்த நிகழ்ச்சியில் அவர் பிரயோகித்த பதங்களை ஏறத்தாழ அப்படியே எழுதியிருக்கிறேன். இதிலிருந்து ஸ்ரீ சத்திய மூர்த்திக்கு 'அரசியல் அறிஞர்' என்று அழைக்கப் படுவதில் எவ்வளவு ஆனந்தம் இருந்தது என்பதை அறியலாம்.

ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு அரசியல் நுணுக்கங்களை ஆராய்ச்சி செய்வதில் இருந்த ஆர்வம் மற்ற எதிலும் இல்லை யென்பதை 1932-ம் வருஷம் வேலூர் சிறையில் அவருடன் இருந்தபோதே அறிவேன். வேலூர் சிறையில் அவர் வான்மீக ராமாயணத்தை வெகு பயபக்தியோடு படித்துப் பலபேருக்கு வியாக்யானம் சொல்லி ஸத்கால க்ஷேபம் செய்வதுண்டு. முற்றிலும் பௌராணிக முறையில் ஸ்ரீ ராமஜனனம், சீதா கல்யாணம், பாதுகா பட்டாபிஷேகம், கணையாழி கொடுத்தல் முதலான இடங்களில் வழக்கம்போல விழாக் கொண்டாட்டம் நடத்தி விநியோகங்களும் நடத்தினர், இரண்டொரு சமயம் ஜெயில் 'சூப்ரண்ட்' அவர்களுடைய அனுமதியின் பேரில் வேலூர் சிறையில் அப்போதிருந்த ஏ. பி. இரண்டு வகுப்பு அரசியற் கைதிகளும் சேர்ந்து இந்த ராமாயண விழாக்களைக் கொண்டாடினார்கள்.

அதனால் 'பி' வகுப்புக் கைதியாக இருந்த நானும் 'ஏ' வகுப்புக் கைதியாக இருந்த சத்தியமூர்த்தியவர்களுடைய ராமாயணப் பிரசங்கங்களைக் கேட்க சிறையில் அவர் இருந்த பகுதிக்குப் போவதுண்டு. அவருடைய ராமாயணப் பிரசங்கங்களில் அடிக்கடி இடையிடையே அரசியல் பிரச்னைகளை நுழைத்து சிற்சில சமயங்களில் வெகுநேரம் வியாக்யானங்களைச் செய்வார். அங்கங்கே பிரசங்கத்தைக் கேட்பதற்கென்று கூடிய மற்றவர்களுடன் இந்த அரசியல் பிரச்னைகளைப் பற்றிய விவாதங்களும் நடைபெறும். நேர்ந்த இடங்களிலெல்லாம் சுயராஜ்யத்தைப் பற்றியும், சுதந்திரத்தைப்பற்றியும், சமதர்மத்தைப்பற்றியும் பழைய காலத்துக் கோட்பாடுகளுக்கும் இந்தக் காலத்து எண்ணங்களுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை விரிவாக விளக்கி விவாதிப்பதில் ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்களுக்கு வெகு பிரியம்

சிறைவாசத்திற்குப் பிறகும் அவரைச் சந்திக்க நேர்ந்த போதெல்லாம் அவருக்கு மற்ற சிந்தனைகளைக் காட்டிலும் அரசியல் சிந்தனைகளே அதிகம் என்பதைக் கண்டேன். சட்டசபை தேர்தல் காலத்தில் அவருடன் சேலம் ஜில்லாவில் சில நாள் சுற்றுப் பிரயாணம் செய்தேன். அப்போது மோட்டார் வண்டியில் அரசியலைப் பற்றிய பேச்சேதான். மோட்டாரை விட்டு இறங்கினதும் பொதுக்கூட்டம் இருக்கும். அங்கே அரசியல் பேச்சுத் தான். பிரசங்கம் முடிந்த உடன் சாப்பாடு நடக்கும். சாப்பிடும்போது அரசியல் பேச்சுதான். சாப்பிட்டு முடிந்ததும் சந்தனம் தாம்பூலம் வழங்கும்போதும், "இப்படிப்பட்ட விருந்தும் சந்தன தாம்பூலங்களும் இந்த நாட்டிலுள்ள ஒவ்வொரு பிரஜைக்கும் தினந்தினம் கிடைக்கும்படியாகச் செய்யவேண்டும். அதுதான் சரியான சுயராஜ்யம்" என்றார். "அப்படிச் செய்யமுடியுமா?" என்று ஒருவர் கேட்டார். உடனே சத்தியமூர்த்தி "ஏன் முடியாது? வெகு சுலபமாகச் செய்யலாம். அதைப்பற்றி

சந்தேகமே வேண்டாம். இப்போதைக்குநாமெல்லாரும்ஒரு முகமாகநின்று வெள்ளைக்காரன் கையிலுள்ள நம்முடைய சுதந்திரத்தைக் கைப்பற்றுவோம் பிறகு ஒரு முகூர்த்த காலத்துக்குள் நானே அதை நடத்திக் காட்டுகிறேன்" என்று கூசாமல் வஞ்சகம் இல்லாமல் வாக்களித்தார்.

இந்தப் பிரசாரத்துக்காகப் பிரயாணம் செய்த ஒரு நாள் நல்ல வெயில் வேளையில் ஒரு குக்கிராமத்தின் சமீபத்தில் சாலையோரத்தில் ஒரு ஆலமரத்தின் அடியில் இளநீர் விற்பதைக்கண்டு ஸ்ரீ சத்தியமூர்த்தி மோட்டாரை நிறுத்தச் சொல்லி இளநீர் சாப்பிட இறங்கினார் இளநீர்க் காரனிடம் சென்றார். எலும்பும் தோலுமாக உட்கார்ந்து கொண்டிருந்த இளநீர்க் கடைக்காரன் இவரைக் கண்டதும் கையிலிருந்த கொடுவாளைக் கீழே வைத்து விட்டுச் சுருட்டி வாரிக்கொண்டு கோவண உடையோடு எழுந்து நின்று கும்பிட்டான். துரும்பாக மெலிந்து துவண்டு வணங்கி, நிற்கக்கூடத் திராணியற்றவன் போன்ற அவனைப் பார்த்ததும் ஸ்ரீ சத்தியமூர்த்தி தமக்கிருந்த தாகத்தையும் மறந்துவிட்டு அவனைப்பற்றியும் அவனுடைய குடும்பத்தைப்பற்றியும் குசலம் விசாரிக்கப் புகுந்தார். அவனுக்கு நான்கு பெண் மக்கள் என்றும் ஆறு ஆண் மக்கள் என்றும், ஒரு சிறு தோட்டமும் அதில் இருபது தென்னைமரங்களும் நாலைந்து மாமரங்களும் அவனுக்குச் சொந்தமென்றும் தெரிய வந்தது. "நீ ஏன் இப்படி வாடி வதங்கி மெலிந்து போயிருக்கிறாய்? ஏதேனும் நோயுண்டா?" என்று சத்தியமூர்த்தி கேட்டார். அதற்கு அந்தக் குடியானவன் "எனக்கு ஒண்ணும் நோயில்லிங்க. நான் இருக்கிறதே இப்படித்தானுங்க" என்றான்.

இப்படி இவர்கள் பேசிக்கொண்டிருக்கும்போது அருகிலிருந்த ஒரு குடிசைக் குள்ளிருந்து, கந்தலாகக் கிழிந்த ஆடையுடன் இடுப்பில் ஒரு குழந்தையும் பின்னால் இரண்டு மூன்று சிறுவர்களுமாக சுமார் முப்பத்தைந்து

வயதுள்ள ஒரு பெண் வெளியில் வந்தாள். சத்தியமூர்த்தி யவர்களை ஏற இறங்கப் பார்த்தாள். அவர் பேச்சுக்களை யும் கொஞ்சம் கேட்டாள். மோட்டார் வண்டியைக் கவனித்தாள். திடுதிடு வென்று ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு முன்னால் ஓடி கையிலிருந்த குழந்தையை இறக்கிவிட்டு அவருடைய காலில் விழுந்துத் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்தாள்.

இதைக் கண்டதும் அந்த இளநீர்க்காரன் "சீ! கழுதே ஏண்டி அழுவுரே? ஒன்னை யாரிங்கே அழைச்சுது? போதும் எந்திரிச்சி உள்ளே போ" என்று அந்தப் பெண்ணை மிரட்டிவிட்டு சத்தியமூர்த்தியிடம் திரும்பி "அவ கெடக்கருங்க சாமி, அந்த அழுமூஞ்சி மூதேவி எப்பப் பாத்தாலும் இப்படித்தானுங்க பகு லண்டிங்க. என்னேரமும் ஊட்லே இந்த ரகளைதானுங்க" என்று என்னென்னமோ சொன்னான் அவன் பேசினதிலிருந்து அவள் அவனுடைய மனைவி என்பதை அனுமானிக்க முடிந்தது

காலில் விழுந்த அந்தப் பெண் சிறிது நேரத்துக்குள் எழுந்து நின்று தலைவிரி கோலமாக இரண்டு கைகளையும் ஏந்திக்கொண்டு "சாமீ! ஒங்களைப் பாததா சர்க்கார் மனுசர் மாதிரி இருக்குது. கொஞ்சம் புத்தி சொல்லிட்டுப் போங்கசாமி. என்னால் பொறுக்க முடியிலிங்கோ. நித்தம் அடியும் ஒதையும் குத்தும் சண்டையுமா யிருக்குது. தோட்டத்திலே வாறது, எளனி வித்து வாறது, என் கூலி அவன் கூலி, பசங்க ஏதாச்சி வேலை வெட்டி செஞ்சி சம்பாரிச்சா அது, எல்லாத்தையும் அடிச்சி புடுங்கிக் கொண்டுபோய் கள்ளுக்கடையிலே தொலைச்சிப்புட்டு எங்களைப் பட்டினிபோட்டுப் பளி கொடுக்கிறான் சாமி. கொஞ்சம் சொல்லுங்கசாமி. இனிமேல் என்னால் தாங்க முடியாது. கொளங் குட்டையைப் பாத்து உளுந்துட வேண்டியதுதான்." என்று ஓலமிட்டாள். இப்போது புரிந்தது எங்களுக்கு விஷயம்.

உடனே சத்தியமூர்த்தி ஒரு நிமிஷங்கூட யோசிக்காமல் "பயப்படாதே அம்மா, நாங்கள் அதற்காகத்தான் வந்திருக்கிறோம். இன்னும் கொஞ்ச நாள் பொறுத்துக் கொள்ளு—குளம் குட்டையில் விழுந்து விடாதே—இதோ காந்தி ராஜ்யம் வரப்போகுது. உன் புருஷன் இனிமேல் கள்ளைக் குடிக்க முடியாதபடி செய்து வைக்கிறோம். உன்னுடைய குழந்தைகளுக்கெல்லாம் சர்க்கார் செலவில் படிப்புச் சொல்லித்தர ஏற்பாடு செய்கிறோம். உன நிலத்துக்கு வரியைக் குறைக்கிறோம். உழவுக்கு மாடு கன்று வாங்க வட்டி யில்லாமல் கடன் கொடுக்கிறோம். நீ உன் குழந்தை குட்டிகளுடன் நல்ல சோறு உண்டு நல்ல புடவை உடுத்து சுபிக்ஷமாக இருக்கலாம். உன் புருஷனுக்குக்கூட நல்ல புஷ்டிதரக் கூடிய மருந்து கொடுத்து பலவானுக்கி அவன் இனிமேல் உன்னை அடித்து வைது ஹிம்சை செய்யாமல் உன்னோடு சந்தோஷமாக குடித்தனம் நடத்தும்படியாகச் செய்து வைக்கிறோம்" என்றார். உடனே அழுதுகொண்டிருந்த அவள் தன்னையறியாமல் சிரித்துவிட்டாள்.

"எத்தனை நாள் ஆகும் சாமி?" என்றாள்.

"வெகு சீக்கிரத்தில் செய்து வைக்கிறோம். நீ மட்டும் உனக்குத் தெரிந்தவர்களுக்கெல்லாம் சொல்லி மஞ்சள் பெட்டியில் ஓட் போடச் சொல்லு" என்றார்.

இளநீர் குடித்துவிட்டுப் பிரயாணதை மீண்டும் தொடங்கினோம். வழிநெடுக அரசியல் பேச்சுத்தான். எப்படி வரியைக் குறைப்பது, எப்படி ஒரு நல்ல அரசாங்கத்தை அமைப்பது என்பவற்றைப் பற்றிய சர்ச்சைகள்தான்.

பிரசாரத்துக்காகக் கூட்டப்படும் பொதுக் கூட்டங்களில் அங்கங்கே கூடுகின்ற ஜனங்களின் பக்குவத்திற்குத் தகுந்தபடி அப்போதைக்கு வேண்டிய விஷயங்களைப் பற்றித்தான் ஸ்ரீ சத்தியமூர்த்தி பேசுவார். என்றாலும், தனியே நம்முடன் பேசும் போதெல்லாம் அரசியல்

அமைப்புக்களைப்பற்றி அன்னிய நாடுகளில் நடந்துவரும் அனேக முறைகளைப்பற்றிய ஆராய்ச்சிகளில்தான் அவருடைய சம்பாஷணைகள் வட்டமிடும்.

எனவே ஸ்ரீ சத்தியமூர்த்தியின் வாழ்க்கையில் அவருடைய செயல்களிலும் சொல்லிலும் சிந்தனையிலும் மற்ற விசாரங்களைக் காட்டிலும் அரசியல் கவலைகளே அதிகமாக ஆட்சிகொண்டிருந்தன.

அரசியல் வாதியாக இருப்பதைப்போன்ற அலுப்புத் தரக்கூடிய வேலை வேறு எதுவும் இல்லையென்பது உலகப் பிரசித்தம். எவ்வளவு அறிவாளியாக இருந்தாலும் எவ்வளவு உழைப்பாளியாக இருந்தாலும் எவ்வளவு நுணுக்கமாக அரசியல் சட்டதிட்டங்களை ஆய்ந்து அளந்து அமைததுத் தரக்கூடிய ஆற்றலுள்ளவராக இருந்தாலும் வெறும் அரசியல் வாதிகளுக்கு உலகம் போதிய அளவு நன்றி செலுத்துவதில்லை. நல்ல அரசியல் அமைப்புக்களையும் ஆட்சி முறைகளையும் சிந்தனை செய்து திட்டப்படுத்துவது எளிதான காரியம் அன்று. ஒரு கோயில் கட்டிவைத்துப்போன மன்னனைக் குலதெய்வம் போலக் கும்பிடுவாருண்டு. ஒரு குளம் வெட்டி வைத்த சீமானை அடிக்கடி சிறப்பித்துப் பேசுவாருண்டு. ஆனல் மிகவும் பயன்படக்கூடிய விதத்தில் நீதி செலுத்திய அரசனையோ அவனுடைய அரசியல் திறமையையோ ஜனங்கள் அடிக்கடி நினைப்பதில்லை.

ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்கள் ஓரே ஒரு வருஷம் சென்னையின் மேயராக இருந்து பூண்டி நீர்த்தேக்கத் திட்டத்தை நிறைவேற்றி வைத்த சேவையை மக்கள் எளிதில் மறக்கமாட்டார்கள். ஆனல் அவர் ஆயுள்முழுதும் அல்லும் பகலும் அயர்வில்லாது எண்ணியெண்ணித் திட்டம் பேசிய அரசியல் வாதங்களை மெச்சிப் பேசுவோர் மிகவும் சிலராகவே இருப்பர். ஏனெனில் மனிதன் முயலும் எல்லாத் துறைகளிலும் அரசியல் துறையைப்போல் அவ்வளவு ஏமாற்றம் தரக்கூடிய இடம் வேறு எதுவும்

இல்லை. இது உலகத்திலுள்ள எல்லா அரசியல் வாதிகளுக்கும் பொதுவான விதி. அரசியலில் ஈடுபட்ட சில பேரை ஜனங்கள் அடிக்கடி நினைத்துப் பாராட்டி வந்திக்கலாம். ஆனால் அது அவர்களுக்கிருந்த வேறு சிறப்புகளுக்காகவே யல்லாமல் அரசியல்வாதி என்பதற்காக அல்ல.

மனிதவர்க்கம் கற்றுக்கொண்டிருக்கிற அநேக வித்தைகளுக்குள் இந்த அரசியல் கலைதான் நம்முடைய கட்டுக்குள் அகப்படாததாகத் தோன்றுகின்றது. "மனிதனுக்கு மனிதன் சட்டதிட்டங்களை ஏற்படுத்தி சச்சரவில்லாத சமுதாயத்தை உண்டாக்கி ஆட்சி நடத்துவதுதான் மிகவும் கஷ்டமான வேலை" என்று ஒரு ஆங்கிலேய அறிஞர் சொல்லுகின்றார்.

மானிட ஜாதி தோன்றிய நாள் தொடங்கி, மனிதனிக்கு மனிதன் மாச்சரியங்கள் இல்லாமல், கூடுமானவரையிலும் எல்லா விதத்திலும் விரும்பத்தக்கதான முறையில் குற்றங்கள் மிகவும் குறைவாக உள்ள ஒரு அரசாங்க முறை இதுவரையிலும் எந்த நாட்டிலும் ஏற்பட்டதாகத் தெரியவில்லை. இப்போதுள்ள எல்லா அரசாட்சி முறைகளும் குறைபாடுள்ளனவாகவே இருக்கின்றன. ஒரு விதத்தில் மிகவும் நல்லதாக இருக்கிற ஒரு அரசியல் முறை வேறு பலவிதங்களில் தீமை விளைக்கக்கூடியதாக இருக்கிறது. பல விதங்களில் நன்மை பயப்பதாக இருக்கும் ஒரு அரசியல் முறை வேறு ஒரே வழியில் அந்த நன்மைகள் அனைத்தையும் அடித்துவிடக்கூடிய தீமையுள்ளதாக இருக்கிறது. நமது நாட்டுப் புராணங்களிலும் கர்ண பரம்பரையான கதைகளிலும், எல்லா விதங்களிலும் மக்களுக்கு ஹிதமான செங்கோல் அரசாட்சி இருந்து வந்ததாகச் சொல்லப்படுகின்றது. அப்படிப்பட்ட செங்கோல் ஆட்சிகளைப் பற்றிய புகழுரைகள் தமிழ் இலக்கியங்களில் எத்தனையோ இருக்கின்றன. அந்த அரசியல் முறைகள் எப்படிப்பட்டவை, அவற்றில் என்னென்ன

சட்டதிட்டங்கள் இருந்தன என்பவற்றை அறியக் கூடிய ஆதாரங்கள் ஒன்றுமில்லை.

ஆனால் மனிதனுக்கு மனிதன் மனஸ்தாபமே இல்லாத சுபிக்ஷமான அரசாட்சி நடந்ததாகமட்டும் சொல்லப்படுகின்றது இதற்குச் சாட்சியாக எண்ணிறந்த பாடல்களை எடுத்துக்காட்டலாம். மாதிரிக்காக இரண்டொரு பாட்டுக்களை மட்டும் இங்கே குறிப்பிடுவது மிகையாகாது.

நளன் கதையை வெண்பாக்களால் பாடிய புகழேந்திப் புலவர், நளனுடைய ஆட்சியின் சிறப்பைச் சொல்லும் போது—

> **சீத மதிக்குடைக்கீழ் செம்மை அறங்கிடப்பத்**
> **தாதவிழ்பூந் தாரான் தனிக்காத்தான்—மாதர்**
> **அருகூட்டும் பைங்கிளியும் ஆடற் பருந்தும்**
> **ஒரு கூட்டில் வாழ உலகு.**

அதாவது 'குளிர்ச்சியான தன்னுடைய ஆட்சியின் கீழ் அறங்களெல்லாம் குறைவின்றி நடந்துவர வெற்றிமாலை அணிந்த அந்த அரசன் (நளன்) ஒப்பற்ற முறையில் குடிகளைக் காத்து வந்தான். அதனால் வீடுகளில் பெண் மணிகள் வளர்க்கும் கிளியும் அந்தக் கிளி இனத்துக்கே இயற்கையான விரோதியாக வேட்டையாடும் பருந்தும் ஒரே கூட்டில் சேர்ந்து வாழும்படியான சமாதானம் அந்நாட்டில் நிலவியிருந்தது.'

அறிவிற்குறைந்த பறவைகளும்கூடத் தங்களுக்கு இயற்கையாக உள்ள மாச்சரியத்தை மறந்துவிடும்படியான தர்மநெறியில் நளன் அரசாண்டான் என்றால் மனிதர்கள் எவ்வளவு மருவிக்கலந்து வாழ்ந்திருப்பார்கள் என்பது சொல்லாமலே சொல்லப்படுகின்றது.

கவிச்சக்ரவர்த்தியான கம்பர் அயோத்தியில் தசரதன் நடத்திய ஆட்சி முறையைப் பற்றியும் அறநெறி வழுவாத அந்நாட்டு மக்களின் பண்பைப்பற்றியும் அநேக பாடல்களால் வெகு அழகாகச் சொல்லுகிறார். அந்தப் பாட்டுக்

களைக் கொண்டே ஒரு நல்ல அரசாட்சியின் அடையாளங்கள் இன்னின்னவென்று தீர்மானித்து விடலாம். அப்பாட்டுக்களிலுள்ள கருத்துக்கள் எக்காலத்துக்கும் உதவக்கூடியனவாக இருக்கின்றன. அந்தப் பாட்டுக்கள் பலவற்றுள் பண்டிதர்கள் அடிக்கடி சொல்லாத ஒரே ஒரு பாட்டை மட்டும் இங்கே குறிப்பிடுகின்றேன் அயோத்தியில்

> **அணியிழை மகளிரும் அலங்கல் வீரரும்**
> **தணிவன அறநெறி தணிவி லாதன**
> **மணியினும் பொன்னினும் வளைந்த அல்லது**
> **பணிபிறிது இயன்றன பாங்கும் இல்லையே.**

அதாவது: ‘அந்த நாட்டில் உள்ள ஆபரணங்களை அணிந்த பெண்களும் மாலை தரித்த ஆண்களும் தர்மங்களுக்குத் தலை வணங்குவார்களே யல்லாமல் மற்றெதற்கும் வணங்கமாட்டார்கள். மேலும் அவர்கள்மேல் பூட்டப்பட்டுள்ள ஆபரணங்கள் (பணிகள்) உயர்ந்த ரகமான நவரத்தினங்களாலும் பொன்னாலும் செய்யப்பட்டனவாக இருக்கும் அப்படிப்பட்ட விலையுயர்ந்த ஆபரணங்களை அதிகமாக அணிந்திருப்பதால் அந்தப் பாரத்தினால் உடல் வணங்க நேர்ந்தால் நேரலாமே ஒழிய மற்ற விதத்தில் அவர்கள் எவருக்கும் உடல் வணங்கிப் பணியும் படியான அகத்தியம் இல்லை அப்படிப் பணியும்படியாக விலங்குகள் பூட்டப்பட்ட மனிதர்களை அங்கே எங்கும் பார்க்க முடியாது. அந்த நாட்டுப் பெண்களும் ஆண்களும் தர்மத்துக்குத்தான் பணிவார்கள். அல்லது ஆபரணங்களின் பளுவினால் உடல் வணங்க நேரிடலாம். மற்றப்படி அடிமைகளாகவோ குற்றவாளிகளாகவோ விலங்கிடப்பட்டு பணிய வேண்டிய நிலையிலுள்ள மக்களை அங்கே பார்க்க முடியாது, “அடிமைக்குத் தளையில்லை ஆரும் அங்கெ அடிமையில்லை” என்று பாரதியார் பாடின கருத்தை கம்பர் சொல்லியிருக்கிறார்.

அச்சமும, அடிமைத்தனமும், குற்றவாளிகளும், விலங்கிடும் வழக்கமும் இல்லாமல் அறங்களை மதித்தே அவரவர் வாழ்க்கையை அவரவர் சுதந்திரமாக நடத்தினர்கள் என்று சொல்லக்கூடிய சமுதாயமும் அரசாட்சியும் அமைந்த நாடு இந்தக் கவிகளின் கற்பனைகளில்தான் காண்கின்றேமே யல்லாமல் நடை முறையில் எந்த நாட்டிலும் இருந்திருப்பதாகச் சரித்திரத்தில் காணேம்

கண்ணை மயக்கும் கானல் நீர்போல் அறிவை மயக்கும் இந்த அரசியல் துறையில் முழுகிக்கிடந்த நமது சீத்தியமூர்த்தியவர்களும் அநேக ஏமாற்றங்களுக்கு ஆளானதில் அதிசயம் இல்லை.

காந்தி யடிகளின் தலைமையை ஒத்துக்கொண்ட காங்கிரஸ் தீர்மானங்களுக்குச் சிறிதும் துரோகம் செய்யாமல் ஸ்ரீ சத்தியமூர்த்தி உழைத்தார்; என்றுலும் அவர் காந்திய வாதியல்ல. சத்தியமூர்த்தி அரசியல் விவகாரங்களை வெறும் அரசியல் பேச்சுக்களாகவே கருதினவர். காந்தீயம் வெறும் அரசியல் மட்டும் அல்ல. அரசியலோடு ஆன்ம உணர்ச்சிகளும் சேர்ந்தது காந்தீயம். அரசியல் விஷயங்களில் ஆன்மீக தத்துவஙகளைக் கலப்பது சரியல்லவென்று நம்பினவர் ஸ்ரீ சத்தியமூர்த்தி. ஆன்மீக உணர்ச்சிகள் சேராத எந்த வேலையும் பசையற்ற பாலைவனம் என்பது காந்தியத்தின் நம்பிக்கை.

ஆன்மீகக் கொள்கைகளை அரசியலில் கலக்கக் கூடாது என்பதை நம்பினவராலும் ஸ்ரீ சத்தியமூர்த்தியவர்கள் தெய்வ பயம் உள்ளவரானதால் காந்தியடிகளின் மிக உன்னதமான தெய்வீக நம்பிக்கைகளை எளிதில் புறக்கணித்துவிட முடியாமல் புழுங்கிக்கொண்டிருப்பார். இந்த இரண்டுவித எண்ணங்களுக்கும் இடையே இருந்து கொண்டு.அடிக்கடி ஸ்ரீ சத்தியமூர்ததியின் உள்ளம் ஊசலாடுவதை நான் நேரில் உணர்ந்திருக்கிறேன்.

ஸ்ரீ சத்தியமூர்த்தியை ஒரு அஞ்சாத நெஞ்சம்

படைத்த தீரன் என்றே சொல்லவேண்டும். காந்தியடிகளின் கருத்துக்கும் தம்முடைய கருத்துக்கும் உள்ள வேறுபாட்டை மிகவும் தைரியத்துடன் பித்தலாட்டப் பேச்சில்லாமல் வெளியிட்டு விவாதித்த வெகு சில தலைவர்களுக்குள் சத்தியமூர்த்தியும் ஒருவர். பெரும்பாலும் காங்கிரஸ் வாதிகள் காந்திஜியின் கொள்கைகளை மூனை முறியாமல் அப்படியே பின்பற்றி நடப்பவர்களைப் போலப் பாசாங்கு செய்தார்களே யல்லாமல், உண்மையில் அப்படி நடந்துகொள்ளவில்லை. ஆனால் சத்தியமூர்த்தியோ காந்தியடிகளுடன் அடிக்கடி முரண்பட்டு, அந்த முரண்பாட்டைப் பகிரங்கமாகப் பிரசாரம் செய்தாலும் கூட காங்கிரஸ் விஷயங்களில் காந்தியடிகள் கிழித்த கோட்டைத் தாண்டினவர் அல்ல. உண்மையில் காந்தீயத்தின் பரம பக்தர்களாகப் பாவனை செய்த பலபேரைக் காட்டிலும் சத்தியமூர்த்தி சிறந்த காந்தீய வாதியாகவே விளங்கினர். ஆரம்ப காலத்தில் அவர் காந்தீயத்துக்கு மாறுபட்டுப் பேசின பேச்சுக்களின் தீவிரம் நாளுக்கு நாள் குறைந்து விட்டதென்றே கூறலாம். கடைசியாக அவர் பேசின பேச்சு ஒன்றில் "தபஸ்விகளைப் பற்றியும் மகரிஷிகளைப் பறறியும் நான புத்தகங்களில் படித்ததுண்டு. அவர்களுடைய கதைகளைப் பற்றி நான் ஆச்சரியப்பட்டதும் உண்டு. மகாத்மா காந்தியடிகளின் அபூர்வ முயற்சிகளை நேரில் கண்ட பிறகுதான் இந்த தேசத்தில் மகரிஷிகள் இருந்ததும் வாழ்ந்ததும் உபதேசித்ததும் எல்லாம் உண்மைதான் என்று நம்பலானேன்" என்று சொன்னதை நான் கேட்டிருக்கிறேன். ஆதலால் ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு காந்தியிடத்தில் அபார பக்தியும் நம்பிக்கையும் உண்டு. ஆனால் ஐரோப்பிய நாடுகளின் அரசியல் இலக்கியங்களிலும் 'பார்லிமெண்டரி' ராஜ தந்திர முறைகளிலும் அதிகமாக ஊறிவிட்ட அவருடைய எண்ணங்கள் காந்தீயத்தைப்பற்றி அவரிடத்தில் ஒரு குழப்பத்தை உண்டுபண்ணி விட்டது குற்றமாகாது.

ஸ்ரீ சத்தியமூர்த்தி யவர்கள் மிகுந்த தன்னம்பிக்கை யுள்ள தலைவர். பிறருடைய தூற்றல் போற்றல்களால் மருண்டோ மயங்கியோ போகமாட்டார் அவருடைய பிரசங்கத் திறமை மிக உயர்ந்த தினுசான 'ஆரேடரி' இனத்தைச் சேர்ந்தது. ஒப்பற்ற உழைப்பாளி. எவ்வளவு வேணுமானாலும் பாடுபடுவார். ஆனால் முழுமனதுடன் தான்பட்ட பாட்டிற்குப் பலன்களைக் கணக்குப் பார்ப்பார். வெறும் நிஷ்காம கர்மத்தில் அவருக்கு விருப்பமில்லை என்று கூசாமற் சொல்லிவிடலாம்.

"எல்லாரும இன்புற்று இருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்று அறியேன் பராபரமே"

என்றதைப்போலத் தாமும் தம்முடன் உழைப்பவர்களும் உடனுக்குடன் அந்த உழைப்பின் பலனை அடைந்து இன்பப்படுவதைப் பார்க்க வேண்டுமென்று துடிப்பார்.

கள்ளுக்கடை மறியல் காலத்தில் நாமக்கல்லில் சுமார் 250 தொண்டர்கள் வெகு கட்டுப்பாடாக வேலை செய்தோம். தமிழ் நாட்டில் மிகவும் உயர்ந்த முறையில் மறியல் வேலை செய்த தொண்டர் கூட்டத்தில் நாமக்கல் தொண்டர்படை மிகவும் புகழடைந்தது. அந்தச் சமயத்தில் நாமக்கல்லுக்கு ஒரு மகாநாட்டிற்குக் கொடியேற்று விழாவை நடத்த வந்திருந்த ஸ்ரீ சத்தியமூர்த்தி, அந்தத் தொண்டர் படையைப் பார்வையிட்டு அவர்களைப் பாராட்டினார். கடைசியாக "இவ்வளவு அருமையான சேவைகளைச் செய்திருக்கும் நீங்கள் பட்டிருக்கும் பாடுகளுக்கெல்லாம் வெகு சீக்கிரத்தில் பலன கிடைக்கப் போவது நிச்சயம். இன்னும் கொஞ்ச காலததில் நம்முடைய நாட்டை நாமே ஆளப்போகிறோம். அந்தச் சமயத்தில் சுயராஜ்யத்தை இவ்வளவு சீக்கிரத்தில் சித்திக்கச் செய்த உங்களுக்குத்தான் நான் அக்ர தாம்பூலம் கொடுத்து மாலை சூட்டி மகிழப் போகின்றேன். இங்குள்ள தொண்டர்களின் பெயர்களை யெல்லாம்

பத்திரமாகப் பதிவு செய்து வைத்திருக்கச் செய்து நமக்கு அதிகாரம் வந்தவுடன் முதலில் உங்களுக்குத்தான் உத்யோகங்களைக் கொடுத்து நீங்களும் உங்கள் மனைவி மக்களும் சந்தோஷமாக ஜீவனம செய்யும்படியான ஏற்பாடுகளை நான் செய்யப் போகிறேன். இது வெறும் உபசார வார்த்தையல்ல, சத்தியம்" என்று சத்தியமூர்த்தி சொன்னதை இன்றைக்கும் நாமக்கல் தொண்டர்கள் சொல்லிக்கொண்டிருக்கிறார்கள்.

பலாபலன்களை அதிசீக்கிரத்தில் அடைய வேண்டும் என்ற ஆசையைப பகிரங்கமாகச் சொல்லிக்கொண்டே தான் ஸ்ரீ சத்தியமூர்த்தி எந்த வேலையிலும் இறங்குவார். ஆனால் ஏற்றுக்கொண்ட காரியத்தில் கண்ணுங் கருத்துமாக ஓய்வு ஒழிவின்றிக் கொஞ்சங்கூட மனச்சோர்வு இல்லாமல் உழைப்பார்.

சட்டசபைத் தேர்தல்களில் தமிழ் நாட்டில் காங்கிரசுக்கு அமோகமான வெற்றி கிடைத்தற்குக் காரணம் அவருடைய உழைப்புத்தான் என்று உறுதியாகச் சொல்லலாம்.

ஒரு குறிப்பிட்ட காரியத்துக்காக எவ்வளவு வேணுமானாலும் தியாகம் செய்யத் தயங்கமாட்டார். சட்டசபை தேர்தலில் தாம் நின்றிருக்க வேண்டிய ஸ்தானத்தை ஸ்ரீ ராஜகோபாலாச்சாரியவர்களுக்கு விட்டுவிட்டது அவருடைய தியாக உணர்ச்சிக்கும் அரசியல் தீர்க்க தரிசனத்துக்கும் அடையாளம் என்றால் அது மிகையாகாது.

காந்தியக் கொள்கையில் ஸ்ரீ சத்தியமூர்த்தியின் சொந்த அபிப்பிராயங்கள் எதுவாக இருந்தாலும் காந்தியடிகளின் தலைமையை முழு மனதுடன் ஒப்புக்கொண்டு காங்கிரசின் கட்டுதிட்டங்களை ஒரு சிறிதும் கடக்காமல் ஸ்ரீ சத்தியமூர்த்தி இந்த நாட்டிற்குச் செய்திருக்கும் அருமபெரும சேவைகளை பொன் எழுத்துக்களில் பொறித்துப் போற்றவேண்டும்.

இந்தப் புத்தகத்தில் அடங்கியுள்ள அவருடைய பேச்சுக்கள் அவர் செய்த எண்ணிறந்த பிரசங்கங்களின் ஒரு சிறு பகுதியே ஆகும். ஒவ்வொரு பிரசங்கமும் ஆணித்தரமான அபிப்பிராயங்கள் அடங்கினது. மறுக்க முடியாத தர்க்க நியாயங்கள் நிறைந்தது. காந்தீயத் துக்கும் வெறும் அரசியல் வாதத்துக்கும் இடையே அவர் மனத்தில் இருந்த குழப்பங்கள் எதையும் இந்தப் பேச்சுக் களில் காண முடியாது. தமக்குள்ள ஐயம் திரிபுகளை யெல்லாம் அடக்கிக்கொண்டு, நிச்சயமாக நிர்த்தாரணம் செய்யக்கூடிய விஷயங்களை மட்டுந்தான் ஸ்ரீ சத்திய மூர்த்தி தம்முடைய பிரசங்கங்களில் பேசுவார் என்ப தற்கு இந்தப் புத்தகமே சாட்சி.

மிகச் சிறந்த சட்டசபை நிபுணரும் ஜனநாயக வாதியும் உண்மையான தேசபக்தியும் ஓயாத உழைப்பும் அபூர்வ ஆற்றல்களும் உடையவருமான இந்தத் தலைவர் தமது ஐம்பத்தேழாவது பிராயத்திலேயே இறந்துபோக நேரிட்டது தமிழ் நாட்டின் துர்பாக்கியம்தான். அவருடைய பூத உடல் மறைந்து போனாலும் அவருடைய புகழுடம்பு பல இடங்களில் பலவிதமாக சிறப்பிக்கப்பட்டு நம் முடைய சுதந்திரப் போராட்டத்தின் சரித்திரம் உள்ள வரையில் ஒளியுடன் விளங்கும். அந்தப் பலவிதங்களில் இந்தப் புத்தகமும் ஒரு விதம்.

**வெ. இராமலிங்கன்**

# சத்தியமூர்த்தி பேசுகிறார்

[" பம்பாய் நேஷனல் கிராமபோன் ரெக்காடு மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட் " ரெக்காடில் பேசியது ]

மகாத்மா காந்தியின் உயர்ந்த தலைமையின் கீழ் இந்தியா அஹிம்ஸை முறையில் பூர்ண சுயராஜ்யம் அடையக் கங்கணம் கட்டிக் கொண்டிருக்கின்றது. சிலபோது இவ்வழியால் ஜெயமும் அடைந்திருக்கின்றது. ஆண்டவன் கிருபையால் இவ்வழியின் மூலமாக இந்தியா பூர்ண சுயராஜ்யம் அடைந்து விட்டால் அதுவே உலகத்திற்கு ஒரு வழி காட்டியாக இருக்கும சிறப்பாக அஹிம்ஸையில் நம்பிக்கையுள்ள தேசங்களுக்கும் மக்களுக்கும். இப்போது யுத்த சன்னத்தங்கள் செய்வதில் ஈடுபட்டிருக்கும் மக்களுக்கு இது கேவலம் சொப்பனமாகத் தோன்றலாம். ஆனால் சற்று விவாதித்தால் ஹிம்ஸையின் முடிவு மனிதவர்க்கத்தின் அழிவு என்றும், மனிதவர்க்கம் வாழவேண்டும் என்றால் அஹிம்ஸை தான் வழி யென்றும் புலப்படும். ஹிம்ஸையின் மூலமாக மனித வர்க்கத்திற்கு க்ஷேமம் ஏற்பட வில்லை. எந்த விவாதமும் சண்டையினால் தீர்க்கப்படுவதில்லை. தீர்க்கவும் முடியாது ஹிம்ஸை யுத்தத்தில் ஜெயிப்பவர் தோற்பவர் கிடையாது. அஹிம்ஸை யுத்தத்திலும் அப்படித்தான். ஆனால் மிகவும் வித்யாசமான அர்த்தத்தில் இதை யெல்லாம் ஒப்புக்கொண்டபோதிலும் "அஹிம்ஸை சாத்யமா இந்நாள்" என்று அனேகர் வினவலாம். நான் அதற்குப் பதிலாக வஸிஷ்டமகரிஷியையும் மகாத்மா காந்தியையும் தான் சொல்ல முடியும். இது வரையில் உலக விஷயங்களில் அஹிம்ஸை ஜெயிக்க வில்லை என்றால் அதை யாரும் பிரயோகிக்கவில்லை. மேலும் மனித சரித்திரம் இன்னும்

முடியவில்லை உலக சமாதான சங்கம் வாயளவு ஒப்புக் கொண்டு செய்கையில் காட்டாமல் வைத்திருந்த பொதுக் கட்டுப்பாட்டுக் கொள்கையை மறுபடியும் முக்ய தேசங்கள், ஹிம்ஸையை ஒழித்து சமாதானமான பொருளாதார மனித வழிகளில் அவலம்பனம செய்வார்களேயானால் அஹிம்ஸை வழியில் மனித வர்க்கம் வெகு தூரம் முன்னால் செல்லுமென்று நான் நிச்சயமாய் நம்புகிறேன். எப்படியும் இந்தக் காரியத்தைச் செய்து தான் பார்க்க வேண்டும். அஹிம்ஸை இருதிறத்தாரையும காபபாற்றும். ஜெயிக்கின்றவர்களையும தோற்கின்றவர்களையும இரு திறத்தாரையும் பெரிய மனிதர்களாக ஆக்கும். அஹிம்ஸை மூலமாக மனிதர் தங்கள் உயர்ச்சிக்கு ஈஸ்வராம்சமாகச் செய்துகொள்ள முடியும. மனித வர்க்கத்திற்கு இந்நாள் இதைக் காட்டிலும் உயர்ந்த லட்சியம் எதுவும் இல்லை

எப்போதும் மனித வர்க்கம் சஞ்சலத்திற்குட்பட்டு எங்கே போவதென்று தெரியாமல் தத்தளிக்கின்றது. சுமார் 2000 வருஷம் கிருஸ்தவர் அல்லது ஐரோப்பியர் அல்லது மேனாட்டு நாகரிகத்தின் பலனாக மனிதனுக்கு எப்படி வாழ்வதென்று தெரியவில்லை ஆனால் ஒருவரை ஒருவர் கொல்லவும் கொல்லப்படவும் தான் கற்றுக்கொண்டிருக்கின்றார்கள். மனித சமூகத்தின் எதிர் கால வாழ்க்கை என்ன ? இப்போதிருக்கும் சூசகங்களைப் பார்ப்போமேயானால் பிரளயம் போல் வரும் அடுத்த மகா யுத்தத்தில் மனித வர்க்கம் அநேகமாக அழிந்து மறுபடியும் ஆயிரக்கணக்கான வருஷங்களுக்கு முன்பு நமது மூதாதைகள் ஆரம்பித்த இடத்திற்கே இழுக்கும் என்று தான் தெரிகின்றது. இது மிகவும் பயங்கரமான எதிர்காலந்தான். இப்போது ஐரோப்பாவிலும், ஜப்பானிலும், அமெரிக்காவிலும் உள்ள ஸ்திதியைப் பார்த்தால் போதும். நம் மக்களுக்கு உலக சர்வதேச விஷயங்கள் நன்றாகத் தெரியாததால் இப்பொழுது உலகத்தில் ஜனநாயக ஆட்சிக்கும் எதேச்சாதிகாரத்திற்கும் சண்டை

என்று தான் ஒருவாறு நம்புகின்றோம். இது உண்மையானால் ஜன நாயகத்திற்கு சாதகமாகவும், எதேச்சாதிகாரத்திற்கு விரோதமாகவும் இந்தியா நிற்கும் என்பதில் சந்தேக மில்லை. ஆனால் இது உண்மையா? சந்தேகமாக இருக்கின்றது. ஜனநாயக ஆட்சிக்கு முன்னணியில் நிற்கும் இங்கிலாந்து பிரான்ஸ் தேசங்கள் பல ஜனங்களின் இஷ்டத்திற்கு விரோதமாக அவர்களைத் தங்கள் ஏகாதிபத்யத்தில் வைத்து ஆண்டு வருகின்றன. இது ஜனநாயக முறை அல்ல. அமெரிக்காதேசம்கூட ஜனநாயக விஷயத்தில் இன்னும் பள்ளியில் தான இருக்கின்றது. மேலும் ஹிட்லரும் முஸலோனியும் வர்சேல்ஸ் அக்ரம உடன்படிக்கையின் நேரான பிரதி பலன்கள். ஆதலால் இந்தியா சுயேச்சையுடன் வாழ்ந்தால்தான் இந்த விஷயத்தில் கலந்து கொள்ள முடியும். இந்தியா இப்பொழுது சுயேச்சையாக வாழவில்லை. ஜனநாயக ஆட்சி இருக்கவேண்டுமென்று இங்கிலாந்து இஷ்டப்பட்டால் தன் ஏகாதிபத்தியத்தைக் கலைத்து விடவேண்டும். சுயேச்சை இந்தியா, வேறு எந்த தேசமும் செய்யமுடியாத வழியில் கஷ்டப்படும் உலகத்திற்கு சாஸ்வத சமாதான வழியை உபதேசிக்க முடியும. இந்தியாவின் சுயமரியாதைக்கு மாத்திரமல்ல, உலக சமாதானத்திற்கும் இந்தியாவின் சுயேச்சை அத்யாவசியம்.

# சுதந்திர தாகம்

## புதுக்கோட்டை சமஸ்தான மக்களின் இரண்டாவது மகாநாட்டுத் தலைமை உரை. (12-11-1920)

**தா**யும் தாய்நாடும் மோட்ச லோகத்தைவிடப் பெரிதாகக் கருதப்பட வேண்டியவை திருமயத்தில் தான் முதன் முதலாய் நான் சூரிய ஒளி கண்டேன். ஆகையால் நான் எந்த ஊரிலும் எங்கு திரிந் தாலும் இச் சமஸ்தானத்தின் ஞாபகந்தான் எனக் கெப்போதுமிருப்பது வழக்கம். தூர இடங்களில் சென்று உயிர் வாழும்படியான விதி எனக்கேற்பட்டு விட்டது. பொதுக்கூட்டங்களில் பேசியபோது ஜனங்களின் உக்கிர மான சோதனைக்கும் அனுவசியமான விளம்பரத்துக்கும் ஆளாகும்படியாய் விட்டது விளம்பரமானவர்களின் வாழ்க்கை எப்போதும் இனிமையாயிராதென்பது உங்க ளுக்குத் தெரிந்திருக்கும். ஸ்காட்லாந்திலும், இங்கிலாந் திலும், அயர்லாந்திலும், நமது காங்கிரஸ் மகாசபை யிலும், பதினாயிரக் கணக்கான ஜனங்களின் முன்னிலை யில் நான் பேசியிருக்கிறேனாயினும், இந்தியா மந்திரியைக் கூட நான் கண்டு பேசியிருக்கிறேனாயினும், இன்றையக் கூட்டத்தில் பேசும் பாக்கியத்தையே நான் உண்மையில் பெரிதாகக் கருதுகிறேன். எனது புதுக்கோட்டை நண் பர்களுக்கு எப்போதும் என்னிடத்தில் அன்பு உண்டென் பதை நான் நன்றாய் அறிவேன். இங்கிலாந்திலிருந்து நான் திரும்பியபின் என்னை நீங்கள் வரவேற்ற வைபவத்தை நான் ஒருக்காலும் மறக்கமாட்டேன். அன்று நீங்கள் காண்பித்த அன்புக்கு, இவ்வக்கிராசனப் பதவியிலிருந்து நான் செய்யக்கூடியபிரதியுபகாரம் பெரிதல்லவாயினும், அதைக் கருணையுடன் நீங்கள் ஏற்றுக்கொள்ளும்படி நான் வணக்கமாய் கேட்டுக்கொள்ளுகிறேன்.

என் பெற்றோர்களைப் பற்றிச் சில வார்த்தைகள் சொல்வது இச சந்தர்ப்பததில் பொருத்தமற்றதா யிருக்க லாம. ஆனால் என் நண்பர்களுக்குச் சொல்லாமல் எதை யும நான மறைத்து வைக்க இஷ்டப்படவில்லை. என் தகப்பனார் இச் சமஸ்தானத்தில் வக்கீல் தொழில் செய்து வந்தார். அக்காலத்தில் ஆங்கிலம் தெரியாத வக்கீல் மார்களில் அவரும் ஒருவர். ஆனால் சம்பாத்தியததில் மற்றவர்களுக்கு அவர் பிந்தியவரல்லர் சம்ஸ்கிருதத்தில் அவருக்கு விசேஷ பாண்டித்யமுண்டு. மற்றவர்களுக்கும் அதைச சொல்லிக் கொடுப்பதுண்டு. எனது ஒன்பதாம் ஆண்டிலேயே அவர் பரகதி யடைந்தாராயினுமீ, அவ ருடைய ராமாயண பாரதப் பிரசங்கங்கள் எனக்கு இன் றைக்கும ஞாபகமிருக்கின்றன திரளான ஜனங்கள் அவ் வுபந்யாசங்களைக் கேட்டுச செல்வது வழக்கம். பேச்சு வன்மை யென்பது எனக்கு எள்ளளவேனும் இருக்குமானால் அவரே அதற்குக் காரணம் என்பது எனக்குச் செம்மையாகத் தெரியும். புதுக்கோட்டையிலே தான் என் தகப்பனார் இறந்துபோனார். என் தாயாருக்கு அச்சமயம் வயது 32, குடும்பமோ பெரிது; சொத்தோ மிகவும் சொற்பம். உறவினர்களின் ஒத்தாசையைப் பற்றிக் கேட்கவேண்டியதில்லை. இத்தனைக்கும் ஈடு கொடுத்துக்கொண்டு என் தாயார் தம் புத்திரர்களுக்குச் சாத்தியமான கல்வியைப் போதிக்க ஏற்பாடு செய்தார். என் அம்மையின் தியாகத்தை நினைக்கும்போதெல்லாம் என் மனம் புதைக்கிறது. என் தாயில்லாவிடில் நான் ஒருக்காலும் முன்னுக்கு வந்திருக்க முடியாது. தற் போதுள்ள எனது சொற்ப அந்தஸதுக்கு என் தாயே காரணமென்று நான் ஸத்தியமாய்ச் சொல்வேன். ஆகை யால் நண்பர்களே! நான் இங்கு வரும்போதெல்லாம் எனமனம் எப்படித துடிக்குமென்று நான் சொல்லத் தேவையில்லை.

இம்மாதிரியான மகாநாடுகளைக் கூட்டுவதினால் பிரயோசன மென்ன வென்று சிலர் கேட்கலாம். இத்தனை பேர்கள் இங்கே கூடியிருப்பதிலிருந்தே இம்மகாநாட்டினால் பிரயோசன முண்டென்பதை நீங்கள் நன்கறிந்திருக்கிறீர்க ளென்பது தெரிகிறது. இன்று உங்களைப் பற்றி அலட்சியமாய்ச் சிலர் நினைத்தபோதிலும், இன்றைக்குச் சிலபேர்கள் உங்களைக் கேலிசெய்யக் கூடுமாயினும், நீங்கள் கொஞ்சங்கூட அதைரியப்படாதீர்கள. இதைவிட நெருக்கடியான காலங்களையும் நீங்கள் சமாளிக்க வேண்டி யிருக்கும். திருஷ்டாந்தமாய் காங்கிரஸ் மகா சபையின் சரித்திரத்தைப் பாருங்கள். அதை ஆரம்பத்தில் பலர் கேலி செய்யத்தான் செய்தார்கள். உத்தியோகஸ்தர்களின் வெறுப்புக்குப் பலர் பாத்திரரானார்கள். உளளுக்குள்ளேயே பல சச்சரவுகள் ஏற்பட்டன இத்தனையும் தாண்டிக்கொண்டு இப்பாரத நாட்டின் ஒப்புயர்வற்ற ஜனப்பிரதிநிதி சபையாக அது இப்போது ஆகிவிட்டது அம்ருதசரஸில் சென்ற வருஷம் காங்கிரஸ் கூடுவதற்கு முன்னதாகவே அரசியல் மசோதாவைச் சட்டமாக்கிவிட வேண்டுமென்று பார்லிமெண்ட் காமன்ஸ் சபையின் தலைவராகிய மிஸ்டர் போனர்லாவே எச்சரிக்கை செய்தாரென்றால, அம் மகா சபையின் கியாதியை நான் அதிகமாய் வருணிக்க வேண்டியதில்லை. ஒத்துழையாமையைப் பற்றி ராஜப் பிரதிநிதி முதலான சில்லறைத் தேவதைகள் கேலியாய்ப் பேசுகின்றன வாயினும், 'லண்டன் டைம்ஸ்' பத்திரிகை உண்மையில் வெருண்டு போய் விட்டது. காங்கிரஸ் சபையிடத்திலும் தங்கள் தேசத்தாரிடத்திலும், காங்கிரஸ் தலைவர்கள் நம்பிக்கை வைத்ததனாலேயே இவ்வளவு தூரம் அம்மகா சபைக்குச் செல்வாக்கேற்பட லாயிற்று ஆகையால் இந்த அம்சத்தை நீங்கள் கட்டாயம் கவனிக்கவேண்டும். ஒரு காரியத்தில் நாம் மனப்பூர்வமாய் முனைந்துவிட்டால் ஈச்வரன் வந்தால்கூட நம்மைத் தடுக்க முடியாது.

இப்படிப்பட்ட மகாநாடு திறமையாயும் கட்டுப் பாடாயும் நடந்தால் பற்பல வகுப்பு மக்களும் ஒன்றுகூடி ஒரு பொது விஷயத்தைப்பற்றி ஆலோசிக்கவோ, ஒரு வரை யொருவர் பரஸ்பரம் தெரிந்து கொள்ளவோ, ஐக்கிய பாவத்துடன் காரியங்கள் செய்யவோ, அது நிச்ச யம அனுகூலமா யிருக்கும். நமக்குள தற்செயலாக ஏற்பட்டிருக்கக்கூடிய வித்தியாசங்களைச் சிறிது காலத் திற்காவது மறந்து நாம் சேர்ந்து யோசிக்க வேண்டிய ஒரு பொதுவான விஷயமும் இருக்கிறதென்ற உணர்ச்சியை உண்டுபண்ண இதுபோன்ற மகாநாடுகள் நிச்சயம் சாதக மாயிருக்கும். நாம் ஊமைகளல்ல; கேவலம் ஆடுமாடுக ளல்ல நமது ராஜீய அந்தஸ்து நமது கையிலேதானிருக் கிறது என்ற உணர்ச்சியை ஒவ்வொருவருக்கும் உண்டு பண்ணக்கூடிய சக்தி இம் மகாநாட்டுக்குண்டு. இது மட்டுமா? ஜனங்கள் சுபிட்சமாயும் குறையின்றியும் வாழ வில்லை யென்று அரசாங்கத்திற்கு அறிவுறுத்தவும், சோம்பேறித்தனமாய் உட்கார்ந்துகொண்டு அரசாங்கத் தார் கவலையின்றி ஆள முடியாதெனச் சுட்டிக்காட்டவும், ஜனங்களின் இச்சைப்படி ராஜரீக அந்தஸ்து கொடுத் துத்தான் ஆகவேண்டுமென்று எச்சரிக்கை செய்யவும், இத்தகைய மகாநாடுகளே தகுந்த கருவிகளாகும்.

ஆனால் உண்மையான வெற்றி கிடைக்கச் சில சாத னங்கள் வேண்டும். முதலாவது சுயராஜ்யம் கிடைக்க வேண்டுமென்று நீங்கள் மனப்பூர்வமாய் விரும்பவேண் டும். இரண்டாவது, கஷ்டப்படாமல் சுயராஜ்யம் கிடைக்காதென்பதை நன்குணர வேண்டும். அதாவது தியாக புத்தி வேண்டும். மூன்றாவது சுயேச்சைக்கு ஆசைப்படுவோர் அதிகாரிகளைக் கண்டு அச்சப்படுதல் கூடாது. ஜனங்களின் கட்சியை தைரியமாய் எடுத்து வாதிக்க வசதிகள் இருந்துவிட்டால் வெற்றி கைமேல் கிடைக்குமென்பது சத்தியம்.

காங்கிரஸைப்போல் இம்மகா நாட்டுக்கும் சுயராஜ்

யமே முடிவான லட்சியம். ஆப்ரஹாம் லிங்கன் என்ற அமெரிக்க ஜனாதிபதி சொல்லியது போல், ஜனங்களால் ஜனங்களுக்காக ஜனங்களை ஆளச் செய்வதுதான் சுய ராஜ்யமென்ற லட்சியத்தின் கருத்து இன்னும் விரிவாய்ச் சொல்லுகிறேன். ஜனங்களுக்கு ஜவாப்தாரியான ஆட்சி முறை இல்லாவிட்டால், அந்த அரசாங்கத்துக்கு ஜனங்களிடமிருந்து வரிவாங்க உரிமை கிடையாது. உண்மையான ஜனப் பிரதிநிதிகளின் சம்மதத்தைப் பெற்று வரி விதித்தாலன்றி அவ்வரியைச் செலுத்த ஜனங்கள் கட்டுப்பட்டிருக்கவில்லை. சட்டங்கள் என்பவை ஈச்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட அவசர உத்திரவுகளல்ல. சமூக வாழ்வுக் கின்றியமையாத சில விதிகளை ஜனங்களே செய்து கொள்வதுதான் சட்டங்களெனப்படும். எதேச்சாதிகாரம் செலுத்துகிற எந்த அரசுக்கும் சட்டம் செய்ய உரிமை கிடையாது. ஜனப்பிரதிநிதிகளின் கையிலேதான் அவ்வுரிமை அடங்கி யிருக்கிறது அரசன் முதல் கீழ்த்தர உத்தியோகஸ்தர்கள் ஈருக ஒவ்வொருவரும் ஜனங்களின் எஜமானர்களல்லர். சமபளம் பெற்ற சேவகர்களே யாவர். ஜனங்களே அன்னாருக்கு அதிகாரம் கொடுத்திருக்கிறார்கள். ஆகையால் ஜனங்களின் இஷ்டப்படி நடக்க அவர்கள் கட்டுப்பட்டவர்கள்.

இதை யெல்லாம் அறிந்து நம்முடைய பரம்பரையான உரிமைகளைப் பெறவேண்டுமென்ற ஆர்வம் நம்மில் எத்தனை பேருக்கு இருக்கிறது? எத்தனை பேர் தியாகம் செய்யத் தயாராயிருக்கிறார்கள்?

"ராமன் ஆண்டாலென்ன ராவணன் ஆண்டாலென்ன" என்று இந்நாட்டில் தொன்றுதொட்டு வழங்கி வரும் பழமொழியைக் கவனித்தால்கூட, ராஜீய விஷயத்தில் நமது இயற்கையான சோம்பேறிப் புத்தி செம்மையாய் வெளிப்படக்கூடும். ராமர் சரியாய் ஆட்சி புரியவில்லை யென்றாவது, அவர் கெட்டவரென்றாவது வால்மீகி ராமாயணத்தில் சொல்லப்படவில்லை யாயினும், மேற்

சொல்லிய விகாரமான இப்பழமொழி எப்படியோ வழக்கத்தில் வந்துவிட்டது. இதைப் பலர் வேதவாக்காகக் கருதுவது எனக்குப் பிடிக்கவில்லை. தங்களைத் தாங்களே ஆண்டுகொள்ள ஜனங்களுக்குச் சக்தியோ சுதந்திரமோ இல்லையென்று சொல்லுவதுபோல அப்பழமொழி இருக்கிறது. அரசர்களை ஈச்வராம்சமுள்ளவரென்றும் ஈச்வரனுடைய தூதராக ஜனங்களை ஆளவந்தவரென்றும் கருதி வந்தகாலம் இப்போது மலையேறிவிட்டது.

சுயராஜ்யமென்ற லட்சியத்துக்கு மட்டும் அழிவே கிடையாது. எல்லோரும் கடவுளால் சிருஷ்டிக்கப்பட்டவர்கள், சம உரிமை பெற்றவர்கள். ஏழை பணக்காரனென்றும், ஜாதியில் மட்டமென்றும், ஆளப்படுஞ்சாதியாரென்றும், பொதுவாய் அழைக்கப்படுவது சிற்சில சந்தர்ப்பங்களினால் ஏற்படும் கோளாறுகளேயன்றி இயற்கையாக ஏற்பட்ட வித்தியாசமல்ல. கடவுளால் அவ்வித்தியாசங்கள் சிருஷ்டிககப்படவில்லை கைகால்கள் எல்லோருக்குமுண்டு. ஒருவர் ஏகபோகமாய் அச்சொத்தை அனுபவிக்கவில்லை. எல்லோருக்கும் இரண்டு கண்கள்தான். லண்டனில் நமது ஜார்ஜ் அரசரை நான் பார்த்தபோதுகூட, இரண்டே கால்தான் அவருக்கு மிருந்தன. அப்படியானால் இந்த அரசாங்கங்கள் எப்படி உண்டாயின? நமது முன்னோர்கள் எதேச்சையாயும் ஆடம்பரமில்லாமலும் சுகவாழ்வு நடத்தி வரவில்லையா என்று கேட்கலாம். சமூக வாழ்வில் கொலை களவு போன்ற பல குற்றங்கள் நடக்கக் கூடுமாகையால், அவை நடக்காவண்ணம் தடுக்க ஒவ்வொரு சமூகமும் ஏதாவது ஏற்பாடு செய்தேயாகவேண்டும். இல்லாவிடில் உயிர் வாழ்வது கஷ்டம். ராஜாங்கத்தை நடத்த தங்களுக்குளேயே ஒருவரைத் தெரிந்தெடுத்து வேண்டிய விதிகளையும் உத்தரவுகளையும் செய்ய அவருக்கு ஓரளவு அதிகாரமும் கொடுத்து வந்தார்கள். சட்டங்களை அமுல் நடத்திக் குற்றவாளிகளைத் தண்டிப்பது அவர்களுடைய வேலை. மந்திரிகள் முதலிய

உத்தியோகஸ்தர்களை நியமிக்கவும் அவருக்கதிகாரமுண்டு. இத்தகைய வேலைகளை அரசரும் மந்திரிகளும் ஏற்றுக்கொள்வதற்குப் ஊதியமாக 'ராஜபாகம்' என்ற வரித்தொகையை ஜனங்கள் செலுத்தி வந்தனர். ராஜாங்கம், ராஜா என்ற பதங்களின் பூர்வ சரித்திரம் இதுதான். அந்நாளில் திருப்திகரமாய் ராஜாங்கம் நடந்தது; இப்பொழுதோ ஜனங்களின் இஷ்டத்துக்கு விரோதமாக அரசாங்கங்கள் நடக்கப் பார்க்கின்றன. ஏன்? சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற தெய்வீக உரிமைகளை நாம் அவ்வளவு தூரம் கெடுத்துக்கொண்டு விட்டோம். நாமே அதற்கு ஜவாப்தாரி யாவோம.

மற்ற தேசங்களின் அநுபவம் எப்படி யென்பதைக் கவனிப்போம். பிரான்ஸிலும, இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் பல கொடுங்கோன் மன்னர்களோடு ஜனங்கள் உக்கிரமாய்ப் போராட வேண்டியிருந்தது. சென்ற மகா யுத்தத்தில் பல மன்னர்கள் வீழ்ந்துபோய் எண்ணிறந்த ராஜாங்கங்கள் தத்தளித்து நின்றதை நாம் ஒவ்வொருவரும் அறிவோம்.

கொடுங்கோலாட்சி நடத்தி வந்தவர்களெல்லாம் போனவிடந் தெரியாமல் மறைந்து விட்டார்கள். ஜனநாயக உணர்ச்சி உலகெங்கும் ஓங்கி நிற்கின்றது. பிரிட்டிஷ் ஜனங்கள் ஒரு ராஜாவை வாஸ்தவத்தில் கொலை செய்திருக்கிறார்கள். மற்றொருவரை தேசப் பிரஷ்டம் செய்திருக்கிறார்கள். இன்றைக்கோ ஜனங்களின் இஷ்டப்படி அரசர் அங்கு ஆடுகிறார். ஜனங்களின இஷ்டத்தை மீறி அவர் நடப்பதற்கில்லை. பேராசை பிடித்த ஒரு பிரிட்டிஷ் மன்னர் முன்னாளில் அமெரிக்காவை பலாத்காரமாய் அடக்கியாளப் பார்த்தார். அமெரிக்க ஜனங்கள் ஆத்திரங் கொண்டு கலகத்துக்குக் கிளம்பி, கடைசியாய் சுதந்திர மாலையைச் சூட்டிக்கொண்டார்கள். நமது நாளிலேயே நமது கண்ணுக்கு முன்பாக, எகிப்துக்கு பிரிட்டிஷார்

சுதந்திர சாஸனம் வழங்கியிருப்பதை நாமனைவரும் அறிவோம். இவ்வாறெல்லாம் உலகத்திலுள்ள தேசங்கள் தங்களுடைய ராஜ்யப் பிரக்ஞையால் சுயேச்சை சம்பாதித்திருக்க, நாம் மட்டும் கையைக் கட்டிக்கொண்டு "ராம ஞண்டாலென்ன, ராவண ஞண்டாலென்ன" என்று அசிரத்தையாயிருப்பது முற்றிலும் தவறு. நமது குழந்தைகளும் நமது பின் சந்ததியார்களும் க்ஷேமமாய் வாழவேண்டுமென்று நாம் வாஸ்தவத்தில் விரும்பினுல், மற்ற தேசஙகளோடு சம அந்தஸ்துப் பெற்று கௌரவமாய வாழவேண்டுமென்றிருந்தால், ராஜாங்க விஷயத்தில் இனி அசிரத்தையாயிருககக் கொஞ்சமும நியாயமில்லே. இதைச் சில திருஷ்டாந்தங்களால் விளக்குகிறேன

வரவு செலவு விஷயததை நாம எடுத்துக் கொள்வோம். நிலவரி, கலால், உப்பு முதலிய இனஙகளிலேயே முக்கியமாய் அரசாங்கத்திற்கு வருமானம் கிடைக்கிறது. நிலவரி தாங்கமுடியாமல் இருப்பதால் ஏழை விவசாயிகள் மிகுதியும் கஷ்டப்படுவது உங்களுக்குத் தெரியும். வாழ்வுக்கு இன்றியமையாத உப்பின்மீது அரசாங்கத்தார் வரிவிதிப்பது அக்கிரமமேயாகும். கலால் வரும்படியும் கெட்ட வழியிலே தான் சம்பாதிக்கப்படுகிறது. குடிகாரர்களின் மீது வரி விதித்துப் பணம் சம்பாதிப்பதினுல் அவர்கள் கெட்டுப்போகிறுர்களே ஒழிய வேறில்லே. மொத்ததில் அரசாங்கத்தின் முக்கியமான வரும்படிகள் ஜனங்களே மிகுந்த தொல்லேக்கு ஆளாக்கி விடுகின்றன. செலவினங்கள் எப்படியிருக்கினறன என்று கவனிப்போம். சென்ற வருஷத்துக்கு முந்திய வருஷத்தில் பிரிட்டிஷ் கவர்ன்மெண்டார் 410 லக்ஷம் பவுனுக்கு மேல் வரிவசூலித்து அதில் பாதி தொகைக்கு மேல் ராணுவத்துக்கும் கடற்படைக்கும் செலவிட்டு விட்டார்கள். 45 லக்ஷமே கல்விக்காக ஒதுக்கிவைக்கப்பட்டது. உலகத்தில் ஐந்தில் ஒரு பங்கு ஜனத்தொகை கொண்ட இந்தியாவில் இந்த 45 லக்ஷம் கல்விச் செலவுக்குப் போதுமா

என்பதை யோஜித்துப் பாருங்கள். இன்புளூவன்ஸா ஜுரத்தினால் அந்த வருஷத்தில் 90 லக்ஷம் பேர் மாண்டு போய் இருக்க, 25 லக்ஷமே சுகாதார இனத்தில் அவ் வருஷம் செலவாயிருக்கிறது. பழையகால சம்பிரதாயப் படி இப்போது வரிவிதிக்கப்பட வேண்டுமானால், ஜனங் களின் கையிலேயே வரவு செலவுகளை ஒப்படைப்பது தான் ஒழுங்கான முறையாகும்.

சட்டம் செய்யும் முறையை கவனிப்போம். ரௌலட் சட்டம் செய்யப்பட்டது உங்கள் அனைவருக்கும் தெரியும். அதை ஏன் இன்னும் அமுலுக்குக் கொண்டுவரவில்லை யென்றால், நமது உக்கிரமான கிளர்ச்சியே காரணமாகும். ஆனால் ரௌலட் சட்டத்தின் உதவி இல்லாமல் ஜனங் களை ஆளமுடியாத ஒரு கவர்ன்மெண்டார் நமமை ஆள உண்மையில் யோக்கியதை யற்றவர்களே யாவர். அசகுச் சட்டத்தின் பிரயோகம மற்றொரு புறத்தில் மகாவிசித் திரமாக இருக்கிறது. ஒருவனைக் குற்றவாளி யென்று நிரூபிக்காமலே அவனை தண்டித்தாய் விடுகிறது. நிரபராதி என்று நிரூபிக்கும் பொறுப்பு அச்சுக்கூடத்தலை வர்களின மீது சுமத்தப் பட்டுப் போய்விடுகிறது. மொத் தத்தில் பார்த்தால் பிரிட்டிஷ் இந்தியாவில் வழங்கி வரும் சட்டங்களை, ‘ சட்டங்கள ’ என்று சொல்ல நியாய மில்லை. நிர்வாகிகளின் இஷ்டப்படியே நியாயம் வழங்கி வரப்படுகிறது. புதுக்கோட்டையிலும் நிலைமை இப் படிததான் என்று நினைக்கிறேன்.

சட்டங்கள் தான் இவ்வாறு இருக்கின்றனவென்றால், சர்க்கார் ஊழியர்களும் தங்களுடைய பரம்பரையான கடமைகளை முற்றிலும் மறந்து தாங்களே ஈசுவரன் என்று நினைத்துக்கொண்டு அந்தர் தர்பார் நடத்துகிறார் கள். உலகத்தையே ஆட்டிவைக்கச் சக்தியுள்ளவர்கள் போல் நடிக்கிறார்கள். போலீஸ் கான்ஸ்டேபில் முதற் கொண்டு பெரிய அதிகாரிகள் வரையில் ஒவ்வொருவரும் தாமே ராஜாவென்று நினைத்துக்கொண்டு ஜனங்களை

வெருட்டி வருகிறார்கள். சுருக்கமாய்ச் சொன்னால், தேசீய வளர்ச்சியை அவர்கள் ஸ்தம்பிக்கச் செய்கிறார்கள். புதுக்கோட்டையிலுள்ள நீங்கள் என்னைவிட எவ்விதத்திலும் நல்ல ஸ்திதியில் இருப்பதாக நான் நினைப்பதற்கில்லை ஆனால் எங்களைப்போல்நீங்கள் அனுவசியமான அவமானத்துக்கும் வெறுக்கத்தக்க ஜாதி வித்யாசங்களுக்கும் ஆளாகவில்லை என்பது ஒருவிதத்தில் பாராட்டத் தக்கது. பிரிட்டிஷ் இந்தியாவில் எங்கே போனாலும் ஜாதி வித்தியாசம் மிகுதியும பாராட்டப் படுவதை நீங்கள் அறிந்திருக்க மாட்டீர்கள் பள்ளிக்கூடங்களிலும், ரயில்வேக்களிலும் ஆஸ்பத்திரிகளிலும் நியாய ஸ்தலங்களிலும், சர்க்கார் உத்தியோகத்திலும் மேற்சொன்ன ஜாதி வித்தியாசததை நீங்கள் நிச்சயம் பார்க்கலாம். இதுபோன்ற சம்பவங்கள் இங்கு அதிகமாய் இல்லாவிடினும், வரி செலுத்தல், சட்ட பரிபாலனம், நிர்வாகம் முதலிய துறைகளில் உங்களுக்குப் போதிய அளவு செல்வாக்கு இருப்பதாக நான் நினைக்கவில்லை. அதிகாரிகள் பிறப்பித்த சட்டங்களுக்கெல்லாம் நீங்கள் மௌனமாய் உட்பட்டு வருகிறீர்கள் உத்தியோக பதவிகளை நீங்களும் அபரிமிதமாய்ப் பாராட்டத்தான் செய்கிறீர்கள். இந்நிலைமை சிறிதும் திருப்தியாய் இல்லை. சுயராஜ்யமே இதற்கு ஒப்பற்ற மருந்து; சந்தேகமே வேண்டாம். பகிரங்கமாய் உஙகளுடைய லட்சியத்தைத் தெரிவித்துவிடக் காலம் வந்துவிட்டது. சுயராஜய லட்சியம் கூடிய சீக்கிரத்தில் நிறைவேறுவது சாத்தியமாகும்படி நீங்கள் முழுமனதுடன் உழைப்பதாக இன்றையதினம் பிரதிக்கினை செய்துகொள்ள வேண்டும்

தட்சணமே நாம் சுயராஜ்யம் அடைய விரும்புவது கூடாதென்று சிலர் ஆக்ஷேபிக்கக்கூடும். நாம் சுய• ஆட்சிக்கு லாயக்கு இல்லை என்று அவர்கள் சொல்லக்கூடும் அம்மாதிரி பிரிட்டிஷ் இந்தியாவில் சொல்லுவது ஓரளவு பொருத்தமுடையதா யிருப்பினும், புதுக்கோட்

டையில் அத்தகைய வாதத்தைச் சொல்லுவது முற்றிலும் பொருத்தமாய் இராது. ஏனெனில் புதுக்கோட்டை வாசிகளுக்குச சுய ஆட்சி செய்துகொளள உரிமை உண் டென்பதை பிரிட்டிஷ் அரசாங்கததார் வெகு காலத் திற்கு முன்பே ஒப்புககொண்டுவிட்டனா. மற்றும பல சமஸ்தானங்களைப்போல் புதுக்கோட்டைக்கும் உயாந்த அந்தஸது அரசாஙகத்தாரால் கொடுக்கப்பட்டிருக்கிறது. எதேச்சாதிபத்தியம் செலுதத நமது ஜாதியைச் சேர்ந்த வர்கள கற்றுக்கொண்டிருக்கும்போது ஜனநாயக ஆட்சி யும அவாகளுக்குச் செய்துகொளளத் தெரியும என்பதை அரசாங்கததாா அறியவேணடும. நம அடிமைப் புத்தியை விட்டாலொழிய சுய ஆட்சிக்கு நாம் அருகர்தான் என்ற உணர்ச்சி உண்டாகப்போகிறதில்லை. இந்த அடிமைப் புத்தி நம்மை விட்டாலொழிய நாம் ஒருக்காலும் சுய ஆட்சி நடத்த அருகர் ஆகமாட்டோம. சமஸ்தானங் களின் பாதுகாப்புக்கு என்ன வழி செய்வது என்றும் அது யாருடைய பொறுப்பு என்றும் நான் இன்று வாதிக்கப் போகிறதில்லை. தற்காப்புச் செய்துகொள்ள சக்தியில்லாத ஒரு சமஸ்தானம் சுயேச்சைக்கு ஆசைப் படுவது நியாயமா வெனறு சிலர் சகஜமாய்க் கேட்கக் கூடும். ஆனால் எந்தத் தனிப்பட்ட ராஜாங்கமும் தேச மும் பிறருடைய உதவியின்றித் தன்னைக் காததுக் கொள்ள முடியாதென்பது மகாயுத்தத்தின் மூலமாய் பிரத்தியட்சத்தில் விளங்கிப்போய் விட்டது. பிரிட்டி ஷார் ஜெர்மானியருக்கு விரோதமாய் பெல்ஜியத்துக்கு உதவி புரியவேண்டிய காரணம் என்ன? சுதேச சமஸ் தானங்கள் பாதி சுதந்திரத்தை இழந்துவிட்டு பிரிட்டி ஷாரின் பாதுகாப்பும் இல்லாமல் திண்டாட வேண்டுமா? ஆளும், பணமும், சாமான்களும் ஓரளவுகொடுத்து உதவ நீங்கள் தயாராக இருக்கிறீர்கள். ஆனால், கேவலம் பிரிட்டிஷாரின் உதவியையே ஸதாகாலமும் நம்பிக் கொண்டு கௌரவக் குறைவான ஸ்திதியில் நீஙகள்

இருந்துவரும் வழககம் சீக்கிரத்தில் ஒழிந்துபோக வேண்டும். ஸாத்தியமான சமயங்களில் சேனையோ கடற்படையோ சொந்ததகில் வைததுக்கொள்ள உங்க ளுக்கு அவசியம உரிமை இருக்கவேண்டும். இன்னொரு சமஸ்தானத்துடன் உடன்படிக்கை செய்துகொள்ளவும், பிற சமஸ்தானங்களோடு பழகவும் உங்களுக்கு உரிமை இருக்கவேணடும. இல்லாவிடில் ஆயுதம தரித்து ராணு வப பயிற்சி பெறுவது சமஸ்தானப் பிரஜைகளுக்கு ஸாத்தியம் இல்லாமலேயே போய்விடும. பரமபரை யாய்ச் செயதுவந்த ஒரு கௌரவமான தொழிலை நீங்கள் நிரந்தரமாயும அனுவசியமாயும விட்டுவிட வேண்டி நேருட ஸாவதேச சங்கம ஒன்று இருககிறதாயினும் நாடு பிடிக்கும் ஆசை இன்னும் விட்டொழியவில்லை. ஆகையால் ராணுவ முஸ்தீப்புகள் வழக்கமபோல் இருக்கவேண்டியது இன்றியமையாததேயாகும். ராணு வப் பயிற்சி விஷயததில் சுதேச சமஸ்தானங்களுக்குத் தாராளமான உரிமைகள் கொடுப்பதுதான் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கும் உண்மையில் அனுகூலமாய் இருக் கும். சுதேச சமஸ்தானங்களை சாச்வதமாய் அடக்கி வைக்க பிரிட்டிஷ் அரசாங்கம் உத்தேசித்திருந்தாலன்றி ராணுவ விஷயங்களில் சுயேச்சை கொடுத்து சம அந்தஸ்து வழங்குவதே விவேகமாயிருக்கும்.

சுய ஆட்சிச் சுதந்திரத்தை உங்களுக்கு அளித்து விட்டால் உங்களுக்குள்ளேயே நீங்கள் சண்டை போடு வீர்கள் என்று இன்னொரு ஆட்சேபம் சொல்லக் கூடும்; அது முற்றிலும் பொருந்தாத வாதம். இன்று கூட இந்து முஸ்லிம் பிரஜைகள் இந்துமுஸ்லீம் சமஸ் தானங்களில் சம அந்தஸ்துடன் வாழ்ந்து வருவதை நாம் பிரத்தியட்சத்தில் பார்க்கிறோம். பிரிட்டிஷ் இந்தியாவி லாவது இங்கும் அங்கும் சில இந்து முஸ்லீம் சச்சரவுகள் நடந்து வருகின்றன. சுதேச சமஸ்தானங்களில் அதுகூட இல்லை. சுயராஜ்யம் கொடுத்தால் நிர்வாகம் திறமையாய்

இராதென்று சில விஷமிகள் வீண்வாதம் செய்கின்றனர் அதற்கு நான் சொல்லும பதில் இதுதான் எவ்வளவு ஒழுங்காய் நம்மை ஒருவர் ஆட்சி புரிந்தபோதிலும் அது சுய ஆட்சிக்கு சமானமாகாது. மேலும் தற்போதுள்ள அரசாங்கத்தின் நிர்வாக முறைகள் திறமையாகவே இருக்கின்றனவென்று எப்படிச் சொல்லமுடியும்? சுய ஆட்சி கிடைத்த பிறகு ஓரளவு நிர்வாகததிறமை குறைந்து போனால்கூட பாதகமில்லை. அரசாங்கத்திற் காக ஜனங்கள் அல்ல; ஜனங்களின் நன்மையை உத்தே சித்துத்தான் அரசாங்கம் நடைபெறுகிறது என்பதை நீங்கள் மறந்துவிடக் கூடாது

அப்படியானால் சுயராஜ்யம் அடைவதெப்படி? அரசர் தம்முடைய பிரஜைகளுக்கு அதை ஒரு வெகுமதி யாக அளிக்கலாம். இச் சமஸ்தானத்தின் ஹிந்து அரசர் பிரஜைகளின் கண்டிப்பான சம்மதத்தைப் பெற்றே ஆள வேண்டுமென்ற புத்தி படைததிருப்பா ரென்றே நம்பு கிறேன். ஏனென்றால், பண்டைக்கால ஹிந்து ராஜாக் கள் அப்படித்தான் நடந்துகொண்டார்கள். நமது பூர்வீக ஹிந்து அரசர்கள் எதேச்சாதிபத்யம் செலுததினார்க ளில்லை. "தர்ம வழியில் அரசன் நடந்தால் அவனுக்கு ஜயமுண்டாகுக" என்றுதான் அரசரை ஆசீர்வதிப்பது வழக்கம். அரசனும் மந்திரிகளும் இஷ்டப்படி ராஜ்யம் நடத்த வேதங்களில் அதிகாரமில்லை. அரசனைவிட சட் டங்களும் தர்மங்களும் உயர்ந்தவை என்பது பூர்வீக இந்தியாவில்தான் ஒழுங்காய் அனுஷ்டானத்திலிருந்தது. தசரத மகாராஜர் தமது மூத்த குமாரனுக்குப் பட்டம் சூட்ட விரும்பியபோது அவர் தம்முடைய பிரஜைகளின் சம்மதத்தைப் பெறுவதற்காக ஒரு விசேஷக் கூட்டத்தை நடத்திவைத்தார். அவ்வேலையை மந்திரிகளைக்கூடச் செய் யும்படி விடாமல் தாமே அதைத் தன்மேற் போட்டுக் கொண்டார். பினனிட்டு ராமர் காட்டிற்குப் போன பொழுது அயோத்தியில் கலகப்புரட்சி நடக்காமல் தடுத்

ததும் அரசரே. பூர்வீக இந்தியாவில் ஜனங்களின் சக்தி இவ்வாறாக இருந்தது. மீண்டும அதேமாதிரி ஏன் இருக்கக் கூடாது? ஹிந்துக்களுக்கு சுய ஆட்சி செய்து கொள்ள யோக்யதை இல்லையென்றும் சுயராஜ்யத்தின் வாசனையே அவர்களுக்குத் தெரியாதென்றும் யாராவது சொல்வார்களானால் அவர்களைக் காரியக் குருடர்களென்றே நான கூசாமல் சொல்வேன். பூர்விக ஹிந்து மன்னர்கள் உண்மையில் கொடுங்கோலராயிருந்து ஜனங்கள் அடிமைகளாய் வாழ்ந்தன ரென்று சொன்னால், வெகு காலத்துக்கு முன்னமேயே அவர்களுடைய சந்ததிகளும் கியாதியும் அழிந்து போயிருக்க வேண்டும். ஆனால் உணமை என்ன? அக்காலத்து ஹிந்துக்கள் கைத்தொழிலிலும், சிற்ப சாஸ்திரத்திலும், இதர துறைகளிலும் ஒப்புயர்வற்றவர்களாய் விளங்கினார்கள். கிரேககரோடும், ரோமரோடும் அவர்கள் வியாபாரம் நடத்தினார்கள். அன்னார் விட்டுவைத்துப் போயிருக்கும் கலைகளும் நாகரிகமும் உலகத்தாரை இன்றைக்கும் பிரமிக்கச் செய்கின்றன.

சுயராஜ்யத்துக்கு வழிகள்: அதனைக் கொடுக்க இஷ்டமில்லாதவர்களின் கையில் இருந்து பலாத்காரமாய்ப் பிடுங்க முயலுதல் ஒன்று; சாத்விக எதிர்ப்பு, சத்யாக்கிரகம், ஒத்துழையாமை ஆகியவற்றை உக்கிரமமாய் அனுஷ்டித்து அரசாங்கத்தை நம் வழிக்கு இழுத்தல் ஒன்று. இவை மிகவும் கஷ்டமும் ஆபத்துமான முறையாகும். பிரிட்டிஷ் இந்தியாவில் நாங்கள் எது செய்ய நேர்ந்தாலும், புதுக்கோட்டையில் ஜாதி மதம் பாஷை முதலிய வித்தியாசங்கள் ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் இடையே இல்லாதிருப்பதனால், எங்களைப் போல் அமிதமான முறைகளை நீங்கள் அனுஷ்டிக்க வேண்டியிராது. சட்ட திட்டத்துக்கு அடங்கிய ராஜீயக் கிளர்ச்சியே சுயராஜ்யத்துக்கு மூன்றாவது வழியாகும். உங்களுக்கு ஏற்ற முறையும் அதுதான். உங்களுடைய

குறைகள் நிவர்த்தியாகி, கோரிக்கைகள் பூர்த்தியாகும் வண்ணம இடைவிடாமல் கிளர்ச்சி செய்வதென்ற உறுதி படைத்துவிட்டால் அதுவே போதுமானது. ஆளுவோரும அதைக் கண்டு ஜனங்களை சமாதானப்படுதத மனப்பூர்வ மாய்விரும்புவார்கள் என்பதில் தடையில்லை இம்மாதிரி யான முறைகளைக் கையாண்டு எங்களைவிட சீக்கிரத்தில் நீங்கள உங்களுடைய லட்சியததை நிறைவேற்றிக கொள்வீர்களென்று நம்புகிறேன். கடவுளுடைய அனுக் கிரகமும் பூர்ணமாக உங்களுக்குக் கிடைக்கவேண்டு மென்று பிரார்த்திக்கிறேன்.

ஆனல், பலமாயும இடைவிடாமலும் நீங்கள் இனி வேலை செய்யவேண்டும். ஒரே மாதிரியாய் எல்லோரும் இந்த அபிப்பிராயத்தைச் செம்மையாய் அறிந்தவர்களாக இருக்கமாட்டார்கள தான். சுய ராஜ்யம் இல்லாமல் வாழ முடியாதென்ற உணர்ச்சி சிலருக்குத் தான் உண்மையில் இருக்கும். அப்படிப்பட்டவர்கள் தங்களுடைய சகாக் களுக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்றுண்டு. என்ன வென்ருல், ஊர் ஊராகச் சென்று, கிராமந்தோறும் அலைந்து சுயராஜ்ய ஞானோபதேசத்தைச் செய்யுங்கள். அதன் அர்த்தத்தை விளக்கிக் காட்டுஙகள். சுயராஜ்யம் எதற்காக வேண்டும், அதற்கு எனன செய்ய வேண்டும் என்பதைப்பற்றி ஜனங்களுக்கு ஸ்பஷ்டமாய் எடுத்துச் சொல்லுங்கள். சுயராஜ்யம் வேண்டுமென்று தைரிய மாய் பயப்படாமல் கேட்கச் சொல்லுங்கள். சுயராஜ்யத் திற்கு அவர்கள் முற்றிலும் பக்குவ மடைந்து விட்டார் கள் என்பதையும், ஒற்றுமையாயும், மனப்பூர்வமாயும், தியாக புத்தியோடும் உழைத்தால், அந்த லட்சியம் கட்டா யம் நிறைவேறும் என்பதையும் அவர்களுக்கு வற் புறுத்திச சொல்லுங்கள். இம்மாதிரியான மகாநாடு பல கூட்டுங்கள். ஒவ்வொரு கிராமத்திலிருந்தும் அம் மகா நாட்டுக்குப் பிரதிநிதிகளை அனுப்பச் செய்யுங்கள்.

பிரதி தாலுக்காவிலும் கிராமத்திலும் மகா நாடுகள் கூட்டப் பார்க்க வேண்டும்.

சமஸ்தானத்தின் மூலை முடுக்குகளில் சுயராஜ்ய லட்சியத்தைப் பரவச் செய்யக் கட்டுப்பாடான சங்கங் களும் உத்தியோகஸ்தர்களும் சாசுவதமாய் இருக்கவேண் டும. ஆயிரக் கணக்காகத் துண்டுப் பிரசுரங்கள் வெளி யிட வேண்டும். பேச்சு வன்மையுள்ள பிரசாரகர்களின் உதவி வேண்டும். தங்கள் காலத்தைப் பூராவும் தேச சேவைக்கென்று அர்ப்பணம செய்யக்கூடிய உத்தமர்கள் சிலர் முன்வரவேண்டும். ராஜீய விஷயத்தில் ஒருவன் புகுந்துகொளவதெனருல், அதையே உயிர்த் தோழனுக நினைத்து சதா காலமும் அதிலேயே கவனம் செலுத்த வேண்டும். ஊர் ஊராய்க் கொண்டுபோகக் கூடிய புத் தகசாலைகள் வேண்டும். சம்பளம் பெற்ற கல்விமான்கள் கிராமம் கிராமமாகச் சென்று ராமாயண பாரதங்களைப் போல் தேசீய நூல்களை ஜனங்களுக்கு வாசித்துச் சொல்ல வேண்டும். தேசாபிமானம் ததும்பக் கூடிய அற்புத நாட கங்களை, நாடக சாலைகளில் நடிததுக் காண்பிக்கவேண்டும் எல்லாவற்றிலும் மேலாக நீங்கள் செய்ய வேண்டிய காரியம், புதுக்கோட்டையில் ஒரு நல்ல தமிழ்ப்பத்திரிகை நடத்துவதாகும். பத்திரிகைகளின் சக்தியும் செல்வாக் கும் உங்களுக்குப் பேருபகாரமாய் இருக்கும். ஆளு வோர் எவராய் இருந்த போதிலும் பத்திரிகைகளைக் கண்டால் அவர்களுக்கு அச்சமாகவே யிருக்கும்.

சுதேச சமஸ்தானங்களின் சட்ட பூர்வமான ராஜரீக அந்தஸ்து என்ன என்பதைச் சுருக்கமாய்ச் சொல்லிவிடு கிறேன். சமஸ்தானங்களின் சரித்திரம் பலருக்கும் தெரிந்ததே. கிழக்கு இந்தியக் கம்பெனியார் முன்பு ராஜ்யம் நடத்தியபோது அவர்களுடைய ராஜ்ய எல்லைக்கு வெளிப்புறமாயும் உள்ளேயும் அவர்களுடைய ஆதர வைப் பெற்றிருந்து, அப்பால் பிரிட்டிஷ் பாதுகாப்புக்கு உட்பட்ட பிரதேசங்களாயிருந்து, கடைசியாய்க் கீழ்

பட்ட ஒரு நிலைமையினின்றும் பிரிட்டிஷ் ராஜாங்கத்தோடு சம அந்தஸ்து பெற்றவைகளாய் சமஸ்தானங்கள் இருந்து வருகின்றன.

சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷாருக்கும் உள்ள சம்பந்தம முதலாவது, சிற்சில உடன்படிக்கைகளின் மூலமாயும ஒப்பந்தங்களின் மூலமாயும் ஸன்னதுகளின் மூலமாயும் நன்றாகத் தெரியவருகிறது. ஒரு மன்னர் இறந்துபோய் மற்றொருவா சமஸ்தான அதிபதியாய் வரும்போது பிரிட்டிஷ் அரசாங்கத்தார் அவ்விஷயத்தில் நடந்து கொண்டிருக்கும் பான்மையிலிருந்தும் ஒருவாறு அசசம்பந்தத்தை அறிந்து கொள்ளலாம். சமூகவாழ்வு சமூக அபிவிருத்தி ஆகியவற்றில பரஸ்பரம் ஏற்படக்கூடிய மாறுபாடுகளினால் பிராப்தமாகக்கூடிய சம்பந்தம் மற்றொன்று. இவ்வாறு முக்கியமாய் மூன்றுவழிகளில் சமஸ்தானங்களும் பிரிட்டிஷ் அரசாங்கமும சமமந்தப் பட்டிருக்கின்றன. எந்தச் சந்தர்ப்பத்திலும் பிரிட்டிஷ் அரசாங்கததின் இஷ்டமும் உரிமையும் அதிகாரமுமே இதுவரை ஆதிக்கம் வகித்திருக்கின்றன. ஆனால், சமஸ்தானங்களின் பாதுகாப்புக்கு வகைபண்ணியும் சமஸ்தானப் பிரஜைகளின் அபிவிருத்தியை உத்தேசித்து நிர்வாக முறைகளை ஒழுங்குபடுத்த சமஸ்தானாதிபதிகளுக்கு அதிகாரம் கொடுத்தும், பிரிட்டிஷ் அரசாங்கத்தார் சமஸ்தான விஷயங்களில் ஒருமாதிரியான சிரத்தை காட்டி வந்திருக்கிறார்கள். மொத்தத்தில் ஸர்வில்லியம் லீவார்னர் என்ற சரித்திர ஆசிரியர் சொல்லுவதுபோல், இரு அரசாங்கத்தின் நன்மைகளும் ஏகாதிபத்தியத்தின் பொதுவான நன்மைகளோடு நெருங்கி சம்பந்தப்பட்டிருக்கின்றன.

முக்கியமாக ஐந்து காரியங்களில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் உத்தரவுகளை சமஸ்தானங்கள் அனுசரித்து நடக்க வேண்டி யிருக்கின்றன. அவை (1) பொதுவான பாதுகாப்பு, (2) வெளிநாடுகளுடன் சம்பந்தம், (3) உள்

நாட்டு நிர்வாக முறைகள், (4) ராஜ விசுவாசம், (5) அதிகார எல்லை சம்பந்தமான ஒப்பந்தங்கள் ஆகிய ஐந்துந்தான இன்னும விரிவாகச் சொன்னால், யுத்த காலங்களில ஏகாதி பத்தியத்துக்கு அதன் இஷ்டப்படி ஆளும், பணமும கொடுத்து சமஸ்தானங்கள் உதவி செய்ய வேண்டும். சொந்த சைன்யங்களை ஒரு ஹத்துக்கும் கட்டுக்கும உட்படுத்தி வைக்கவேண்டும் போக்குவரத்துக்குரிய சாதனங்களைச் சீர்படுத்திக் கொடுக்க வேண்டும். சமஸ்தானங்களில் உண்டாகக்கூடிய ஊழல்களையும் கலவரங்களையும் தடுக்கும் வகையில் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் மத்யஸ்தத்தை சமஸ்தானங்கள் கண்டிப்பாய் எதிர்பார்க்க வேண்டியிருக்கும் நீதி பரிபாலன ஒழுங்கிலும், மதசம்பந்தமான அனுஷ்டான முறைகளிலும் சிற்சில கொள்கைகள் அனுசரிக்கப்பட வேண்டும். ஏகாதிபத்தியத்தின் நன்மைகளை உததேசித்து சமஸ்தானங்களின் உள்நாட்டு நிர்வாகத்தில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தாராளமாய் சம்பந்தப்பட இடமிருக்கிறது நாணயச் செலாவணி, வர்த்தகம், தபால், போக்குவரதது முதலிய விஷயங்களிலும் தலையிட அந்த அரசாங்கத்திற்கு அதிகாரமிருக்கிறது. ஆனால் அவ்வாறு தலையிட வாஸ்தவத்தில் ஒரு அவசரம் ஏற்பட வேண்டுமென்றும் விதி இருக்கிறது. பாதுகாப்பு விஷயங்களில் ஏகாதிபத்யத்தின் ஆதரவை சமஸ்தானாதிபதிகள் எதிர்பார்த்து நிற்பதால் சக்ரவர்த்தியின் பிரதிநிதிகளையும் தூதர்களையும் மரியாதையாய் நடத்தவும், பட்டத்துக்கு வரும்போது அது விஷயத்தை அவர்களுக்குத் தெரிவிக்கவும், மைனர்களாயிருக்கும் போது அவர்களின் உத்தரவுகளுக்குப் பணிந்து நடக்கவும் கட்டுப்பட்டவர்கள்.

பொதுவாய் சுதேச சமஸ்தானாதிபதிகள் தங்களுடைய ராஜ விசுவாசத்தைக் காரியத்தில் நிரூபித்துக் காட்டக் கட்டுப்பட்டிருக்கிறார்கள். இதே மாதிரி பிரிட்டிஷ் அரசாங்கமும் சமஸ்தானங்களின் எல்லைக்குள் சிற்

சில நிர்ப்பந்தங்களுக்கு உட்பட்டுத் தங்களுடைய அதிகாரத்தைச் சட்ட பூர்வமாய்ச் செலுத்துவதில்லை என்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

மேலே சொன்னதுதான் பொதுவாக சமஸ்தானங்களுக்கும் பிரிட்டிஷ் அதிகாரிகளுக்கும் உள்ள சம்பந்தமாகும். ஏதோ ஒரு பெரிய மகாராஜா உங்களை ஆளுகிறார் என்றும் சர்வசுயேச்சையுடன் நீங்கள் வாழ்ந்து வருகிறீர்களென்றும் நீங்கள் நினைத்துவிடக் கூடாது சிற்சில விஷயங்களில் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் அதிகாரத்தைச் சமஸ்தானங்கள் ஒப்புக்கொண்டே யாகவேண்டும் ஒரு சமஸ்தானம் இன்னொரு சமஸ்தானத்தோடாவது அன்னியதேசத்தோடாவது பிரிட்டிஷ் அரசாங்கத்தின் சம்மதமில்லாமல் ராஜீயப் போக்கு வரத்து வைத்துக்கொள்ளக் கூடாது. உள் நாட்டு நிர்வாகத்துக்கு இன்றியமையாத துருப்புக்களும் சமஸ்தான மன்னரின் அந்தஸ்தைப் பாதுகாப்பதற்கான சேனைபலமுந்தான் அவர்கள் வைத்துக் கொள்ளலாம். எந்த முகாந்தரத்தைக் கொண்டும் சுதேச சமஸ்தானங்களில் உள்நாட்டுக் கலகம் நடக்கவிடப்படமாட்டாது கொடுங்கோல் ஆட்சியாலோ மன்னரின் அநியாயத்தாலோ அச்சண்டை நடக்குமாயின அதில் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் தாராளமாய்த் தலையிடலாம எத்தனையோ தடவைகளில் இந்த மேலதிகாரத்தைப் பிரிட்டிஷ் அரசாங்கத்தார் பிரயோகித்துக் காட்டியிருக்கிறார்கள் பெரிய குற்றங்கள் அல்லது அட்டூழியங்கள் ஏதேனும் செய்து விட்டால் அவ்வாறு செய்த மன்னர்களை ஒரு தனி விசாரணை சபையின் முன்பாகக்கொண்டு நிறுத்தி விசாரிக்கவும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு அதிகாரமுண்டு.

மாஜி இந்திய சேனாதிபதிகூட, தமது புதிய நூலில் சுதேச சமஸ்தானாதிபதிகளின் கிரமமான பாத்தியங்களை விஸ்தாரமாய்க் குறிப்பிட்டிருக்கிறார். சுதேச மன்னர்கள் இஷ்டப்படி ஆட்சி நடத்த முடியாதென்றும், சக்ரவர்த்தி

யோடு நெருங்கிய சம்பந்தம் அவர்களுக்கு உண்டென்றும் வைஸ்ராய்க்கு அவர்கள் தாழ்ந்தவர்களே யென்றும் அவர் சொல்லியிருக்கிறார். ராஜப் பிரதிநிதியின் சம்மத மில்லாமல் சுதேச மன்னர்கள் ஒருவரோடு ஒருவர் ராஜ்ய உடன்படிக்கைகள் செய்து கொள்ளக்கூடாது. வைஸ்ராய் இந்த மன்னர்களுக்குள் ஏற்படக்கூடிய சச்சரவு களையும், அபிப்பிராய பேதங்களையும் தீர்த்துவைக்க உரிமை பெற்றிருக்கிறார். வைஸ்ராயின் உத்தரவுக்கு மேல் இந்தியா மந்திரிக்குத்தான் அப்பீல் செய்யலாம். வைஸ்ராயின் அனுமதி பெற்றே ஐரோப்பியர்களையும் அமெரிக்கர்களையும் சுதேச மன்னர்கள் வேலைக்கு வைத் துக் கொள்ளலாம். சமஸ்தானங்களில் வசிக்கும் பிரிட் டிஷ் பிரஜைகளை விசாரித்துத் தண்டிக்க சுதேசமன்னர்க ளுக்கு அதிகாரம் கிடையாது. தங்களுடைய பிரஜை களை நியாயமான வழிகளில் ஆட்சி புரியவும் சமஸ்தானாதி பதிகள் கட்டுப்பட்டிருக்கிறார்கள்.

சமஸ்தானங்களின் வருங்கால நிலைமை எப்படியிருக் கப்போகிறது என்பதை ஆராய்வோம். பூர்வீக இந்தியா வின் ராஜரீக சேஷங்களாக இவற்றைப் பாவித்து அப் படியே காப்பாற்றிவரலாம். சுதேச சமஸ்தானங்களை ஐரோப்பிய யாத்திரிகர்கள் வேடிக்கை பார்ப்பதற்கான வேடிக்கைக் காட்சி சாலைகளாக வைத்திருப்பதா யின், அதற்கு நான் சம்மதப்பட மாட்டேன். தேச க்ஷேமத்துக்கும், ஒழுங்கான பரிபாலனத்துக்கும் தர்மராஜ் யத்தின் உத்தம குணங்களை உலகத்தாருக்கு எடுத்துக் காட்டுவதற்குமே இச்சமஸ்தானங்களை கெட்டியாய்ப் பாதுகாக்க வேண்டுமென்று நான் வற்புறுத்துகிறேன். மிஸ்டர் ராம்ஸே மெக்டனல்டு என்ற ஆங்கிலேயர்கூட தமது புத்தகத்தில் இதே அபிப்பிராயத்தை வெளியிட் டிருப்பது குறிப்பிடத் தக்கது. அவர் சொல்லுகிறார் :—
"பிரிட்டிஷ் அதிகாரவர்க்கத்தினரைப் போல் சுதேச ராஜாக்கள் திருப்திகரமாய் நாட்டின் அபிவிருத்திக்காக

ஆளச் சக்தியுடையவர்கள் தான். மேலும் சுதேச மன்னர்களின் ஆட்சி முறையினால் ஏற்படக்கூடிய நன்மைகள் பிரத்தியட்சத்தில் தெரிகின்றன. சமஸ்தானப் பிரஜைகள் சுயேச்சையாயும், சுகமாயும் காலம் தள்ளுவதுபோல அடிக்கடி காணப்படுகின்றது. இத்யாதி காரணங்களை முன்னிட்டாவது சுதேச சமஸ்தானங்களை இந்தியாவில் பாதுகாக்க நாம் கடமைப்பட்டிருக்கிறோம். அதனுடன், இப்போதைவிட அதிகமான சுய ஆட்சி சுதந்திரங்களை சமஸ்தானங்களுக்கு அளித்து, போதிய அளவு அத்தகைய சமஸ்தானங்களின் தொகையைப் பெருக்கவும் வழி தேடவேண்டும்"

சமஸ்தானங்களிலுள்ள ராஜீயக் காரியஸ்தரின் அந்தஸ்தைக் குறித்தும் மிஸ்டர் ராம்ஸே மெக்டனல்டு சொல்லி யிருக்கும வார்த்தைகளை நீங்கள் கவனிக்க வேண்டும். அவர் சொல்லுவதாவது;—"பிரஸிடெண்டுகளைப் பொறுக்கி எடுப்பதில் எப்பொழுதும் விசேஷ ஜாக்கிரதை எடுத்துக்கொள்ளப்பட வேண்டும். சமஸ்தானத்தின் தலைநகரில் வசிக்கும் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய பிரதிநிதிகள், பற்பல விதங்களிலும் சமஸ்தான மன்னர்களுக்கு ஆலோசனை சொல்லுவோராய் இருந்து வரவேண்டியிருக்கிறது. அவர்களுடைய உத்தியோகம் மிகவும் கஷ்டம். ஆகையால் பல சமயங்களில் உத்தியோகத்துக்கு லாயக்கில்லாதவர்களாய் இருக்கிறார்கள். தங்களுடைய செல்வாக்கின் பலனாக தங்களுடைய பொறுப்பையும் கடமையும் மறந்து இயற்கையாய் உள்ள சுயேச்சை புத்தியையும் இழந்துவிடுகிறார்கள். தங்களுடைய எஜமானர் என்ற ஹோதாவிலுளள சமஸ்தான மன்னர்களை இக் காரியஸ்தர்கள் இறுமாப்புடனும் அதிகப் பிரசங்கித்தனமாயும் நடத்துவதுண்டு. புதுக்கோட்டையில் ராஜீயக் காரியஸ்தருக்கும் ராஜாவுக்கும் உள்ள சம்பந்தம் மேற்சொன்னபடிதானா அல்லவா என்று எனக்குத் தெரியாது. ஆனால் நீங்கள் ஜாக்கிரதையாய் அதைப்

பற்றி யோசித்துத் திடமான அபிப்பிராயம் சொல்லவேண்டும். ஒன்றுமட்டும் எனக்குத் தெரியும். இச் சமஸ்தான தர்பார் தங்கள் சுதந்திரங்களை விட்டுக் கொடுக்காமல் பிடிவாதமாய் நடப்பதாக நான் நினைக்கவில்லை. பிரிட்டிஷ் இந்தியாவிலிருந்து தாராளமாய் சர்க்கார் சேவகர்கள் இச் சமஸ்தானத்துக்கு தருவிக்கப்படுகிறார்கள். திறமையுள்ள சமஸ்தானப் பிரஜைகள் அவ்வுத்தியோகங்களுக்கு அகப்படாமற் போய்விட்டார்களா? வெளியூர்களிலிருந்து உத்தியோகத்துக்கு நபர்கள் தருவிப்பது உள்ளூராருக்கு அவமானமே யாகும் அனாவசியமாய் பிரிட்டிஷ் அரசாங்கத்தை இதற்கெல்லாம் எதிர்பார்ப்பது அழகாயில்லை. வெளியிடங்களிலிருந்து ஆட்கள் தருவிப்ப தென்றால் சுதேச சமஸ்தானங்கள் இருந்தாலென்ன இல்லாவிட்டா லென்ன? இவ் விபரீதமான வழக்கத்தை ஒழித்துவிட வேண்டியது உங்களுடைய கடமை

சுதேச சமஸ்தானங்கள் ஏதோ தங்களுடைய வேலையைச் செய்து முடித்து விட்டதென்றும் வருங் காலத்தில் அவை அழிந்து போகததான் வேண்டு மென்றும் சிலர் நினைப்பது போல் தெரிகிறது. கிளர்ச்சியில்லாமலும் பலமான பிரயத்தனங்கள் செய் யாமலும் பிரிட்டிஷ் இந்தியாவுக்குச சுயராஜ்யம் கிடைக்காது. அதுபோல் சுதேச சமஸ்தானங் களிலும் ஜனங்கள் தங்களுக்கு சுயஆட்சித் திறமை உண் டென்று நிரூபித்துக் காட்டவேண்டும் அதாவது சுதேச மன்னர்களைப் பொறுப்பை யுணர்ந்து நடக்குமாறு செய்யவேண்டும் சுதேச மன்னர்கள் உற்சாகமாயும் தீவிரமாயும் காரியங்கள் செய்வதில்லை என்று பொது வாய்ப் புகார் உண்டு. "கவலை யில்லாமல் தங்கள் சமஸ் தானத்தில் ஏராளமான வரும்படியைப் பெற்றுக்கொண்டு ஆடம்பரமாய் வாழ்ந்து வருகிறார்கள். அயோக்யர்களும், துரோகிகளும, சுதேசமன்னர்களைச் சுற்றிக்கொண்டு அன்னாரைக் களிப்பித்து வருவதாக ஒரு பெரிய ஐரோப்

பிய மேதாவி கூடச் சுட்டிக்காட்டி யிருக்கிறார், சொந்தப் பணத்தைப்போல் தங்கள் பிரஜைகளின் பணத்தைச் சுதேச மன்னர்கள் கவனிப்பதில்லை யென்றும அவர் பலமாய் அபிப்பிராயப்படுகிறார். இவ்வாறு அவர் சொல்லுவதுபோல் புதுக்கோட்டையில் நடக்கிறதா இல்லையா என்பதைப்பற்றி நான் எதுவும் துணிந்து சொல்வதற்கில்லை அது எப்படி இருந்த போதிலும் சரி, சுதேச மன்னர்கள் மகத்தான வேலை இனிச் செய்ய வாய்க்காமற் போகாது.

ஸிட்னி லோ என்ற மேதாவி சொல்லுகிறபடி, "விஷயம் தெரிந்த மன்னர் எவ்வளவோ தமது சமஸ்தானத்துக்கு உபயோகமா யிருக்கலாம திறமையோடும் கருணையோடும் அவர் நிர்வாகத்தை நடத்தலாம. அவர் கொடுங்கோலுடன் ஆண்டாலும, ஆபத்துக்கு ஆளாகாமல் இருக்கலாம். ராஜதந்திரமும் தற்காப்புக்கான கவலையும் அவர்க்கு வேண்டியதில்லை. பிறர் தமது சமஸ்தானத்தின்மீது படை யெடுத்து அதைப் பிடித்துக்கொண்டு விடுவார்களோவென்று பயப்பட வேண்டியதில்லை. தமது அதிகார எல்லைக்குள் இஷ்டப்படி நடந்து கொள்ளலாம் மந்திரிகளை இஷ்டப்படி நியமித்துக் கொள்ளலாம், வோட்டர்களுக்கோ ஜனப் பிரதிநிதி சபைக்கோ அவர் கட்டுப்பட்டிருக்கவில்லை. ஜனங்களோ பரம சாதுக்கள். மிகுந்த ராஜ விசுவாசிகள். மன்னர் இஷ்டப்பட்டால் ஜனங்களுக்கு எவ்வளவோ நன்மை செய்யலாம். அந்தஸ்தும் பதவியும் போய்விடுமோ என்று மன்னர்கள் பயப்படத் தேவையில்லை. கௌரவமாய் வாழ அவர்களுக்கு வசதி உண்டு, குண்டு மரியாதைகளும் உண்டு, ராணுவ முஸ்தீப்புகளும் மெய்காவலர்களும் வேண்டிய அளவு உண்டு. பிரிட்டிஷ் இந்தியாவுக்கு வந்தால் தகுந்த மரியாதை உண்டு. பணத்தை வாரி இறைக்காமல், செட்டாய்ச் செலவழிக்க வேண்டியதைத தவிர வேறு கஷ்டம்

எதுவும் அவருக்குக் கிடையாது" இவ்வாறு மிஸ்டர் ஸிட்னிலோ எழுதியிருக்கிறார்

சுயராஜ்யம் ஒன்றுதான் எல்லா ராஜீயக் கஷ்டங்களுக்கும் ஒப்பற்ற மருந்து. ஒரே நாளில் சுயராஜ்யம் கிடைத்துவிடாது. கேட்ட மாத்திரத்தில் அது கிடைக்கும வஸ்து அன்று. சுயராஜ்யத்துக்கான பாதையில் ஜனங்களை நடக்கும்படி பயிற்சி செய்வித்து வழியேயுள்ள முட்டுக் கட்டைகளை விலக்கி சுகவாழ்வுக்கான சந்தர்ப்பங்களை அவர்களுக்குத் தேடிக் கொடுக்கவேண்டும். எந்த அரசாங்கததின் நோக்கமும இதுதான். இந்த லட்சியத்தை முன்னிட்டே எங்கும் ராஜாங்கம் நடந்து வருகிறது. ஆளப்படும் ஜாதியாரின் க்ஷேமமே ராஜாங்கத்தின் பிரதான நோக்கமா யிருக்கவேண்டும.

# மாணவருக்கு

**கல்கத்தாவில் நடைபெற்ற வங்காள மாகாண மாண வர்கள் மகாநாட்டுத் தலைமை உரை. 3-10-1931.**

உங்கள் வரவேற்புக் கழகத் தலைவர் என்னை இந்த மகா நாட்டிற்குத் தலைமை வகிக்கவேண்டும் என்று அழைக்கையில் அதை என்னால் மறுக்கமுடியாது என் பதை உணர்ந்து உடனே ஏற்றுக்கொண்டேன் ஏனெ னில் வங்காளத்தினிடம் எனக்கு மிகுந்த பிரேமை உண்டு. மகான் சைதன்யர், தேசீயத்திற்கு வந்தேமாதரம் எனும் தாரக மந்திரத்தை அளித்த பங்கிம் சந்திரர், நவயுக அவதார புருஷரான ராமகிருஷ்ண பரமஹம்ஸர், அவருடைய சிஷ்யரும் தேசீய இயக்கத்தின் ஸ்தாபகர் களில் ஒருவருமான ஸ்வாமி விவேகானந்தர், அரசியல் வேதாந்தி அரவிந்தகோஷ், தேசீய கவியான ரவீந்தரநாத் டாகூர், ஸரோஜினிதேவி, கலாசாலைக் கல்விக்கும் விஞ் ஞான ஆராய்ச்சிக்கும் அடிகோலிய அஷ்டோஷ் முகர்ஜி, எல்லாவற்றையும்விட என் அரசியல் குருநாதரான தேசபந்து தாஸ், இவர்களைப் பெற்றெடுத்த மாகாணம் இது. இம்மாகாணம் ஒவ்வொரு தேசாபிமானியின் மனத் தையும் கவர்ந்தாக வேண்டும். வங்காளம் எதிலும் சளைத்து நின்றதில்லை. இந்திய தேசத்திற்கு வங்காளம் செய்திருக்கும் சேவை பிற மாகாணங்களுக்குத் தாழ்ந்த தில்லை. சென்ற வருஷ சத்யாக்ரஹத்தில் வங்காளத்தின் ஆண்களும் பெண்களும் செய்த தியாகம் இம்மாகாணத் தின் கியாதியை இன்னும் அதிகரிக்கச் செய்துவிட்டது. எந்தச் சந்தர்ப்பத்திலும் வங்காளம் சேவைக்குத் தயார் என்பது எனக்குத் தெரியும்.

மேலும் மாணவர்கள் என்றாலே எனக்கு ஒரு தனி அன்பு உண்டு. நான் யுவனுமல்ல, காலேஜ் மாணவனுமல்ல. ஆனால் என்னை ஒரு யுவன் என்றே கருதுகிறேன். ஏனெனில் ஒரு யுவனின் உணர்ச்சி எனக்கு இருக்கிறது. ஆடவன் தனனை எவ்வளவு வயதானவன் என்று எண்ணிககொள்கிறானோ அவ்வளவு வயதானவனாகத் தோற்றுகிறான். ஒரு பெண்ணின் தோற்றம்தான் அவள் வயதைக் காட்டும் கண்ணாடி மேலும் நான் இன்னும் உலக விவகாரங்களைக் கற்றறிந்துவரும மாணவன்தான். ஆகையால் இன்று உங்கள் முன்வந்து என்னாலியன்ற அளவு சேவை செய்வது எனக்கு மகிழ்ச்சி அளிக்கிறது.

அந்நிய அதிகார வர்க்கத்தின் சந்தேகம் காரணமாக உங்களுக்கு ஏறபட்டுள்ள கஷ்டத்தில் உங்களுக்குச் சேவை செய்யும் சந்தர்ப்பம் எனக்கு ஏற்படுகிறது என்பது என் மகிழ்ச்சியை மிகுவிக்கிறது. கஷ்டப்படுபவர்களுக்குத் துணையாயிருப்பது ஒரு பாக்கியம். நான் உங்களைப்போல் ஒருவனாகவே வந்திருக்கிறேன்; உங்களுக்கு உபதேசம் செய்ய நான் முன்வரவில்லை. நம்மைப் பாதிக்கும் சில பிரச்னையைப்பற்றி என் கருத்துக்களை உங்களுக்கு எடுத்துக்கூறி சரியான தீர்மானங்கள் செய்ய உதவிபுரியவே நான் விரும்புகிறேன்.

மாணவாகளுக்கும் அரசியலுக்கும் உள்ள தொடர்பு பற்றி அபத்தமாகச் சிலர் பேசி வருகின்றனர். என் முடிவை உங்கள் பரிசீலனைக்கு விட்டுவிடுகிறேன். மாணவர்களை 18 வயதுக்குட்பட்டவர்கள், அதற்கு மேற்பட்டவர்கள் என்று இரு கூறாகப் பிரிக்கின்றேன். 18 வயதுக் குட்பட்டவர்கள் அரசியலில் கலந்து கொள்ளாமலிருப்பதுதான் உத்தமம். அவர்கள் உலக விஷயங்களைக் கவனிக்காமல் இருக்கவேண்டும் என்று நான் கூறவில்லை. உலக விஷயங்களைக் கவனித்து அவைகளைப்பற்றிய அபிப்பிராயங்களைத் தாராளமாகக் கேட்கட்டும். தியாகம், தேசாபிமானம், தைரியம் முதலிய குணங்களை அவர்கள் வளர்த்

துக்கொள்ளட்டும். ஆனுல் அவர்கள் அரசியலில் கலந்து கொள்வதில் யாதொரு பிரயோசனமும் இல்லை. அவர்கள் கொஞ்சகாலம பொறுததிருந்து அரசியல் வாழ்வுக்குத் தயார் செய்துகொண்டால் அவாகள் சேவையால் அதிக பலன் உண்டு. தேச சேவையின் அழைப்பைத தட்ட முடியாமல் காலேஜகளில் தங்கியிருக்க விருமபாதவாகளை நான் குறிப்பிடவில்லை. அவர்கள் இந்தப் பிரிவிற்கு விலக்காயிருப்பவாகள். அவர்களை நாம் கட்டுப்படுத்த முடியாது.

ஆனுல் 18 வயதுக்கு மேற்பட்டவர்கள் நேரடியாக அரசியலில் கலந்து கொளவது நன்மையளிக்கும. அவர்களுக்கு ஒரு எச்சரிக்கை மட்டும் செய்வேன். அவர்களில் பெரும்பாலோர் தங்கள் பெற்ருேரின் ஆதரவிலிருக்கின்றனர். தேச சேவை அழைப்புக்கு இணங்க விரும்பிஞல், பெற்ருேர்கள் சம்மதத்தைப் பெற்றே அவர்கள் அரசியலில் கலந்து கொள்ளவேண்டும். 'இவர்கள் அரசியலில் ஈடுபடுவதால் இவர்கள் கல்வி அபிவிருத்தி பாழடைந்துவிடும் என்கிற வாதத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. கல்வி என்ருல் மூளைக்குப் பயிற்சி, தேக பல அபிவிருத்தி, மனிதனின் உனனத அபிலாஷைகளைப் பூர்த்தி செய்வதில் ஆவல் என்ற பொருள் கொண்டால் அஹிம்ஸை முறையில் சுதந்திரத்திற்குப் பாடுபடும் இயக்கத்தில் ஈடுபடுவது உயர்ந்த கல்விப் பயிற்சியேயாகும். இவ்விஷயத்தில் பிற தேசங்களின் உதாரணம் என் வாதத்திற்கு ஆதாரமளிக்கிறது. சென்ற மகா யுததத்தின் பொழுது கட்டாய ராணுவசேவை அமுலுக்கு வருமுன் ஆக்ஸ்போர்ட் கேம்பிரிட்ஜ சர்வ கலாசாலைகளில் படித்துவந்த இளைஞர்கள் படிப்பை விடாமலிருந்தால் பெரிய வேதாந்திகளாகவோ, சரித்திர ஆசிரியர்களாகவோ, ராஜ தநதிரிகளாகவோ, மதப்பிரசாரத தலைவர்களாகவோ கியாதி பெற்றிருக்கலாம். ஆனுல் அவர்கள் தங்கள் படிப்பையெல்லாம் விட்டு பிரான்ஸிலும் பிளான்

டர்ஸிலும் "இங்கிலாந்து வாழ்ந்தால் யார் வாழாதவர்? இங்கிலாந்து மடிந்தால் யார் வாழ்பவர்?" எனும் ரோஷத்துடன் தங்கள் உயிரையும் தியாகம் செய்தனர். இந்த இளைஞர்கள் தங்கள் கல்வியைப் பாழ்படுத்திக் கொண்டதாக யாரும் சொல்லவில்லை. ஆனால் அந்தக் காலம அசாதாரணமான காலம் என்பது உண்மைதான் இந்நாட்டிலும் இன்று அசாதாரண நிலைமைதான் நிலவுகிறது. சுயராஜ்யம அடைந்த நம் நாட்டை நாமே ஆண்டு அண்டை நாடுகளுடன் சமாதானமாக வாழ்ந்தோமானால் அப்பொழுது மாணவர்கள் கல்லூரிகளில் படித்துக் கொண்டிருக்க வேண்டுமென்றுதான் சொல்லுவேன். போராட்டம நடந்துகொண்டிருக்க வேண்டுமானால் சுய மதிப்புள்ள பிறநாடுகள் பின்பற்றிய வழக்குமாறான வேறு வழியை நாம் மட்டும எப்படிப் பின் பற்ற முடியும் என்று கேட்கிறேன்.

இந்த அசாதாரணமான காலத்தில்கூட பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேற மாணவர்கள் விரும்பவில்லையானால் அவர்களுக்கு மதிப்பளித்து நாட்டில் சிறந்த பிரஜையாயிருக்கக் கற்றுக்கொள்ளுங்கள் என்று கூறுவேன். படித்தால் சர்வ கலாசாலையில் மதிப்புடன் தேற வேண்டும் என்று கருதுவதற்கான நிதான மனப்பானமை எனக்குண்டு. படிப்பிலே முதல் ஸ்தானம் அடைய முயலுங்கள் என்று அவர்களுக்குக் கூறுவேன். ஆனால் அவர்கள் அதனுடன் திம்மதியடைந்து விடலாகாது. ஸ்வாமி விவேகாநந்தர் கூறியமாதிரி "இன்று இந்தியாவின் தேவை பகவத்கீதை யன்று, கால்பந்து விளையாட்டே யாகும்".

நமது மாணவர்கள் நாம் பெருமையடையக் கூடிய தேகபலம் வாய்ந்தவர்களல்லர். தேக பலத்தை விருத்தி செய்யுங்கள், பலிஷ்டராகுங்கள் மகாத்மாவும் காங்கிரசும் ஆதரிக்கும அஹிம்ஸை கோழைகளின் ஆயுதமல்ல. தன்னடக்கத்தினுடைய கவசம்தான் அஹிம்ஸை. அறிவு,

உடல் இரண்டையும் வளர்ப்பதுடன் ஏழைகளிடமும் தாழ்த்தப்பட்டவர்களிடமும் அனுதாபம் காட்டும்படி நம் உணர்ச்சிகளையும பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும்.

சமீப காலம் வரையில் நம்முடைய மாணவ மாணவிகள் தங்களுடைய நடை உடை பாவனைகளால் ஒரு தனி ஜாதியினரைப்போல் வாழ்ந்து வந்தனர் எளிய மக்கள் வாழ்விற்கும் இவர்களுக்கும் எவ்வித சம்பந்தமுமில்லாம லிருந்தது லோகமான்ய திலகர், தேச பந்து தாஸ், மகாத்மா காந்தி முதலியோரின் ஊழியததால் இந்த ஊழல் மறைந்து வருகிறது இவ்விஷயத்தில் இன்னும் துரித மாக முன்னேறவேண்டும் இந்தச் சீர்திருத்தத்தில் வங்காளிகள் முன்னணியிலிருக்கிறார்கள். ஆனால இன்னுமம ஆங்கிலத்தில் பேசுவதிலும் எழுதுவதிலும் உள்ள மோகத்தை விட்டொழிக்கவேண்டும். வங்காளிதான் உங்களுடைய சொந்த பாஷை. ஹிந்துஸ்தானி இந்தியா முழுதுக்கும் தேசீய பாஷையாக விரைவில் ஆகிவிடும். ஆனாலும், பாஷை என்பது கேவலம் உணர்ச்சிகளையும் கருத்துக்களையும் வெளியிடும் ஒரு கருவியே. வங்காளத்தில்கூட பாமரருக்கும் படித்தவர்களுக்கும் மலைக்கும் மடுவிற்கும் உள்ள வித்யாசம் இருக்கிறது அன்பினாலும் சமூக சேவையினாலும் இந்த வித்தியாசத்தை ஒழிக்க வேண்டும்.

எல்லா மாகாணங்களிலும் இளைஞர்களிடையே வேலையில்லாத் தொல்லை மலிந்து வருகிறது. இதைத் தீர்ப்பதற்குக் கைகண்ட மருந்து இருக்கிறதென்று கூறிவிட முடியாது. இந்த நிலைமை ஏற்படும் என்று நாடு முழுதும் எதிர்பார்த்திருக்க வேண்டும். எதிர்பார்க்காததனால் ஏமாற்றம் ஏற்பட்டிருக்கிறது. ஆங்கிலப் படிப்புக்கு மெக்காலே பிரபு அஸ்திவாரம் போடுகையில் "கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் குமாஸ்தாக்கள் சிருஷ்டிப்பதுதான் என் நோக்கம்" என்று கூறினார். எவ்வளவோ மாறுதல்கள் ஏற்பட்டும் இன்னும் சர்வ

கலாசாலைகள் குமாஸ்தாக்களைத்தான் பெரும்பாலும் சிருஷ்டித்து வருகின்றன. இந்த வேலையில்லாத் தொல்லை சுயராஜ்ய சர்க்கார் வந்தால்தான் தீரும் படித்தவர்களுக்குச் சர்க்காரல்லாத கம்பெனி உத்தியோகமோ அல்லது வக்கீல் வைத்தியர் பதவிகளோ தான் கிடைக்க முடியும். சுயராஜ்ய சர்க்காரால் நம் இளைஞர்களுக்கு ராணுவம் விமானப்படை கடற்படை பேங்க் முதலியவைகளில் பதவிகள் கிடைக்கும். தொழில் அபிவிருததியிலும் விவசாய சீர்திருத்தத்திலும் இன்னும் எண்ணற்ற துறைகளிலும் இளைஞர்கள் ஈடுபடலாம். இன்னும் சில வருஷத்துக்குள் நம் சுயராஜ்ய லட்சியம் சித்தியடையலாம். அதுவரையில் பொறுமையா யிருங்கள்.

ஆனால் சும்மா இருந்து உங்கள் சக்தியை விரயம் செய்யாதீர்கள், கிராமப் புனருத்தாரணத்திற்காகத் தேசபந்து தாஸ் திட்டம் வகுத்திருக்கிறார். இதில் நம் இளைஞர்கள் ஈடுபட்டிருந்தால் நம் கிராமங்கள் விசேஷ மாறுதலடைந்திருக்கும். அவருடைய திட்டம், பலிதமடைவதற்கு முன் அவர் நம்மை விட்டுப் பிரிந்துவிட்டார். அவர் எதிர் பார்த்தபடி இல்லாவிட்டாலும் அவர் திட்டத்தைப் பின் பற்றினால் ஓரளவாவது வெற்றிபெறலாம். நீங்கள் கிராமத்திற்குச் சென்று ஆங்காங்கு சேவைசெய்ய முன் வாருங்கள். இது வெறுங் கற்பனையல்ல. அனுபவ சாத்தியமான திட்டம்தான். உங்களுக்குத் தெரிந்த கிராமமாகப் பார்த்துக் குடியேறுங்கள். நல்ல புத்தகங்கள் படங்கள் இசைத் தட்டுகள் எடுத்துச் செல்லுங்கள். கொஞ்சம் மருந்துகளும் எடுத்துச் செல்லலாம். நூல் நூற்பது நெசவு நெய்வது இவைகளைத் தெரிந்து கொண்டு பிறருக்கும் கற்பியுங்கள். விவசாயமும் தெரிந்திருக்கட்டும். ஓழிந்த நேரங்களில் கிராம வாசிகள் உல்லாசமாகக் காலங் கழிப்பதற்கு மார்க்கங்களைக் காட்டி இசைத் தட்டுகள் மூலம் சங்கீதத்தையும் கேட்கச் செய்யுங்கள். சில்லரை நோய்களைத் தீர்ப்பதற்கு மருந்து

களைக் கொடுங்கள். அதிகார வர்க்கத்தின் சில்லரைக் கொடுங்கோன்மை களிலிருந்து அவர்களை காப்பாற்றுங் கள. கிராமம சுததமா யிருக்கவேண்டிய வழிகளைத தேடுங்கள். திண்ணைப் பள்ளிக்கூடங்களில் சிறுவர் களுக்குப் படிப்புச் சொல்லிக் கொடுங்கள். நாளடைவில் அவர்கள் அன்புக்குப் பாத்திரமாவதுடன உங்கள் வாழக் கையை நடத்த அவாகள் உபகாரம் செய்வார்கள். சுய ராஜ்யம் வந்தால் கிராமப் புனருத்தாரணத்திற்கு ஐந்து அல்லது பத்து வருடத்திட்டம் வகுத்து கிராமங்களைச் சுத்தமும் ஜீவனும் நிறைந்த ஸ்தாபனங்களாகச் செய்து விடலாம். இந்த வேலையில் நீங்கள் வழிகாட்டிகளா யிருங்கள்.

வங்காளம் பலாத்காரத்தின் உறைவிடமென்று கூறு வது வழக்கமாகிவிட்டது. இது பெரும் அவதூறாகும். அவர்கள் தீவிர தேசபக்தர்களா யிருப்பதால் சில சமயம் பலாத்காரத்தில் இறங்கிவிடுகிறார்கள். ஆனால் அத்தகை யவர் மிகமிகச் சிறுபான்மையினர். அஹிம்சை சிறந்ததா ஹிம்சை சிறந்ததா என்கிற தர்க்கத்தில் இறங்க நான் விரும்பவில்லை.

ஆனால் இந்தியா மகாத்மா காந்தி தலைமையில் அஹிம் சையைத் தான் சுதந்திர சாதனமாக ஏற்றுக்கொண் டிருக்கிறது. இதற்குத் தகுந்த காரணம் உண்டு. இந் தியா தனக்காக மாத்திரமல்ல, யுத்தத்தால் பீடிக்கப் பட்ட உலக உத்தாரணத்திற்கும் சுதந்திரம் கிடைக்க வேண்டுமென்றே பாடுபடுகிறது. சாந்தம் சகோதரத்வம் உலகமெங்கும் பரவ இந்தியா உழைக்கிறது. தன் சுதந் திரத்திற்கு பலாத்காரத்தை இந்தியா அனுஷ்டித்தால் உலகததை உய்விக்க எப்படி முடியும்? ஆகையால் உலக நன்மைக்காக இந்தியா அஹிம்சையைக் கைக்கொண் டிருக்கிறது.

சுய நன்மைக்காகவும் இந்தியா அஹிம்சையைக் கைக் கொண்டிருக்கிறது. இந்தியா இன்று ஜாதி வித்தியாசங்

களால் பீடிக்கப்பட்டிருப்பது நன்மைக்கோ தீமைக்கோ? எல்லா ஜாதிகளும் ஒன்றுபட்டு உறுதியான ஓர் இந்திய சமுதாயமாகவேண்டும் என்பது தேசாபிமானிகளின் விருப்பம். இந்த ஒற்றுமைக்கு அஹிம்சைதான் தக்க சாதனம் வகுப்புவாத பலாத்காரம் தீமையானது. அதைப் பரவவிட்டால் இந்திய சமுதாயம் நிறுவுவது நடக்காத காரியம்

நம்முடைய தேவை விஷயத்தில் நாம் மனத் தெளிவுள்ளவர்களாய் இன்னது வேண்டுமென்று சந்தேகமறத் தெரிவிததுவிட வேண்டும். இவ்விஷயத்தைப்பற்றி எனக்கும மகாத்மா காந்திக்கும் யங் இந்தியாவில் நடந்து வரும் விவாதத்தை நீங்கள் கவனித்திருப்பீர்கள். நமக்கு அரசியல் அதிகாரம் வேண்டுமா அல்லது சீர்திருத்தங்கள் வேண்டுமா? நமக்கு நம்மிஷ்டப்படி ஆட்சி நடத்த அதிகாரந்தான் வேண்டுமென்பது என் பதில். இங்கிலாந்தில் மகாத்மாவும் இதே அபிப்பிராயத்தைத் தெரிவித்திருப்பதைக் கண்டு நான் சந்தோஷ மடைகிறேன். தவறு செய்யக்கூட சுதந்திரம் வேண்டுமென்று அவர் கூறுகிறார். இதைப்பற்றி அபிப்பிராய பேதத்திற்கு இடமில்லை.

நாளைக்கே பிரிட்டன் இந்தியாவில் அன்னிய ஆடை இறக்குமதியைத் தடுத்து விவசாய அபிவிருத்திக்கு வேண்டுவன செய்து தொழில் வளர்ச்சியிலும் சகல முன்னேற்றங்களும் செய்து நாட்டின் ஆக்கத்தை வளர்ப்பதாளுலும் பிரிட்டிஷ் ஆட்சி இந்நாட்டில் நீடிப்பதை நான் விரும்பமாட்டேன். குடியும், அன்னிய ஆடை அணியும் பழக்கமும் உள்ள மக்கள் சிலரை உடையதாயினும் அது சுதந்திரமுள்ள நாடாளுல் அதன் குடிகளில் ஒருவனுயிருப்பேனே யன்றி எல்லாச் சீர்த்திருத்தங்களும் நிறைந்ததாயினும் ஓர் அடிமை நாட்டின் குடிகளில் ஒருவனுக இருக்க நான் ஒருப்பட மாட்டேன்.

அஹிம்சையே நமது கொள்கையாளுல் ராணுவம் கடற்படை விமானப்படைகள் ஏன் வேண்டு மென்கிறீர்

கள் என்று கேட்கலாம். மகாத்மா காந்தியே இவைகளெல்லாம் இந்தியாவுக்குத் தேவைதான் என்று கூறுவதால் இதற்கு நான் விரிவாகப் பதில் கூறவேண்டியதில்லை. பின்னொரு காலத்தில் யுத்தங்களே நேராமலிருக்கலாம். இன்று உலகமுள்ள நிலையில் இந்தியா நிராயுதபாணியாயிருந்தால் அதனால் யுத்தம் ஏற்படும்.

தேசப் புனருத்தாரண வேலையில் ஒரு முக்கியமான அம்சமிருக்கிறது அதில் நீங்கள் பங்கெடுத்துக்கொள்ள வேண்டும். வகுப்பு வித்தியாசம் எனும் விஷம் சமுதாயத்தை அரித்துத் தின்றுவருகிறது. இதை ஒழிக்க வேண்டும் தேசியவாதி யென்கிற ஒரே ஞாபகத்துடன் பேசவும் சேவை செய்யவும் நீங்கள் கற்கவேண்டும். அரசாங்க விஷயத்தில் வகுப்பு வாதத்திற்கு இடமேயில்லை. வரிவிதிப்பது, சட்டம் இயற்றுவது முதலிய துறைகளில் சர்க்கார் ஜாதி வித்தியாசம் பாராட்டுவதில்லை. செல்வம் வறுமை இரண்டும் சகல ஜாதியினரையும் சமமாகவே பாதிக்கின்றன. ஜாதியை அடிப்படையாகக் கொண்ட சிறு பான்மையினர் சுயராஜ்ய இந்தியாவில், ஜனநாயக இந்தியாவில் பயப்பட வேண்டியதில்லை. பொது ஒழுங்குக்கும், ஒழுக்கத்திற்கும் விரோதமாயில்லாத வரையில் ஜாதி, கலாசாரம் முதலியவை சர்க்காரால் பாதுகாக்கப்படும். சட்ட சபையிலுள்ள பெரும்பான்மைக் கட்சியில் சகல ஜாதியினரும் இருப்பார்கள். பெரும்பான்மைக் கட்சிகள் வகுப்பு மனப்பான்மை கொண்டனவா யிருந்தால் தனித்தொகுதித் தேர்தல்முறை அதை மாற்றிவிட முடியாது. இந்தியா அன்னிய ஆட்சிக்குட்பட்டிருக்கும் வரையில் எந்தத் தனி ஜாதியும் முன்னேற முடியாது. ஒரு சிலருக்குப் பட்டமோ பதவியோ கிடைப்பதனால் ஒரு ஜாதியே முன்னேறிவிட முடியாது. சுயராஜ்யத்தினால் சுபீட்சமாயிருந்தால் சகல ஜாதிகளும் சுபீட்சமடையும். இவைகள் அடிப்படையான உண்மைகள். இவைகளைச் சில வகுப்புவாதத் தலைவர்கள்

மறந்து விடுகின்றனர் நீங்கள் எந்த ஜாதியினராலும் இந்த உண்மைகளை எங்கும் பரப்பி, வகுப்புப் பேயை நாட்டைவிட்டு விரட்டி விடுங்கள்.

சுயராஜயம் வந்தபிறகு உள் நாட்டிலும் வெளியி லும் பல எதிரிகளுடன் போராட வேண்டியதிருக்கும். அன்னிய அதிகார வாக்கத்துடன் போராடுகையில் சத்தி யாக்கிரகம், வரிகொடாமை எல்லாம் சிறந்த கொள்கை கள்தாம். சுயராஜ்யம் வந்த பிறகு சத்தியாக்கிரக வாதி கள் சமாதானவாதிகள் சட்ட விரோதிகள் முதலியவர் களை சதா எதிர்த்தாக வேண்டுமானல் அதன் விளைவு என்ன ஆகுமென்று நினைக்க எனக்கு அச்சமாக இருக் கிறது. ஓட்டுப் பெட்டியைவிட சத்தியாக்கிரகமே சிறந்த ஆயுதமென்கிற கொள்கை இப்பொழுது ஆத ரிக்கப்பட்டு வருகிறது. இது உண்மையாயுமிருக் கலாம இல்லாமலுமிருக்கலாம். ஆனல் சட்டத்தை ஆதரிக்கலாம அல்லது எதிர்க்கூலாம வரியைக் கொடுக்கலாம் அல்லது மறுக்கலாம் எனும் உரிமை தனிப்பட்டவர்களுக்கிருந்தால் எந்த அரசாங்கமும் நடக்காது. சிறுபான்மையினா பெரும்பான்மையின ராக சந்தர்ப்பம் அளிக்கப்படும் வரையில் பெரும்பான்மை ஆட்சிக்குட்பட்டு நடக்கவேண்டு மென்கிற சம்பிரதாயம் இருந்தால்தான் சுயராஜ்ய அரசாங்கம் ஒழுங்காக நடக் கும் பெரும்பான்மையினர் கொடுங்கோல் ஆட்சி புரிந் தால் சிறுபான்மையினர் சத்தியாக்கிரகம் செய்யலாம். இது விலக்காக இருக்கவேண்டுமே யொழிய விதியாக இருந்துவிடலாகாது இந்தக் கொள்கையை நாடெங்கும் பரப்பும்படி உங்களை அழைக்கின்றேன்.

# இளைஞர்களுக்கு

### சென்னை, மயிலாப்பூர், ரானடே ஹாலில் கூடிய இளைஞர்களின் காங்கிரசில் நிகழ்த்திய தலைமை உரை

### ( 24—3—34 )

இந்த மகாநாட்டுக்கு நான் தலைமை வகிக்கும்படி நேர்ந்திருப்பதால் நானும் வாலிபத்தை அடைந்ததுபோல உணாகிறேன் வாலிபப்பருவம் மிகவும் வனப்புள்ளது. மறுபடியும வாய்க்காத அரிய சந்தர்ப்பங்கள் எல்லாம் அந்தப் பருவத்திலே நிறையக் கிடைக்கின்றன அவற்றைப் பயன்படுத்திக் கொளவதும், வீணுக்குவதும் உங்களைப் பொறுத்தே இருக்கிறது. இன்று இந்திய இளைஞர்களை எதிர்நோக்கி யிருககும மகததான பல பிரச்னைகளை ஒரே ஒரு வாலிபன்மட்டும் தனிமையாக வெற்றிகரமாய்த் தீர்த்துவிட முடியாது வாலிபப பருவம் ஒரு சிறந்த பேறு அதிலுா இனறைய இந்தியாவின வாலிபராய் இருப்பது இன்னும் சிறந்த விசேஷமாகும். ஏனெனில் இந்தியாவில் ஒரு புதிய சமூகம் உண்டாகிவரும காலம் இது. ஆகவே நீங்கள எல்லோரும ஒன்றுகூடி உங்கள் பிரச்னைகளைப் பற்றியும நாட்டின் பிரச்னைகளைப்பற்றியும் விவாதிப்பது மிகப் பொருத்தம்

உங்களுடைய இளமை உணர்ச்சியைப் பாதுகாத்து வாழ்க்கை லட்சியத்தை வளம்பெறும்படி செய்துகொள்ள வேண்டிய பிரச்னைகளைக் கவனிப்பது மிகவும் முக்கியமானது; இது அவசரமானதும் ஆகும் இந்த நாட்டில வயது வருமுனனரே நாம் கிழடுதட்டி விடுகிறோம். சிலருக்கு எதிர்காலத்தில் நம்பிக்கையில்லாமல் இருப்பதில் ஒரு விசித்திரமான மோஹம் / சூழ்நிலை சந்தோஷமாக இல்லை. கலக்கமாக யிருக்கிறது. ஆனல் கலக்கத்துக்குத்

தோல்வி உணர்ச்சி பரிகாரமல்ல. நீங்கள் அனைவரும் எதிர்கால வாழ்க்கையில் நல்ல நம்பிக்கை கொண்டவர்களாக இருக்கும்படி கேட்டுக்கொள்கிறேன். அமமாதிரி இருப்பதே முறை; நாட்டுக்கு உதவி செய்யக்கூடிய முறையும் இது ஆகும். ஒரே வார்த்தை சொல்லுகிறேன். நீங்களெல்லாம் தன்னம்பிக்கையோடு இருக்கவேண்டும்; நம்பிக்கையும், உற்சாகமும் உங்களிடம் குடிகொண்டிருக்கவேண்டும்.

வேலை இல்லாத் திண்டாட்டம் பெருகியிருக்கிறது; படித்தவர்களுக்கு வேலை இல்லை; ஆகவே சந்தோஷமாக இருப்பதற்கில்லை என்று நீங்கள் சொல்லலாம பார்க்கப் போனால் சந்தோஷம் என்பது என்ன? அது மனநிலைமையைப் பொறுத்த விஷயம். பணக்காரர்களை விட ஏழைகளிடம் அதிகமாக சந்தோஷம் நிலவியிருக்கிறதைப் பார்த்திருக்கிறேன். என் அநுபவம் இது சந்தோஷமாக ஒருவன் இருந்தால் வாழ்க்கைப் பிரச்னைகளை, இதரர்களைவிட அதிக வெற்றியுடன் தீர்க்க முடியும்.

வேலையில்லாத் திண்டாட்டப் பிரச்னையையே எடுத்துக்கொள்வோம். உங்களில் பெரும்பான்மையோர் ஒன்ருகச் சேர்ந்து உருவான முறையில் அப்பிரச்னையைத் தீாக்க வழி என்ன என்று சிந்தித்ததுண்டா? நீங்களே யோசித்துப் பாருங்கள். இப்பிரச்னைக்குப் பிரமாதமாக வீரத்தோடு பரிகாரங்களைச் சொல்வதாகவோ அரைகுறையான பரிகாரங்களைத் தெரிவிப்பதாகவோ நினைக்க வேண்டாம். தைரியசாலிகளாகவும், துணிந்தடித்துச் செயல் புரிபவர்களாகவும் உள்ள வாலிபர்களுக்கும் ஸ்திரீகளுக்கும் வேலைகள் கிடைக்க இடமிருக்கின்றது என்றே நான் கருதுகிறேன். ஆனல் அத்துறையை அவர்கள் அணுகவில்லை.

இதற்கு நான் ஓர் உதாரணம் சொல்கிறேன். பேசும் படம் நம் சமூகத்தில் நிலைபெற்றுவிட்டது. பேசும் படங்களுக்கு முக்கியமாக ஹிந்தி, தமிழ் ஆகிய பாஷைகளி

லுள்ள படங்களுக்குக் கிராக்கி அதிகரித்திருக்கிறது ஆரம்பதசையிலிருப்பினும் பேசும் படங்களுக்கு அதிகமாகச் சந்தர்ப்பம் இருப்பதாகவே தெரிகிறது நல்ல பேசும் படத்தின் மூலமாகப் படித்த இளைஞர்களுக்கும் யுவதிகளுக்கும் நல்ல உத்தியோகமும், ஊதியமும் கிட்டுகின்றன இந்தத் தொழிலில் கிடைக்கக்கூடிய அனுகூலங்கள் பற்றி நீங்கள் கவனம் செலுத்தும்படி கேட்டுக் கொளகிறேன்.

தெனனிந்திய நாடகங்கள், சங்கீதம் இவற்றை எடுத்துக் கொள்வோம். மட்டமான நடிகர்களெல்லாம் ஆரம்ப காலத்திலிருந்தே உடுப்புகளுடன் இன்னும் நடித்து வருகின்றனர் சங்கீதத்தையும் பாருங்கள். முதல்தர சங்கீத வித்வான்களை விரல்விட்டு எண்ணிவிடலாம் உங்களிடையே திறமை நிறைந்திருக்கிறது அத்திறமையை உணர்ந்து பயன் படுத்தக்கூடிய சக்தியை அபிவிருத்தி செய்துகொளள வேண்டும். அதைப் பயன படுத்திக்கொள்ளப் புதிய மார்க்கங்களுக்கான ஏற்பாட்டைச் செயயலாம் இதனால் நீங்கள் நாட்டினரைச் சந்தோஷமடையச் செய்யக்கூடும்.

கிராமப் புனருத்தாரணம், பொருளாதாரத் துறையை அபிவிருத்தி செய்தல், வர்த்தகம், பாங்கிங் முதலிய பெரிய பிரச்னைகள் வேறு இருக்கின்றன இத்துறைகளில் எல்லாம் சர்க்காரே முன் வந்து முயற்சி எடுததுக்கொண்டு உதவி செய்தாலன்றி நீங்கள் அதிகமாக எதையும் செய்துவிட முடியாது. ஆனால் ஒன்று செய்யலாம்: உங்களில் சிரத்தையும், தீவிர சித்தத்துடன் செய்கையில் முனையும் குணமும் உள்ளவர்கள் சொற்ப மூலதனத்தோடு கிராமங்களில் போய் வசிக்கலாம். அங்கு கிராமவாசிகளை வயப்படுத்திக்கொள்ளலாம். அவர்களுக்குப் பயன்படும்படி நீங்கள் இருக்கக்கூடும். இதன்மூலம் அவர்கள் உங்களைச் சந்தோஷமாக ரக்ஷிப்பார்கள். இந்தக் காங்கிரஸ் என் யோஜனையை

ஏற்றுக்கொண்டு விரிவான ஒரு திட்டத்தை அமைக்க ஒரு கமிட்டியை நியமித்தால் நான் உங்களோடு ஒத்து ழைக்கத் தயாராயிருக்கிறேன்.

நீங்கள் வாலிபமாக யிருக்கும்போதே தேகாப்பியாச விஷயத்தில் கவனம் செலுத்தவேண்டும். 'பலமில்லாமல் அழகு சோபிக்காது.' கல்லூரிகளிலுள்ள ஸ்திரீகள் எல்லோருக்கும் என்னுடைய முக்கியமான வேண்டுகோள், அவர்கள் தங்களுடைய சரீரத்தையும், தோற்றத்தையும் நன்கு செவ்வையாக வைத்துக்கொள்ள வேண்டுமென்பது. அவர்கள் இதை அலட்சியமாக எண்ணக்கூடாது. இளை ஞர்கள் தவருமல் தேகாப்பியாசம் செய்வது பற்றியும், பந்தய விளையாட்டுக்களில் ஈடுபட வேண்டியது பற்றியும் நான் அதிகம் வற்புறுதத அவசியமில்லை கிரிக்கெட் விஷ யத்தில் சென்னையும் தனி இடம் பெறவேண்டும். இளைஞர் கள்தான் இதைச சாதிக்கவேண்டும்

சென்னைக கார்ப்பரேஷன், சர்க்கார் உதவியைப் பெற்று, கூடிய சீக்கிரம் கிரிக்கெட்டு ஆடுவதற்கான ஓர் இடத்தையும், மேடையையும் சென்னையில் அமைக்கும் என்று நம்புகிறேன். இதனுல் சென்னை இளைஞர்கள் நல்ல முன் மாதிரியாகக் கிரிக்கெட் ஆட வசதி பிறக்கும்.

டென்னிஸ் ஆட்ட விஷயத்தில் சென்னைக்கு அடிக்கடி கியாதி ஏற்பட்டிருக்கிறது. அந்தப் புகழ் நிலை பெறும்படி நீங்கள் செய்வீர்கள என்றும நம்புகின்றேன். ஹாக்கி, போலோ ஆகிய விளையாட்டுக்களிலும் சென்னை தனக்குத் தனியாக ஒரு ஸதானத்தை ஏற்படுத்திக் கொள்ளவேண்டும. இளைஞர்கள் கவனிக்க வேண்டிய முக்கியமான விஷயங்கள் இவை. இந்தத் துறையிலும் இதர துறைகளிலும் இந்தியாவுக்குள்ள அந்தஸ்து சர்வ தேசத்திலும் உயர்ந்து மிளிரும்படி செய்யவேண்டிய வேலை உங்களுடையதாகும்.

நீங்கள் திருப்திகரமான முறையில், புத்தி பூர்வமான விஷயங்களில் சிரத்தை கொள்ள வேண்டும். நீங்கள்

எல்லோரும் படித்தவர்கள். படித்தவர்களுக்கு என்னென்னவெல்லாம் தெரிந்திருக்க வேண்டும்? இதுபற்றி உங்களில் எத்தனை பேருக்குத் தெரியும? இந்த நகரத்தைப்பற்றி எவ்வளவு விஷயங்கள் உங்களுக்குத் தெரியும்? துணிகரமாகவும் தைரியத்தோடும் வேலைகளைச் செய்யும் உணர்ச்சி எத்தனை பேருக் கிருக்கிறது? இயற்கையிலுள்ள அற்புதங்களைக் கண்டுபிடிக்கப் பலவிதமான முயற்சிகள் நடக்கின்றன. இதில் முக்கியமாக சென்னை வாசிகளின் பங்கு எவ்வளவு? நீங்கள் இத்துறையில் உங்கள் பகுதியை நன்கு செய்யவேண்டும். கால் நடையாகத் தேச யாத்திரை போவது; ஸைக்கிள்களில் ஏறிப் போவது; மலைகளின் மீது ஏறுவது போன்றவற்றைக் கோஷ்டி சேர்த்துக்கொண்டு செய்யவேண்டும். புதிய நாடுகளையும், அந் நாட்டு மக்களையும் நீங்கள் பார்க்க வேண்டும். இதனால் உங்களுக்குத் தன்னம்பிக்கை பிறக்கும். சந்தோஷமும் பெருகும். நீங்கள் பின்பு சிறந்த குடிகளாக வாழவும் முடியும்.

பொழுது போக்குக்காக உல்லாஸமான வேலைகளில் ஏதாவது ஒன்றைச் செய்வது என்ற பழக்கத்தை நீங்கள் கைக்கொள்ள வேண்டும். நமது நாடு இயற்கைவளம் மிகுந்த பூமி. சொற்ப நிலமும், சிறிது முயற்சியும இருந்தால் நாமெல்லோரும் அற்புதமான தோட்டங்களைச் சிருஷ்டித்துவிடலாம். தோட்டவேலை செய்வது மிக நல்ல உல்லாஸமான வேலை. புஷ்பங்கள், இலைகள், பழங்கள் இவற்றின் வனப்பையும், வளத்தையும் பெருகச் செய்வது சந்தோஷகரமான வேலையன்றோ? இந்த வேலையினால் உங்களுக்கு உடற்பயிற்சியும் கிடைக்கிறது. ஆரோக்கியமாகவும் நீங்கள் இருக்கலாம்.

கூடுமான வரை எவ்வளவு பேருக்குச் சாத்தியமோ அவர்கள் வாய்ப்பாட்டோ அல்லது வாத்தியங்களோ பயிலவேண்டும். எல்லாருக்கும் சங்கீதம் பாடும் சக்தி கிடையாதுதான். ஆனால் முயற்சியும், சிரத்தையும்

இருக்குமானால் நம்மில் அநேகர் வாய்ப்பாட்டுப் பாடவோ, அல்லது வாத்தியங்களை வாசிக்கவோ அப்யஸிக்கலாம் என்று அறிகிறேன். சங்கீதத்துக்குத் தனியே ஒரு வசீகர சக்தி உண்டு. மிகவும் துக்கப்படுபவர்களுக்குக் கூடக் கொஞ்சம் சங்கீதம் இருந்தால் துக்கம் சற்று சகித்துக் கொள்ளும்படியாக இருக்கும். சமூகத்தில் சங்கீதத்துக்குள்ள சக்தியும், செல்வாக்கும் கொஞ்ச நஞ்சமல்ல நமது நாடோடிப் பாட்டுக்களும், நடனங் களும் இன்னும் வெளி வராமலிருக்கின்றன. சங்கீதம் இன்னும் அதற்கு உரிய ஸ்தானத்தை அடையாததினால் இன்று சிறுவர்களின் கல்வி ஜீவனில்லாமல் இருக்கிறது இதன் காரணமாக நமது நாட்டு வாழ்க்கைகூட ருசி யுடையதாக இல்லை மற்றவர்களுடைய சங்கீதத்தைக கேட்கவேண்டும என்ற வேகமான உணர்ச்சியே நமக் கிருக்கிறது கலைப் பக்குவம்கொண்ட மனநிலைக்கு ஏற்ற சங்கீதம் இன்னும் அமையவில்லை. அந்த சஙகீதம்தான் உணமையாகக் கேட்டானந்திக்கக் கூடியது. நல்ல சங்கீ ததை அனுபவிக்கும்படி நாம நம்மைப் பக்குவம செய்து கொள்ள வேண்டும். கோஷ்டியாகச் சேர்ந்து பாடும் வழக்கத்தை வளர்க்கவேண்டும். மேல் நாட்டில் இந்த முறை இருக்கிறது ஆயிரக் கணக்கானவர்கள் சேர்ந் தாற்போல் பாட்டுக்களைப் பாடுகின்றனர். நாமும் நம் நாட்டில் இதை அனுஷ்டிக்கவேண்டும்.

ஒழிந்தநேர உல்லாஸ வேலைகள் இன்னும் பல இருக் கின்றன. அவை பற்றி நான் உங்களுக்குச் சொல்ல வேண்டியதில்லை. இதை முடிப்பதற்கு முனபாக உங்க ளெல்லோருக்கும் ஒரு அவசியமான விஷயத்தைச் சொல்ல வேண்டும். நீங்கள் உங்களுடைய உடம்பு, உடை, பழக் கங்கள் இவற்றை மிகச் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். இந்தியாவில் நாம் மிகவும் சுத்தமாக இருக்கி றோம் என்று பல காலமாகப் புகழ் இருந்து வருகிறது. அப்புகழ் ஒரு பொக்கிஷம் போன்றதாகும். இதைப்

பாதுகாத்து, செழிப்புறச் செய்து உங்களுக்குப் பிற்பாடு வரும் தலைமுறையிலும் அது வளம்பெறும்படி செய்ய வேண்டும். இது ஒரு அம்சம். இதைவிட மிக முக்கிய மான விஷயம் நாட்டை எப்படிச் சுத்தமாக வைத்துக் கொள்வது என்பதாகும். வெயில், ஜலம், இவை வருஷம் பூராவும் குறைவில்லாமல் இருப்பதால் நம் கிராமங்கள் பல கெட்டுப் போகாமல் இருக்கின்றன. ஆனால் சென்னை உள்பட நமது நகரங்கள் இத்துறையில் தினசரி போராட வேண்டிய நிலையிலேயே இருக்கின்றன. நமது பழக்கங் களுக்கும் முனிஸிபாலிடியின் ஏற்பாடுகளுக்கும் இடையே இப்போராட்டம் நடக்க வேண்டியிருக்கிறது. நமது தெருக்களும், சந்துகளும் நமக்கு நிரந்தரமான அவமா னத்தைத் தேடித்தரும் நிலையில் இருக்கின்றன. இந்த விஷயத்தைப் பற்றி நான் வெகு தீவிரமாக இருப்பதால் பட்டவர்த்தனமாக உடைத்துப் பேசுகிறேன். படிதத வர்கள் என்று சொல்லிக்கொள்ளும் நாம் சிறந்த உதா ரணத்தை ஏற்படுதத வேண்டும் எப்போது பார்ததா லும் தெருக்களில் குப்பை கூளங்களைக் கொட்டுவது, அசுத்தம் செய்வது போன்றவை நமது அபிவிருததிக்கே தடையாகும். நமது ஜனங்களுக்கு சுகாதார அறிவு வளரும்படி நீங்கள் செய்யவேண்டும. இதைவிட உயாநத சேவை வேறு இருக்க முடியாது. இது கஷ்டம்: ஆனால் இதனால் கிட்டும் பலன் மகத்தானது. இம்முயற்சியால் வனப்பும், வசீகரமும உள்ள நகரங்கள் தோன்றும்; அவ்விடங்களில் ஜனங்கள் சாவதானமாகவும, திடகாத் திரத்தோடும வாழ்வார்கள்.

இவற்றை யெல்லாம செய்ய உஙகளுக்கு உடல் வலி இருப்பதுடன், மனவலியும் இருக்க வேண்டும். நீங்கள் நன்கு ஆழ்ந்துபடித்து அறிவைப் பெருக்கிக் கொளள வேண்டும். | தன்னைத்தானே அறிவுத்துறையில் அபி விருத்தி செய்துகொள்ளும் சக்தி மனிதர்களுக்கு உண்டு.! அது தான் மனிதப் பிறவியின் விசேஷம். | இந்த ஞான

வளர்ச்சிக்கு உகந்த காலம் வாலிபப் பருவந்தான்! எனவே இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளுங்கள் நிறையப் படிக்கும் பழக்கம் வரவேண்டும். புத்தகங்கள் சிறந்த நண்பர்களைப் போலாகும். உங்களுக்கு வேண்டிய சகல தகவல்களையும் புத்தகங்களில் பெறலாம். படித்த வர்களில் அநேகர் இன்றுகூட தீவிரமாகக் கவனத்தோடு படிக்க வேண்டிய புத்தகங்களைப் படிப்பதில்லை. அவர்கள் ஏதோ பத்திரிகைகளைப் படிக்கின்றனர். சமஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் ஆகிய பாஷைகளில் இலக்கி யங்களை நீங்கள் நன்கு பரிபூர்ணமாகப் படிக்கவேண்டும். இதனுல உங்கள் வாழக்கை பூர்ணமாகவும் சந்தோஷகர மாகவும், உபயோகமானதாகவும இருக்கும்.

இந்தியாவின் பொது பாஷையாகக் கூடிய ஹிந்துஸ்தானியை நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். இந்தியாவுக்குப் பொதுவான ஒரு பாஷை ஏற்படும் வரையில் நாம் நம்மை இந்திய தேசத்தவர்கள் என்று பூர்ணமாக, உண்மையாகச் சொல்வதற்கில்லை. இந்த விஷயத்துக்கு ஹிந்திதான் தகுதியான பாஷை. சீக்கிரமாக நீங்கள் ஆரம்பித்து விட்டால் ஹிந்தியை இலகுவில் கற்றுக் கொண்டு விடலாம்.

வாலிபப்பருவத்தில் உங்கள் முன்பாகப் பல பிரச்னைகள் எழும். முக்கியமாக சமூக, மத விஷயங்கள் சம்பந்தப்பட்ட பிரச்னைகளை நீங்கள் தீர்த்து வைக்க முயற்சி செய்யவேண்டும். மதம் என்பது ஒருவர் போதிக்கக் கூடியதன்று; கற்றுக்கொள்ளக் கூடியதும் அன்று. விவேகானந்தர் இதைப்பற்றி நன்கு தெரிவித்திருக்கிறுர். உங்களிடம் மதவிஷயங்களைப் பற்றிப் பேசித் தொநதரவு பண்ண நான் எண்ணவில்லை. ஆனுல் நீங்கள் மதசம்பந்த மான புத்தகங்களைப் பக்தி சிரத்தையோடு படியுங்கள். இந்தப் பிரச்னைகளைப்பற்றி யெல்லாம் ஆர அமரச் சிந்தியுங்கள். முடிவைச் செய்து வைததுக்கொண்டு சொந்த அனுபவங்களைக் கொண்டு தொடர்ச்சியாக, நீஙகள்

செய்த முடிவு சரியா, இல்லையா என்பதைச் சோதித்துப் பார்த்துக் கொள்ளுங்கள். மதத்தைப்பற்றித் தங்கள் நம்பிக்கைகளையும், அனுபவங்களையும் எழுதி வைத்தால் அது மிக்க உபயோகமாக இருக்குமே என்று நான் அடிக்கடி நினைப்பதுணடு. ஜனனம், மரணம் இவற்றைப் பற்றி வியாக்யானம் செய்வது கடினம். மனித வர்க்கத்துக்கு உண்மையான சேவை செய்வதுதான் உண்மையான மதம். நீங்கள் ஒவ்வொருவரும் இதை உணரவேண்டும்

சமூகத்துறையில் அநேக பிரசனைகள் இருக்கலாம். தீவிரமான முறைகளைக்கொண்டு அவற்றையெல்லாம் தீர்க்க நீங்கள் முற்படலாம். இவற்றிற்கெல்லாம் திட்டமான முறைகளை ஒருவர் சொல்வதற்கில்லை. விவாகம், சொத்துரிமை சமூக ஒருமைப்பாடு முதலியவை சிக்கல் மிகுந்த பிரச்னைகள். ஒவ்வொரு தேசத்தாரும் நெடுநாளாக மேற்படி பிரச்னைகளுக்குத் தங்களுக்கு உகந்த முறையில் பரிகாரம் தேடிக் கொண்டிருக்கின்றனர். ஆனால் இப் பிரச்னைகளுக்குச் சீராகவும், நேர்மையுடனும் பரிகாரம் கண்டுவிட்டதாக எந்த நாடும் ஏகபோகமாக உரிமை கொண்டாட முடியாது.) நாம் நமது சமூகத்தைத் திருத்தி அமைக்க வேண்டியதுதான். ஆனால் இன்னொன்றைப் போலவே காப்பி அடிப்பது சாவுக்கு ஒப்பாகும். இவற்றை மனதில் வைத்துக்கொண்டு நீங்கள் உங்கள் சகபாடிகளுடன் சிரத்தையோடு விவாதிக்கவேண்டும்

"சமூக சேவை" என்ற பதம் இப்போது எங்கும் முழங்குகிறது. இப்பதம் உன்னதமான கருத்தைக் குறிக்கிறது. யுவர்களும், யுவதிகளும் தங்களைவிடக் கீழ் நிலையில் இருப்பவர்களுக்கு உதவி செய்வதும் உலகத்தை அவர்களுக்கு ருசியுள்ளதான நிலைமைக்குக் கொண்டுவர வேண்டுமென்று ஆசைப்படுவதும் விசேஷம்தான். ஆனால் இந்தச் சேவையைச் செய்யப் போதுமான வசதி உங்களுக்கிருக்க வேண்டும். அதில்லையாயின் நீங்கள் நன்மை செய்யப் போக அது அதிகத் தீமையாகவே முடியும். எல்லா

நாடுகளிலும் முக்கியமாக நம்நாட்டில் ஏழைகளாக இருப்பவர்கள உணர்ச்சி மிக்கவர்கள். அவர்களுக்கு நீங்கள் சேவைபுரிய வேண்டினால் அவர்களில ஒருவராக நீங்கள் உங்களை நினைத்துக்கொள்ள வேண்டும். சமூக சேவை வீட்டிலேயே முதலில் ஆரம்பமாவது விசேஷம். நமது யுவர்களும் யுவதிகளும் பள்ளிக்கூடங்களுக்கோ கல்லூரிகளுக்கோ போய்ப படிப்பதால் வீட்டில் தங்கள் தாய்மார்களுக்கோ அல்லது சகோதரிகளுக்கோ துணையாகக் காரியஙகள் செய்வது தங்கள கௌரவத்துக்குக் குறைவு என்று எண்ணுகின்றனர. இது தவருன எண்ணம். உண்மையான சமூக சேவை செய்யவேண்டுமென்ற விருப்பம் உங்களுக்கு இருக்குமானால் முதலில் அதை வீட்டிலேயே ஆரம்பம் செய்து கொள்ளுங்கள். உங்களுக்கு நெருங்கியவர்களாக இருப்பவர்களுக்கு உதவி செய்யுங்கள். அப்போதுதான் உண்மையான சமூக சேவையை நீங்கள் சுவைக்க முடியும்.

இதுவரை பிரஸ்தாபிக்காத மிகவும் கஷ்டமான பிரச்னை ஒன்றை இப்போது தெரிவிக்கிறேன். நாட்டின் விஷயத்தில் இளைஞர்களின் மனோபாவம் என்ன என்பதுதான் அப்பிரச்னை. நீங்கள் எல்லோரும் தேசாபிமானத்தோடு விளங்க வேண்டும். நாட்டினிடம் பக்தி கொண்டிருங்கள். இதை நான் சற்றும் தயங்காமல் தெரிவித்துக் கொள்கிறேன். அரசியல், பொருளாதார, தேசீயத்தின வரையறைகளை நான் உணர்ந்துதான் சொல்கிறேன். யுத்தத்தின் கோரத்தை நான் அறிவேன். ஆனால் இந்தியா விடுதலை அடைந்து, சுய ஆட்சியுள்ள நாடாக இல்லாவிட்டால் அமைதிக்கோ, நல்லுணர்ச்சிக்கோ இந்தியா தனது உரிய பங்கைச் செலுத்த முடியாது. எனவே சுதந்திரம் பெறும் விஷயததில் நீங்கள் உதவிசெய்ய வேண்டும். மாணவர்களாக இருப்பவர்களுக்கு ஒரு வார்த்தை. பட்டம் பெறப் படிப்பவர்கள் தஙகளுடைய படிப்பிலும், விளையாட்டி

லும் கவனம் செலுத்துவதுதான் நாட்டுக்கு அவர்கள் ஆற்றக்கூடிய சிறந்த தொண்டு இதனால் நல்ல உடல் வலியும, மனோவலியும் அவர்களுக்கு ஏற்படும் அவர்கள் தற்கால அரசியல் பிரச்னைகளை விவாதித்துக் கொண்டிருக்கத்தான் வேண்டும். சுதேசி வளர்ச்சியைப்போன்ற காரியங்களில் ஈடுபட்டுத் தங்கள தேசாபிமானத்தைக் காட்ட வேண்டும். ஆனால், படிப்பு முடியும் வரையில் அரசியலில் தீவிரமாகச் கலந்து கொள்ளாமல் இருப்பது அவர்களுக்கும் நல்லது; அரசியலுக்கும் நல்லது பட்டதாரிகளாக இருப்பவர்கள் விஷயம் வேறு. மேலே படிப்பதா? அரசியலில் ஈடுபடுவதா? வெறும் வாழ்க்கை நடத்துவதா என்ற விஷயத்தை அவர்கள நிர்ணயம் செய்துகொள்ள வேண்டும். நிர்ணயம் செய்து கொண்டு அதன்படி வழுவாமல் நடக்க வேண்டும். எல்லாவற்றையும் ஒருங்கே செய்ய முயலவேண்டாம்.

சென்னை சர்வகலாசாலையில் ஓர் சங்கத்தை ஸ்தாபிக்க முயன்று வருகின்றனர். சென்னை மாணவர்கள் இந்தச் சங்க நடவடிக்கைகளைக் கவனித்துக் கொள்ளும்படி வேண்டிக்கொள்கிறேன். முக்கியமாக மேற்படி சங்க ஆதரவிலுள்ள பார்லிமெண்டின் நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டும். அந்தப் பார்லிமெண்டிலே நமது யுவர்களும் யுவதிகளும் பேசும் சக்தியைப் பெருக்கிக் கொள்ள முடியும். இத்துறையில் ஆக்ஸ்போர்டு சங்கத்துக்கு நல்ல புகழ் இருக்கிறது. எல்லா ஜனநாயக நாடுகளிலும், இந்தியாவிலும் தங்கு தடையின்றிச் சரியாகத், திறம்படப் பேசுவது மிகவும் பெரிய விசேஷமாகும்.

(ஜனநாயகம் என்றால் என்ன? விவாத பூர்வமாக முடிவு செய்யும் சர்க்கார் ஆட்சி என்று அர்த்தம். விவாதம் என்று சொன்னால் பேசும் சக்தியும், அபிப்ராயத்தை வெளியிடும் வன்மையும் இருக்க வேண்டும். பேசதெரியாதவாகள்தான் பிரசங்கத்தை வெறுப்பார்கள். உங்களுடைய நாட்டின் பொது வாழ்விலே

நீங்கள் தீவிரமாகப் பங்கெடுத்துக் கொள்ள விரும்பும் பக்ஷத்தில் இந்தப் பேச்சு வன்மையை அபிவிருத்தி செய்து கொள்ள வேண்டும்.

இதைவிட அதிக முக்கியமானது ஒன்றுண்டு. தற்காலப் பிரச்னைகளைப் பற்றித் தெளிவாகவும், தைரியத்தோடும் சிந்தனை செய்யும் திறமை வேண்டும். காங்கிரஸ், காந்திஜீ இவர்கள் காரணமாகவும், மற்றும் பல பிரமுகர்களின் முயற்சி காரணமாகவும் இன்று ஜனங்களில் அநேகர் அதிகாரத்திலிருப்பவர்களுக்கு எதிராக யிருப்பினும் நன்ருகச் சிந்தனை செய்து தைரியமாகப் பேசுகிருர்கள்.

"பொதுஜன அபிப்பிராயம்" என்பதைக் கவனிக்க வேண்டும். பொது ஜன அபிப்பிராயத்துக்கு முழுதும் ஒத்த மாதிரியில் பேசக்கூடியவர்களாக இல்லாவிட்டால் ஜனநாயகத்திலே யாரும் தலைவராக இருக்க முடியாது. ஜனங்களிடையே செல்வாக்கு இருப்பதுமட்டுமே ஓர் முடிவான காரியமில்லை. இறுதி லட்சியத்துக்கு அச் செல்வாக்கு ஓர் சாதனமேயாகும். தற்காலிகமாக உங்களுக்குச் செல்வாக்கு மங்கிப் போகும்படி நேர்ந்தால்கூட நீங்கள் நாட்டினருக்குச் சரியான வழியைக் காட்டும்படியாகப் பயிற்சி செய்து கொள்ள வேண்டும் மகாத்மாவின் மகத்தான வெற்றிக்கு, இந்தச் சக்தி அவரிடம் இருப்பது தான் காரணம். இத்துறையில் நாம் அவரைப் பின்பற்ருமல் போனுல் நாம் நேர்மையுடன் அவரை ஆதரித்து நடப்பதாக இராது.

தற்கால அரசியலைப் பற்றி என்னுடைய பிரசங்கத்தில் விவரிக்க விரும்பவில்லை. நம்நாடு சுயேச்சையாக இருக்க வேண்டும்; இதர நாடுகளைப் போலவே சுய ஆட்சியோடு விளங்க வேண்டும் என்று சுயமதிப்புள்ள இந்தியர்களாகிய நாம் ஆசை கொள்ள வேண்டும். சுதந்திரம் பெறுவதென்ருல் அதற்கான விலையை நாம் கொடுத்தே தீரவேண்டும் என்பதையும் உணரவேண்டும்.

1919-ம் வருஷத்தில் நான் இங்கிலாந்தில் இருந்தேன். அங்கே பலர் வீட்டுக்கு நான் சென்றதுண்டு. அங்கு ஒவ்வொரு குடும்பத்திலும் ஒருவராவது யுத்தத்தில் தன் உயிரைக் கொடுக்காமல் இல்லை; பலர் போரிட்டு முடமாகி இருக்கின்றனர். சுதந்திரத்துக்காக இங்கிலாந்து கொடுதத விலை அது அதேபோல இந்தியாவில் ஒவ்வொரு குடும்பமும் நடந்து கொள்ளா விட்டால் சுதந்திரம் என்பது எழுத்தோடும் பேச்சோடும் தான் நிற்கும்.

எல்லாவற்றிற்கும் விதி காரணம் என்பதில்லை. நாம் தான் காரணம். "இந்திய ராஜீய வாதிகள் முஸ்லீம்கள், சீக்கியர்கள், தீண்டாதவர்கள் முதலியவர்களுக்கு எவ்வளவு ஸ்தானங்கள் கொடுக்கவேண்டும் என்பதில் கவனத்தைச் செலவிடுவதை விட்டு, இந்தியாவை ஒரே தேசத்தவர்கள் உள்ள நாடு என்று செய்வதில் நாட்டம் செலுத்தும் பக்ஷத்தில் இந்தியப் பாதுகாப்புச் செலவு குறையும். உள் நாட்டிலுள்ள ஒரு இந்தியப் பட்டாளத்தை வேறிடத்துக்குக் கொண்டுபோனால் உடனே மாகாண சர்க்காரிடமிருந்து ஆக்ஷேபம் கிளம்புகிறது, ஜனங்கள் ஒருவருக்கொருவர் சச்சரவு செய்யாமல் நாம் பார்த்துக் கொள்ள வேண்டும்." என்று சேனாதிபதி ராஜாங்க சபையில் பேசினார். இது மிகவும் அவமானகரமானதுதான். ஆனால் உண்மை. ராணுவத்துறையில் ஸ்தானங்கள் குறைவு. என்றாலும் சென்னை யுவர்கள இத்துறையைக் கூடியவரை பயன்படுத்திக் கொள்ள வேண்டும். இந்திய எல்லைப் படை சம்பந்தப்பட்டவரையில் சென்னையில் அது வெற்றிகரமாக இல்லை. இதிலுள்ள நிபந்தனைகள் அதிகமானவை என்பதை நான் அறிவேன். இருப்பினும் சுயராஜ்யத்துக்காக நாம் கொண்டுள்ள லட்சியம் சித்திக்க நாட்டின் தற்காப்பில் நாம் நமது பங்கை ஏற்றுக்கொள்ளவே வேண்டும். சர்வ கலாசாலை ராணுவப் பயிற்சிக் கோஷ்டியை நீங்கள் ஆதரிக்கவேண்டும். இதில் அதிகமாக மாணவர்கள் சேர

வேண்டும். ராணுவத்தில் இந்திய அதிகாரிகளை அதிக மாக்கும் பிரச்னையை இதன் மூலம் சுலபமாக்கவேண்டும்.

இந்திய ஜன சமுதாயத்தை ஒற்றுமையுள்ளதாகச் செய்துவைக்க யுவர்களால்தான் முடியும். இது மிக முக்கியமான காரியம். வகுப்புவாதம் என்பது இந்திய சமுதாயத்தைப் பெரிதும் பாதிக்கிறது. இந்த வகுப்பு வாத விஷம் முதியோர்களிடம் வேரூன்றிவிட்டது. அவர்களிடமிருந்து நாம் பரிகாரம் காண்பதற்கில்லை. இந்த விஷத்திலிருந்து தப்ப யுவர்கள்தான் வழிசெய்து நாட்டைக் காக்கவேண்டும். நாம் ஹிந்துக்கள், முஸ்லீம் கள், பிராமணரல்லாதவாகள், பிராமணர்கள், உயர்ந்த வகுப்பு, தாழ்ந்த வகுப்பு என்றெல்லாம் நினைத்துக் கொண்டே இருந்தால் ஒரே இந்திய சமுதாயம் என்பது உருவே ஆகாது. குடும்ப வாழ்வில் வேண்டுமானால் இது போன்ற வித்தியாசங்களுக்கு இடமிருக்கலாம். ஜாதி, பிறப்பு எனற வேற்றுமைகள் பொதுவாழ்விலிருந்து நீங்கினாலன்றி இந்த நாட்டுக்கு விமோசனமே கிடையாது. இந்தியா சுதந்திரம் பெற்று, யதேச்சையாக ஆட்சி புரிந் தால் அல்லாமல் இந்தியாவில் எந்தப் பகுதியும் உண்மை யான முன்னேற்றம் அடைய முடியாது. பொது வாழ்வில் வகுப்பு வாதம் என்ற விஷத்துக்கு இடமில்லாமல் ஒழிக்க வேண்டியது யுவர்களது கடமை. உங்கள் மனத்தில் அந்த வகுப்புவாத உணர்ச்சிக்கு இடமில்லாமல் செய்து கொண்டால்தான் வெளியே அதை ஒழிக்க முடியும். நீங்கள் எல்லோரும் அந்த ஜாதி, இந்த ஜாதி என்ற எண்ணமில்லாமல் எல்லோரும் இந்திய யுவர்கள், யுவதி கள் என்ற எண்ணம் கொள்ளவேண்டும். பழக்கம் செய்துகொண்டால் இது சுலபம். நீங்கள் காட்டும் உதாரணம் நாட்டின் நலத்துக்கு உகந்ததாகவிருக்கும்.

# சுதேசிய இயக்கம்

*கள்ளிக்கோட்டையில் அகில இந்திய சுதேசிப் பொருட் காட்சித் திறப்புவிழாப் பிரசங்கம்.* (16—12—1934)

கள்ளிக்கோட்டை யுனைடெட் கிளப் ஆதரவில் நடத்தப் படுகிறது இப்பொருட்காட்சி. இதைத் திறந்து வைக்கும்படி எனக்கு அளித்த சந்தர்ப்பத்துக்காக கமிட்டிக்கு நன்றி செலுத்துகிறேன். நான் வியாபாரி அல்ல. ஆனால் நமது நாட்டின் கைத்தொழிலிலும், பொருளாதார க்ஷேமாபிவிருத்தியிலும், அவற்றின் முன்னேற்றத்திலும் எனக்குத் தீவிரமான சிரத்தை உண்டு. இது போன்ற பொருட்காட்சிகளால் நமது நாட்டின் கைத்தொழில், பொருளாதாரத் துறைகளில் உதவியும் பயனும் கிட்டும். எனவே இத்தொண்டில் ஈடுபடுவது எனக்கு மகிழ்ச்சியையும், பெருமையையும் தருகிறது.

நாட்டிலுள்ள அபாரமான வறுமையை ஓரளவேனும் குறைத்து, பல்லாயிரக் கணக்கில் வேலையில்லாமல் அவதிப்படும் நம் நாட்டவருக்கு நிவாரணமளித்து, பட்டினிக்கும், நோய்க்குமிடையே அவர்கள் மன்றாடித் தவிக்கும் நிலையைச் சிறிதளவாவது குறைக்கவேண்டும். இதைவிட இந்தியாவுக்குச் செய்யக்கூடிய உயர்ந்த சேவை வேறு எதுவும் கிடையாது. இந்த நோக்கத்தினால்தான் காங்கிரஸ் சுதந்திரம் கோருகிறது. சில அதிகாரங்கள் கைமாறுவதை மட்டும் அது விரும்பவில்லை. ராணுவச் செலவு, நிதி இலாகா இவ்விரண்டும் இந்தியர் ஆதிக்கத்துக்கு வரவேண்டுமென்று அது விரும்புகிறது. இதற்குக் காரணம் உண்டு. இந்த நாட்டில் லட்சக்கணக்கானவர்கள் பசியால் வாடுகின்றனர். விவசாய அபிவிருத்திக்காகவும், கைத்தொழில் புனருத்தாரணத்துக்காகவும்

5 வருஷ வேலைத் திட்டத்தையோ அல்லது 10 வருஷ வேலைத் திட்டத்தையோ வகுப்பது அவசியம். சுயராஜ்ய சர்க்கார்தான் இதைச் செய்ய வேண்டும்; செய்யக்கூடும். இதில்லையானால் சுயராஜ்யம் என்பது அர்த்தமற்றதாகும். எனவே காங்கிரஸ், ராணுவச் செலவு, நிதி இலாகா இவற்றில் ஆதிக்கம் வேண்டுமெனக் கோருகிறது. காங்கிரஸ் கொண்டுள்ள லட்சியம் பூர்த்தியாக வேண்டுமானால் புதிய சுயராஜ்ய சர்க்காருக்குப் போதுமான பணமும், சாதனங்களும் இருக்கவேண்டும். இல்லாவிடில் ஒன்றும் பயன்படாதென்பதைக் காங்கிரஸ் நன்குணர்ந்திருக்கிறது.

ஸைமன் கமிஷனுக்கு நிதி சம்பந்தமாக ஆலோசனை கூறியவரின் பெயர் ஸர் வால்டர் லேடன் என்பதாகும். பிரிட்டிஷ் ஜனங்களுடைய வருஷ வருமானம் சுமார் 4,400 பவுன் என்று அவர் மதிப்புப் போட்டிருக்கிறார். அதாவது அவர்களில் ஒவ்வொருவருக்கும் வருஷ வருமானம் 100 பவுனுக்குக் குறைவில்லை. இந்தியாவிலுள்ளவர்களுக்கோ ஒவ்வொருவருக்கும் சராசரி வருஷ வருமானம் ரூ. 107. இந்தியரின் வருஷ வருமானத்துக்கும், பிரிட்டிஷாரின் வருஷ வருமானத்துக்கும் உள்ள வேற்றுமை இவ்வளவு அதிகம். செலவு, இந்தியாவில் சராசரி வருஷ வருமானத்தில் 2 சத விகிதம் ராணுவ, கடற்படைப் பாதுகாப்புக்காகச் செலவிடப்படுகிறது. பிரிட்டனிலோவெனில் இந்தச் செலவு 2½ சத விகிதந்தான். இந்தியாவின் பொருளாதார நிலைமை பற்றி ஸர் வால்ட்டர் லேடன் இவ்வாறு முடிவு கூறுகிறார். இது முற்றிலும் ஒப்புக்கொள்ள வேண்டியதாகும். இந்திய ஜனங்கள் மிகவும் ஏழைகள். பாதுகாப்பு, சட்டம், ஒழுங்கு இவற்றைப் பராமரித்தல் ஆகியவைபோன்ற சர்க்காரின் முக்கிய கடமைகளுக்காக வெல்லாம் இந்தியா அதிகச் செலவு செய்கிறது. அதாவது, மேல் நாடுகளைப் போல் இங்கும் செலவிடப்படுகிறது. இந்தியாவின்

செல்வ நிலையை ஒப்பிட்டுப் பார்க்கையில் இதுமிக அதிகம். ஆனால், கல்வி, சுகாதாரம் (நான் கைத்தொழில் அபிவிருத்தியையும் இதனோடு சேர்த்துக் கொள்கிறேன்) இவை போன்ற சமூக சம்பந்தமான காரியங்களுக்காக இந்தியா செலவிடும் தொகையோ மேல் நாடுகளில் செலவாவதை விட மிகக் குறைவாகவே இருக்கிறது. விரிவான ஒரு திட்டப்படி இந்நாட்டில் துரிதமாகத் தொழில்கள் வளர வேண்டுமானால் அதற்குப் போதிய சாதனங்களுடன் ஜனங்களுக்குப் பொறுப்பாகவுள்ள ஆட்சி ஏற்படவேண்டும். அப்போதுதான் அது சாத்தியம். இது சீக்கிரம் ஏற்பட்டேதீரும். இதற்கிடையே, தற்போதைய நிலைமையைச் சீர்தூக்கி ஆராய இதுபோன்ற காட்சிகள் பயன்படுகின்றன. இருக்கும் சந்தர்ப்பங்களைக் கூடுமானவரை அதிகமாகப் பயன்படுத்திக் கொள்ளவும், நம்மிடம் உண்மையில் அதிகாரம் மாறும்போது தொழில் வளர்ச்சி வேலைத் திட்டத்தை, தயாரித்துக் கொள்ளவும் இது போன்ற காட்சிகள் உதவுகின்றன.

நாம் இப்படியெல்லாம் மன்றாடிச் சோறு வேண்டுமென்று கேட்கையில் கூட்டுப் பார்லிமெண்டரிக் கமிட்டியின் சிபார்சுகள் என்ற வடிவத்தில் நமக்கு ஒரு கல்லைத் தூக்கிக் கொடுக்கின்றனர். அதன் முக்கியமான சிபார்சுகள் வருமாறு:—

"பிரிட்டனிலிருந்து இந்தியாவில் இறக்குமதி செய்யப்படும் சரக்குகளுக்குப் பாகுபாடு செய்யும் முறையிலோ, இடைஞ்சல் ஏற்படும் முறையிலோ, தடைகள் ஏற்படுத்தக் கூடிய சட்ட நடவடிக்கைகளையும் அல்லது நிர்வாக நடவடிக்கைகளையும் தடுக்கவேண்டும். கவர்னர் ஜெனரலுக்குள்ள விசேஷ அதிகாரங்களுடன் இந்த விசேஷப் பொறுப்பையும் மேற்கொண்டு சேர்க்கவேண்டும். மேற்படி நடவடிக்கைகள் சம்பந்தப்பட்ட வரையில், பல்வேறு விதமான சரக்குகளின் இறக்குமதியால் பட்சபாதமான சலுகைகளைக் காட்டும் முறையும் சேர்ந்திருக்கிறதென்

பதைத் தெளிவாக்க வேண்டும். பாகுபாடு செய்தலையும், வேற்றுமையையும் தடுப்பதைப் பொறுத்து கவர்னர் ஜெனரலுக்கும், கவர்னர்களுக்கும் ஒரு விசேஷப் பொறுப்பு இருக்கவேண்டு மெனபதை நாங்கள் ஒப்புக் கொளகிறோம். மந்திரிகள் தெரிவிக்கும் நடவடிக்கையின் பயனாக பாகுபாடு செய்யும்படியான நிலைமை ஏற்பட்டால் அப்போது கவர்னர் ஜெனரலும், கவர்னர்களும் அந்த யோசனையை ஏற்றாலும் ஏற்கலாம்; ஏற்காமலும் இருக்கலாம். அல்லது தங்களுடைய விசேஷ அதிகாரத்தைப் பிரயோகித்தாலும் பிரயோகிக்கலாம். பிரிட்டனில் குடியேறி அங்கு வாசம் செய்து, இந்தியாவிற்குத் திரும்பும் பிரிட்டிஷ் பிரஜைகளுக்கு இந்தியாவிற்குள் பிரவேசிக்க எவ்விதமான தடையும் இருக்கக்கூடாது. வரி விதிப்பு, பிரயாணம், வாசஸ்தலம், சொத்துக்கள், சர்க்கார் உத்தியோகம், வியாபாரம் செய்தல், தொழில் நடத்துவது போனறவற்றிற்கெல்லாம் பிரிட்டனில் வாசம் செய்த பிரஜைகளுக்கு எதிரிடையாக இந்தியாவில் சட்டம் எதுவும் இருக்கக்கூடாது.

கம்பெனிகள் சம்பந்தப்பட்ட வரையில் நாங்கள் கீழ்க்கண்டவாறு அபிப்பிராயப்படுகிறோம். (1) இப்போதோ அன்றி இனிமேற் கொண்டோ, பிரிட்டனில் இணைக்கப்படும் கம்பெனிகள் இந்தியாவில் தொழில் புரியுமானால் அக்கம்பெனி இந்தியாவில் இணைக்கப்பட்டவைபோல் பாவிக்கப்படவேண்டும். இக்கம்பெனிகள் இந்தியக் கம்பெனிச் சட்டத்தின் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தவைகளாக கருதவேண்டும். (2) இப்பொழுதோ அல்லது இனிமேலோ இந்தியாவில் இணைக்கப்படும் கம்பெனிகளில் பிரிட்டனில் குடியேறிய பிரிட்டிஷ் பிரஜைகளான டைரெக்டர்கள், பங்குதாரர்கள், உத்தியோகஸ்தர்கள, ஏஜண்டுகள் முதலியவர்களிருந்தால் அவர்களெல்லாம் இந்தியாவிலுள்ள இந்தியக் கம்பெனியைச் சேர்ந்தவர்களைப்போல் இந்தியாவில் அமுலில்

இருக்கும் சட்டத்தின் நிபந்தனைகளைப் பூர்த்தி செய்தவர்களாகக் கருதப்பட வேண்டும்.

கப்பல்கள் பற்றியும் கப்பல் போக்குவரத்து பற்றியும் தனியாக ஷரத்துச் செய்யவேண்டுமென்பது எங்கள் அபிப்பிராயம். பிரிட்டினில் ரிஜிஸ்தர் செய்யப்பட்ட கப்பல்கள் அதிலுள்ள அதிகாரிகள, சிப்பந்திகள், பிரயாணிகள், சரக்குகள் முதலியவற்றைப் பொறுத்து இந்தியாவிலுள்ள சட்டம் எவ்விதத்திலும் பட்சபாதமாகப் பாவிக்கக் கூடாதென்று சட்டம் செய்யவேண்டும்.

இதில் சில விலக்குகள் இருக்கவேண்டுமென்பதை நாங்கள் ஒப்புக்கொள்கிறோம் எனவே நாங்கள் தெரிவித்திருக்கும் ஷரத்துகள் அரசியல் சட்டம் ஆரம்பித்த காலத்தில் அங்கு அமுலில் இருந்த சட்டங்கள் எதையும் பாதிக்கக்கூடாது. இந்தியாவில் குடியேறி வசிக்காதவர்களுக்கு வரியில்லையென்று விலக்களிக்கும் சட்டத்தையும் அவை பாதிக்கக்கூடாது.

இந்தியாவில் தொழிலையோ அல்லது வர்த்தகத்தையோ வளர்த்து ஆக்கமளிப்பதற்காகச் சர்க்கார் தங்கள் பொக்கிஷத்திலிருந்து கம்பெனிகளுக்கு அளிக்கும் கிராண்டுகள், உதவி மான்யங்கள் இவற்றைப் பொறுத்து இந்தியச் சட்டங்களில் சமஷ்டிச் சட்டமானாலும் சரி அல்லது மாகாண சர்க்கார் சட்டமானாலும் சரி மேற்கொண்டு விலக்கு ஏற்படுத்த வேண்டியது அவசியமெனத் தோன்றுகிறது வெளிநாட்டு மூலதனக்கமிட்டி (External Capital Commitee) 1925-ம் வருஷத்தில் இது போன்ற கிராண்டுகள அளிக்கும் விஷயமாகச் சில சிபார்சுகளைச் செய்தது. அவை அங்கீகரிக்கப்பட்டு அந்தத் தேதி முதல் இந்திய சர்க்காரால் அனுஷ்டித்து வரப்படுகிறது. இவை அனைத்தும் நியாயமான உணர்ச்சியோடு செய்யப்பட்டவை என எங்களுக்குத் தோன்றுகிறது. இதை ஆட்சேபிக்கக் காரணம் எதுவும் இருப்பதாக எங்களுக்குத் தோன்றவில்லை..................."

மனிதனுடைய யுக்தி இதைவிட அதிகமாகப் போக முடியாது. இத்தனை பாதுகாப்புகளுடன் இந்த அரசியல், நம் மக்கள் தலையில் சுமத்தப்படுமானால் இந்தியராகவுள்ள எந்த மந்திரியும் உண்மையில் நாட்டின் தொழில், பொருளாதாரத் துறைகளில் எதையும் செய்ய இடமில்லையென்றே நான் கருதுகிறேன். உடனே நாம் செய்யக்கூடிய பரிகாரம் என்னவெனில் நமது ஜனங்களெல்லாம் அடியோடு சுதேசியத்தை ஆதரிக்கும்படி செய்வதேயாகும். அப்படிச் செய்தால் இந்தியாவின் தொழில் அபிவிருத்தியைத் தடுக்க எண்ணும் இவர்களுடைய காகிதப் பாதுகாப்புக்களால் எதுவும பலிக்காது.

இந்த மாகாணத்தில் தொழில் அபிவிருத்திக்கான மார்க்கங்கள் யதேஷ்டமாயிருக்கின்றன. நெசவுத்தொழில் இம் மாகாணத்தில் பூர்ணமாக அபிவிருத்தி பெறவில்லை. இங்கு உற்பததியாகும் பருத்தியின் தரத்தையும், அளவையும் அபிவிருத்தி செய்து, கைத்தறி நெசவாளருக்குக் குறைந்த செலவில் மின்சாரம் கிடைக்க வசதி செய்து கொடுத்து, நூல், நெசவு ஆலைகளின் முன்னேற்றத்துக்கும் ஆக்கம் அளித்தால் சென்னை மாகாணம் தன் தேவைக்கு மட்டுமின்றி இதர மாகாணங்களுக்கும் ஆடைகள் அளிக்க முடியும். தோலால் செய்யும் சாமான்கள், சர்க்கரை, புகையிலை முதலியவற்றைத் தொழிற்சாலைகளின் மூலம் பெருவாரியாகத் தயாரிப்பதற்கும் இங்கு இடமிருக்கிறது. இந்த மாகாணததின் தொழில் அபிவிருத்தியிலும், நாட்டின் தொழில் வளர்ச்சியிலும் நாம் கவனம் செலுத்த வேண்டியதுதான். என்றாலும் இந்தியாவில் சுமார் 70 லட்சம் கிராமங்கள் இருக்கின்றனவென்பதை நாம் ஒரு போதும் மறந்துவிடக் கூடாது. பட்டணங்கள் 2,316 தான். மேலும் இந்தியா முக்கியமாக விவசாயத்தையே தொழிலாகக் கொண்ட நாடு. 30 கோடி மக்களை இத் தொழில் ஆதரிக்கிறது. இதர தொழில்களின் மூலம் இந்திய ஜனசங்கியையில் 10 சத

வீதம் மக்களுக்குத்தான் ஆதரவு கிடைக்கிறது. இவர்களிலும் பெரும்பாலோர் கட்டுப்பாடில்லாமலிருக்கும் தொழில்களில் ஈடுபட்டிருக்கின்றனர். கட்டுப்பாடான முறையில் நிர்வகிக்கப்படும் தொழில்களில் இருப்பவர்கள் நூற்றுக்கு ஒருவர்தான். ஆகவே இவர்களுடைய தொழில்களுக்கு உதவியாக என்ன செய்யலாம்; விவசாயத்தில் ஈடுபட்டிருப்பவரின் வருவாயைப் பெருக்க வழி என்ன என்பதுதான் நம் முன்னுள்ள பிரச்னை.

காந்திஜீ தம்மிடமுள்ள விசேஷத் தன்மை காரணமாகவும், தீர்க்க தசரிசனத்துடன் கூடிய ராஜதந்திர முறை காரணமாகவும் அகில இந்திய கிராமத் தொழிற் சங்கத்தை ஆரம்பம் செய்தார். இந்தியாவிடம் அனுதாபமுள்ள ஒவ்வொருவரும் இதை ஆதரிக்க வேண்டும். மகாத்மாஜீயே அதைப்பற்றிச் சொல்லியிருக்கிறார். அதைவிடத் தெளிவாக யாரும் சொல்லமுடியாது காந்திஜீ தெரிவித்திருப்பதாவது:—"எல்லாக் கிராமத தொழில்களும் கிராமவாசியிடமிருந்து நழுவிப் போகின்றன. சுரண்டி எடுத்துக் கொள்பவருக்காக மூலப் பொருள்களை உற்பத்தி செய்யும் நிலையில் கிராம வாசிகள் ஆகிவிட்டார்கள். தொடர்ச்சியாகச் சரக்குகளைக் கிராமவாசி கொடுக்கிறான். அதற்காக அவன் பெறும் சகாயமோ மிகவும் சொற்பம். தான உற்பத்திசெய்த மூலப்பொருள் மூலம் கிடைக்கும் சொற்ப வருமானத்தையும் அவன் சர்ககரை வியாபாரிக்கும், ஜவுளி வியாபாரிக்கும் திருப்பிக் கொடுத்துவிடுகிறான். மனத்தாலும் உடம்பாலும் அவன் மாக்களைப் போல் ஆகிவிடுகிறான்".

இதைப்பற்றி நாம் எண்ணிப் பார்க்கும்போது 50 வருஷங்களுக்கு முன்பிருந்த கிராமவாசியைவிட இன்றைய கிராமவாசிக்குப் பாதி அளவுகூடப் புத்தி சாதுர்யமும், திறமையும் இல்லை; சாதனங்களும் கிடையாதென்பதை அறியலாம். இன்றைய கிராமவாசி மற்றவர் கையை எதிர்பார்த்து நம்பி வாழ்ந்து சோம்பிக் கிடக்கும்

நிலைக்கு வந்துவிட்டான். 50 வருஷங்களுக்கு முன்னால் கிராமவாசி தன்னுடைய மனம் உடம்பு இவற்றைத் தனக்குத் தேவையான காரியங்களுக்காகப் பயன் படுத்து வது வழக்கம்: அவ்வேலைகளெல்லாம் தன் வீட்டிலேயே செய்வான். இப்போது கிராமத்திலுள்ள தச்சு வேலைக் காரரிடம் போய் உங்களுக்கு ராட்டினம் செய்யச் சொல் லுங்கள்; கிராமக் கொல்லரிடம் சென்று கதிர் ஒன்றைப் பண்ணச் சொல்லிப் பாருங்கள். நீங்கள் ஏமாற்றமே அடைவீர்கள். இது வருந்தத்தக்க நிலைமையாகும். இவற் றிற்குப் பரிகாரம் காண்பதற்காகவே கிராமக் கைத் தொழில் சங்கம் சிருஷ்டிக்கப்படுகிறது.

கதர் மிகவும் முக்கியமானதுதான். இன்னும் பலவித மான கைத்தொழில்களும், குடிசைத் தொழில்களும் இருக்கின்றன. இம்மாகாணத்திலுள்ள கிராமங்கள் சுபிட்சநிலை எய்துவதற்கு அவற்றை அபிவிருத்திபெறச் செய்யவேண்டும். ஐரோப்பிய சரக்குகளும், தினுசுகளும் எவ்வளவு தூரம் நம் மாகாணத் தொழில்களைப் பாதித்து விட்டன என்பதை நினைக்கையில் திடுக்கிடும்படியாகத் தான் இருக்கிறது. ஐரோப்பியக் காற்றில் அடிபட்டு வாடி வதங்காமலுள்ள தொழில் பாய் நெய்யும் தொழில் ஒன்று தான். தஞ்சை, வாலாஜா நகர் ஆகிய விடங்களில் மிக அழகான பட்டு ஜமக்காளங்கள் நெய்யப்பட்டன. ஐயம் பேட்டை ரத்னக்கம்பளங்கள் நெய்வதற்குப் பேர்போன ஊர். ஆற்காடு, ஐயம்பேட்டை, ராஜங்குடி இவ்வூர்களில் தயாராகும் ஜமக்காளங்கள் விசேஷமானவை குமப கோணம், மாயூமதுரை, மசூலிப்பட்டணம் ஆகிய இடங் களில் சிறந்த பெட்ஷீட் அல்லது துப்பட்டிகள் தயாரா யின. காளஹஸ்தி, சேலம், மதுரை முதலியவிடங்களில் கையால் சாய வேலை செய்யப்பட்ட பருத்தி நூல் ஆடை கள் உற்பத்தியாயின. பாம்பன், பரமக்குடி ஆகிய ஊர் களில் தயாராகும் கைக்குட்டை, ஆடைகள் புகழ் வாய்ந் தவை. வாலாஜாநகர், ஆற்காடு இவ்வூர்களில் அச்சிட்டு

பூவேலை ஜவுளிகள் உற்பத்தியாயின. சிகாகோல் மஸ்லின் விசேஷமானது. பெத்தாபுரம், பட்டுக்குப் பிரசித்தமாயிருந்தது. இவையெல்லாம் நமக்குக் கிடைத்த சரக்குகள். இவைபோன்ற சரக்குகளின் உற்பத்தி காரணமாக ஒரு காலத்தில் ஆயிரக்கணக்கானவர்களுக்கு வேலை கிடைத்தது. "க்ஷீண தேவதை"யின் கர ஸ்பரிசத்தால் இவை ஒவ்வொன்றும் இன்று மறைந்துகொண்டே இருக்கின்றன.

சென்னை மியூஸியத்திலும், சுதேச மன்னர்கள், ஜமீந்தார்கள் ஆகியவர்களிடத்திலும் பார்த்தால் ஒரு காலத்தில் இரும்பால் செய்த கருவிகளின் அற்புதக் கலையழகு துலங்கும். ஆனால் இப்போது அப்படியில்லை. இரும்பு வேலை செய்பவர்களுக்கு வண்டிச் சக்கரத்துக்குப் பட்டா (கட்டு) கட்டுவதும், சின்னக் கத்திகள் தயாரிப்பதுமே வேலையாகிவிட்டன.

இந்தப் பொருட்காட்சி காரணமாயும், இன்னும் இது போன்ற காட்சிகள் நடப்பதன் மூலமும் நமது கலைத் தொழில்களும், பொதுவாகக் குடிசைத் தொழில்களும் மீண்டும் புத்துயிர் பெறுமென நம்புகிறேன்.

இது நாட்டினருடைய ருசியைச் சரிவர வளம்பெறச் செய்வதிலிருக்கிறது. நமது வீட்டிலுள்ள மேஜை நாற்காலிகள், ஆடை இவை அனைத்தும இந்திய மயமாக வேண்டுமென்பது என் வேண்டுகோள். அப்போதுதான் சுதேசியம் நிலைபெற முடியும்.

நாம் நமது கிராம வாழ்க்கையை வளம்பெறச் செய்ய வேண்டும். தொழில் பொருளாதாரத் துறைகளில் இந்தியா தன்னுடைய தேவையைத் தானே பூர்த்தி செய்து கொள்ளக்கூடியபடி கூடுமானவரை நாம் ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

# நமது லட்சியம்

*ஹரித்துவார் குருகுலம் சர்வகலாசாலைப்*
*பட்டமளிப்பு விழாப் பிரசங்கம்* [27-3-1937]

ஸர்வகலாசாலை வாழ்க்கையிலும், அதன் வேலையி லும் பலவிதங்களில் நான் வெகு காலமாகத் தொடர்பு கொண்டிருக்கிறேன். ஸர்வகலாசாலைப் படிப்பு விஷயத் தில் தொடர்ச்சியாக எனக்கு ஆழ்ந்த சிரத்தை உண்டு. ஆனால் என்னுடைய பிரதேசத்திலுள்ள ஸர்வ கலாசாலை களுக்கும் இங்குள்ள ஸர்வ கலாசாலைக்கும் முற்றிலும் வித்தியாச முண்டு வித்தியாசங்கள் எப்படி யிருந்த போதிலும் நேர்மையான கல்வி அறிவைச் சீரான முறை யில் பரவச் செய்ய வேண்டுமென்பது நம் நாட்டின் அவ சரமான தேவை. உலகத்திலேயே கல்வி அறிவில் சிறந்த நாடு நம்முடையது என்பது சரித்திர அளவில்தான் இருக் கின்றது. இன்றைய எண்ணிக்கையைக் கொண்டு நாம் பார்ப்போமாயின் இந்தியா கல்வி அறிவில் மிகவும் பிற் பட்டதாகவே இருக்கிறது. கல்வி அறிவையும், புத்தி சாலித் தனத்தையும், விவேகமுள்ள வாக்காளர்களையும் அடிப்படையாகக் கொண்டு ஜனநாயக முறையில் சுய ராஜ்யம் ஏற்பட வேண்டும். அதில்லாவிட்டால் பூர்ண ஜனநாயக முள்ள சுயராஜ்யம் என்று சொல்வது வெறும் பிரமையாகவே முடியும். இதனால் இப்போதுள்ள நிலை மையைக் காட்டிலும் எதிர்காலம் மிகவும் தாழ்வாகவே இருக்க நேரும். ஆகவே இந் நாட்டிடம் அன்பு செலுத்தி, அதற்குச் சேவை செய்ய வேண்டுமென்று விரும்புபவர் கள் கீழே யிருந்து மேல் வரையில் உண்மையான கல்வி அறிவை வளரும்படி செய்யவேண்டிய பொறுப்பை ஏற்க வேண்டி யிருக்கிறது.

தாய் நாட்டுக்குத் தன்னலமின்றி, தேச பக்தியோடு தியாகங்கள் பல புரிந்து சேவை செய்யப் பல சகோதர சகோதரிகளைத் தற்கால ஸர்வ கலாசாலைகள் உற்பத்தி செய்திருக்கின்றன. என்றாலும் இக் கல்வியினால் இந் நாட்டுக்கு நிரந்தரமான பலன்கள் கிடைக்கவில்லை. இதில் சந்தேகம் ஏதுமே கிடையாது, இது வேறு விதமாக இருப் பதற்கில்லை. இந்தக் கல்விக்கு மெக்காலே பிரபு அஸ்திவா ரம் போட்டார். சிற்சில மாறுதல்கள் ஏற்பட்டதைத் தவிர முதலில் எப்படி யிருந்ததோ அப்படியே தான் இந்த அஸ்திவாரம் அமைந்திருக்கிறது. பழைய தவறு களைத் திருத்த வேண்டுமானால் இந்தக் கல்வியின் அஸ்தி வாரத்தைப் பற்றி நாம் கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம்; நியாயமுறை காரணமாக முன் வந்து முயற்சி செய்யும் சிரத்தை, சுயேச்சை முதலிய அம் சங்கள் இல்லாத ஒரே குமாஸ்தாப் பட்டாளங்கள் ஏற் பட்டன. உண்மையான கல்வியின் நோக்கம் ஈடேற வில்லை. இதில் ஆச்சர்யப் படுவதற்கில்லை

ஆகவே 1902-ம் ஆண்டில் பாஞ்சாலத்தில் ஆர்ய சபை குருகுலத்தை ஸ்தாபிதம் செய்தது நியாயம். பொருத்தமும் ஆகும். ஒரு சின்ன ஆரம்பப் பாடசாலை யாகவிருந்த இது ஸர்வ லக்ஷணங்களுடன் இப்போது ஸர்வ கலாசாலையாகச் சோபிக்கிறது. உயர்தர வகுப்புக் கள் வரையில் மாணவர்கள் இங்கே இருந்தே படிக்கக் கூடிய முறையில் இந்தக் காலேஜ் அமைக்கப்பட்டுளது. 14 வருஷங்கள் வரையில் இங்கே பாட போதனை நடக் கிறது. டாக்டர் பட்டத்தைப் பெறுவதற்காக அதிகப் படியாக மேலும் 2 வருஷங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின் றன. அநேகமாக விசேஷமான கலைகளைப் பற்றியே இங்கு போதனை நடக்கிறது. சம்ஸ்கிருதப் படிப்புக்கு விசேஷ முக்யத்வம் அளிக்கப்பட்டுள்ளது. வேதங்கள், இந்திய வேதாந்தம், சமஸ்கிருதம், இலக்கியம், ஆங்கிலம், சரித்திரம், பொருளாதாரம், மேல்நாட்டு வேதாந்த முறை,

மதங்கள், ரஸாயனம் இவற்றைப்பற்றிய பாடங்களைப் பயில இங்கு வசதிகள் இருக்கின்றன. ஆயுர்வேத பாடசாலையும் இருக்கிறது 8-வது வருஷ முடிவிலோ அல்லது 10-வது வருஷ இறுதியிலோ ஒரு மாணவன் என்ஜினீயரிங் படிப்புக்கோ அல்லது சட்டப் படிப்புக்கோ போகக் கூடிய வரையில் உங்கள் பாட முறை அமைந்திருக்கிறது. இந்தியாவின் கலை மறுமலர்ச்சியை நோக்கமாகக் கொண்டிருக்கிறது பாடமுறை. சிந்தனையிலும், செயலிலும் தலைவர்களாக விருக்கக் கூடிய நிபுணர்களைத் தயாரிக்க வேண்டுமென்பது உங்கள் ஆசை தேசியத் துறையில் ஏற்கனவே புகழ் தேடிக் கொண்டிருக்கும் பலரை நீங்கள் இங்கிருந்து தயாரித்தனுப்பி யிருக்கிறீர்கள். வித்தைக்கு உறைவிடமாகவுள்ள இந்த ஸர்வ கலாசாலைக்கும் பிரபல ஞானியாகவும், தேசாபிமானியாகவும் விளங்கிய ஸ்வாமி சிரத்தானந்தருக்கும் தொடர்பிருந்திருக்கிறது. எனவே இங்கு வந்திருப்பதில் எனக்கு ஒரு தனி மகிழ்ச்சி. கங்கை நதிக்கரையிலே சிறந்த கட்டிடம இச் ஸர்வகலாசாலைக்குக் கட்டியிருக்கிறது. இது எல்லோருக்கும் நிரந்தரமான ருசியைத் தரக்கூடிய அமசம். உங்களிடம் பயிற்சி பெறுவோருக்கு ஏற்படக்கூடிய செலவு நமது ஏழை நாட்டின் தேவைகளுக்கு ஒத்தபடியும் இருக்கிறது. இவற்றையெல்லாம்விட உங்கள் ஸர்வ கலாசாலை தனிப்பட்ட முறையில் இருக்கிறது. இந்திய லட்சியங்களைப் பின்பற்றி இந்திய தேசாபிமானிகளையும், சிலர்களையும் தயாரிப்பதே இதன் நோக்கமாகும். உங்களுடைய சேவையைப் பாராட்டுவதுடன் எதிர்காலத்திலும் உங்களுக்கு நலம் வளரவேண்டுமென்று ஆசி கூறுகிறேன்.

பிரும்மச்சர்யத்தை அனுஷ்டிக்கவேண்டு மென்பது இந்த ஸர்வ கலாசாலையின் பிரதான அம்சம். இதற்காக உங்களை நான் பாராட்ட வேண்டும். படிக்கும் காலமும் பிரும்மசாரிகளாக விருக்கும் காலமும் ஒன்று சேர்ந்திருப்பது நம் நாட்டில் ஒரு தனிச் சிறப்பாகும். இது தேகத்

தைப் பற்றியதுமட்டுமில்லை. மனோ நிலையைப் பற்றியதுமாகும். பிரும்மசாரிகளை நீங்கள எவ்வளவுக் கெவ்வளவு பயிற்சி செய்து அனுப்புகிறீர்களோ அவ்வளவுக் கவ்வளவு அவர்கள் கிருஹஸத வாழ்வில் ஈடுபடும்போது பலன் கிட்டும் இது இந்திய வாழ்க்கைக்கு உறுதியான அஸ்திவாரம் போட்டதாகவும் இருக்கும்.

உங்களுடையதுதான் உண்மையான குருகுலம். குருகுலம் என்ற பதத்துக்கு ஆங்கிலத்தில் சிலர், "ஹாஸ்டல்" என்கிறார்கள். இது சரியான மொழி பெயர்ப்பாகாது. உபாததியாயர்கள், மாணவர்கள் சேர்ந்து வாழ்வதுடன் மட்டுமின்றி பிரிவினையாகாத அவிபக்த குடும்பத்தைப் போல் நீங்கள் இருக்கிறீகள். உண்மையான கல்விக்கு இது போன்ற வாழ்க்கையினால் ஏற்படக்கூடிய பலனைப் பற்றி அதிகம் சொல்ல வேண்டியதில்லை.

இந்தியாவிலுள்ள ஹிந்துக்களுக்கெல்லாம் கங்காநதி விசேஷமாகும். வாழநாளில் ஒரு பகுதியைக் கங்கைக் கரையிலேயும் வனப்புமிகுந்த அதன் சுற்றுப்பிரதேசங்களிலும் கழிப்பது ஒரு தனிப்பாக்கியம். இதற்காக நீங்கள் மிகவும் நன்றி பாராட்ட வேண்டும். இதைப் பரிபூர்ணமாகப் பயன்படுத்திக் கொள்ளவும் வேண்டும்.

இந்த ஸர்வகலாசாலையில் ஹிந்துஸ்தானியைக் கொண்டே பாட போதனை நடக்கிறது. இதுதான் நியாயமாக நடக்க வேண்டிய காரியம். ஹிந்துஸ்தானி எனக்குத் தெரியாது. ஆனால் சீக்கிரமாக ஹிந்துஸ்தானி இந்தியாவின் பொதுப் பாஷையாக வேண்டுமென்று விரும்புவோரில் நானும் ஒருவன். இங்குள்ள மாணவர்கள் படிப்பு முடிந்து வெளியே போகும்போது நாட்டில் இது பற்றிப் பிரசாரம் செய்வார்களென நம்புகிறேன்.

சமஸ்க்ருதம் விஷயத்தில் இங்கு அதிக சிரத்தையிருக்கிறது. அதற்குப் பிராதான்யம் அளிக்கப்பட்டிருக்கிறது. சமஸ்கிருத ஞானத்தைச் சிறிது அடைந்துள்ள எளிய மாணவன் என்ற முறையில் நான் இதற்காக உங்களைப்

பாராட்டுகிறேன். ஐரோப்பிய கலாசாரத்துக் கிரேக்க, லத்தின் பாஷைகள் எவ்வளவு முக்கியமோ அதைவிட இந்தியக் கலாசாரத்துக்கு சமஸ்கிருதம் முக்கியமான தாகும். சமஸ்கிருதம் மடிந்துபோன பாஷையன்று; இன்று கூட அது ஜீவனுள்ள பாஷையாக நடைமுறையில் இருந்து வருகிறது. போனதடவை நான் இங்கு வந்திருந்தபோது இங்கு சமஸ்கிருதத்தில் நடைபெற்ற விவாதத்தைக் கேட்டது ஞாபகமிருக்கிறது சமஸ்கிருதத்தை மீண்டும் பேசும் பாஷையாகச் செய்ய நீங்கள் செய்யும் முயற்சிக்குச் சகலவிதத்திலும் ஆக்கமளிக்க வேண்டியதுதான். இப்படி நான் சமஸ்கிருதத்தைப் பற்றிப் புகழ்ந்து பேசுவது அப் பாஷையிலுள்ள குருட்டு விசுவாசத்தால் அல்ல; இந்தியாவில் உண்மையான பிரஜையாக வாழ வேண்டுமானல் தற்காலத்திய ஒவ்வொரு பண்டிதருக்கும் சமஸ்கிருதம் அவசியமாகும் என்பது என் நம்பிக்கை. நமது வேதங்கள், இலக்கியங்கள், இதிஹாசங்கள் முதலிய அனைத்தும் சமஸ்கிருதத்தில் அமைந்திருக்கின்றன. சமஸ்கிருதத்தில் ஞானம் இருப்பது நமக்கு இலக்கியச் சிறப்பைத் தருகிறது. இதற்கு ஒரு உதாரணம் சொல்லுகிறேன், சமஸ்கிருதம் நிரந்திரமான அழகு படைத்த பூக்களுடன் கூடிய ஒரு நந்தவனம்; பூஞ்சோலை. அவ்வழியிலே நாம் வருஷக் கணக்கில் சஞ்சரிக்கலாம். சந்தோஷ மடையலாம். அலுப்போ சலிப்போ இல்லாமல் போதனையையும், உயர்வையும் அடையக்கூடும் சமஸ்கிருத இலக்கியம் சம்பந்தப்பட்ட வரையில் அதன் மகத்தான விசேஷம் வருமாறு:--

क्षणे क्षणे यन्नवतामुपैति
तदेव रूपं रमणीयतायाः ॥

உண்மை அழகின் தன்மை அது. ஒவ்வொரு நிமிஷமும் இது புதிது புதிதாக உருக்கொள்கிறது. எல்லா ஹிந்துக்களின் கலா நாகரிகத்துக்கும் சமஸ்கிருதம் ஒரு பொது

வான பிணைப்பு. இந்தியர்களுடைய கலைக்கு அது பொதுப்பிணைப்பாக வேணடும. இது ஹிமய மலையி லிருந்து கன்னியா குமரிவரையிலும், காமரூபத்திலிருந்து கராச்சி வரையிலும் பெருகி இருக்கவேண்டும்.

உங்களுடைய எளியவாழ்க்கை முறை என்னைக் கவர்ந்து விட்டது. தனக்குத்தானே உதவி செய்து கொளவதென்ற முறையைத் தொடர்ந்து பின் பற்றுகிறீர் கள். ஒருமைப் பாட்டைப் பின் பற்றுவதுடன் அதை வற்புறுத்தவும் செய்கிறீர்கள். இவையும் என் கவனத் தைக் கவர்ந்த அம்சங்களாகும். எளிய முறை என்பது ஹிந்துக்களின், இந்தியர்களின தனிச் சிறப்புக்குணம. இதை நாம் கொஞ்சம் கொஞ்சமாக நழுவவிட்டு வருகி ருேம். மீண்டும் அதைக் கடைப்பிடித்து நடக்க வேண்டும்.

ஒவ்வொரு ஸர்வ கலாசாலையிலும் தற்காலத்தில் போதிக்கப்படும கல்விமுறை காரணமாக நமது சகோதர சகோதரிகள் திக்கற்ற நிலைமையில் இருக்க நேரிட்டிருக கிறது. எனவே தனக்குத்தானே உதவி செய்துகொள் ளும் முறையை நீங்கள் பயில வேண்டியது அவசியம். இதனுல் சுயமதிப்புப் பெருக வழி ஏற்படும். ஒருமைப் பாடு என்பது தனிப்பட்டவருக்கும், தேசத்தாருக்கும் இருக்கவேண்டிய நற்குணமாகும். ஹோமம், ஸந்தியா வந்தனம் இவைபோன்று அன்ருடம் நீங்கள் கைக் கொண் டிருக்கும் அலுவல்களைக்கண்டு எனக்கு மிகத் திருப்தி. நவீன முறை என்றெண்ணிக் கொண்டு சிலர் இவைக ளெல்லாம் அனுவசியம் என்று வாதிக்கலாம். ஆனுல் வாதங்களுக்கு எட்டாத விஷயங்கள் பல இருக்கின்றன. இது போனற கிரியைகளினுல் தனிப்பட்டவருக்கும், சமூ கத்துக்கும், தேசத்துக்கும் ஏதாவது பலன் உண்டு என்று நம்புபவர்களைச் சேர்ந்தவன் நான்.

“சிரத்தானந்த சில்ப விதயாலயம்” என்ற பெயரில் தொழிற் கல்விக் காலேஜ் ஒன்றைத் திறக்கப் போவதாக

உங்களுடைய திட்டத்திலிருந்து அறிந்தேன். போதிய தொகை வசூலானதும் இதை ஆரம்பிக்கப் போவதாகவும் தெரிந்துகொண்டேன். இதற்காகப் பணம் கிடைக்குமென்றும், கூறிய விரைவில் தொழிற்கல்வி காலேஜ் ஆரம்பமாகும் என்றும் நான் நம்புகிறேன்.

இங்கே கீழ்த்தர வகுப்புகளிலிருந்தே சிறுவர்களுக்குத் தொழிற் கல்வி போதித்துப் பயிற்சி அளிக்கப்படுகிறது. சிறுவர்களின் கைகளுக்கும், கண்களுக்கும் பயிற்சியளிப்பது சிறந்ததே. தற்கால சரித்திரம், அரசியல், பொருளாதாரம், விஞ்ஞானம் முதலியவற்றிற்கும் அதிகமாகப் பிராதான்யம் அளிக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தற்காலப் பிரச்னைகளெல்லாம் சிறுவர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். தற்கால மனித வாழ்க்கையில் சிக்கல்கள் மலிந்திருக்கின்றன. பரிகாரம் தேடுவதே கஷ்டமாக இருக்கக்கூடிய முறையில் பிரச்னைகள் பல எழுகின்றன. தற்காலப் பொருளாதாரம், அரசியல் இவற்றிலும், விஞ்ஞானத்திலும் சிறுவர்களுக்கு ஞானம் இருந்தால்தான் அவர்களது கலவி பூர்த்தி பெற்றதாக இருக்கும். விஞ்ஞானத்தைப்பற்றி நான் இங்ஙனம் தெரிவிக்கையில் அது மனிதவர்க்கத்தை மிஞ்சி விட்டது என்பதை மறக்கவில்லை. 50 வருஷங்களுக்கு முன்னதாகத் தற்கால விஞ்ஞானத்துக்கு வழிகாட்டியாக இருந்தவர்கள் அறிவுத் துறையில் ஒவ்வொன்ருக வென்று வந்தனர். ஆனுல் இன்று விஞ்ஞானம் அதன் சிருஷ்டிகர்த்தாவையே அழிக்கும் ஒரு பூதமாகிவிட்டது. விஞ்ஞானம் மனிதவர்க்கத்தை நாசத்துறையில் திருப்பியிருக்கிறது. விஷவாயுப் பிரயோகம், விமானங்கள், குண்டு வீச்சு முதலிய நாசவேலைகளிலெல்லாம் நாகரீக நாடுகள் என்று சொல்லிக் கொள்பவை ஒன்றிற்கொன்று மோதிக் கொள்கின்றன. மனிதவர்க்கத்தினிடம் அன்பு கொண்டவர்கள் இது கண்டு திகைத்துக் கலங்கவேண்டியிருக்

கிறது. ஆனால் இந்தியாவில் மனிதவர்க்கத்துக்கு அனு சரணையாக விஞ்ஞானிகள் இருந்து வருகின்றனர். கூடிய விரைவில் இன்னும் பலர் தோனறவும் தோன்றுவர். இத் துறையில் இந்தக் குருகுலம் விசேஷமான தொண்டு இயற்றலாம். மனித வர்க்கத்தின் உன்னத லட்சியத்துக் குட்பட்டு விஞ்ஞான ஞானத்தை உபயோகிக்க வேண்டு மென்பதை நவீன விஞ்ஞானிகளுக்கு எடுத்துக் காட்ட லாம். விஞ்ஞானத்தை சமுதாய அழிவுக்கு உபயோகப் படாமல் தடுக்கவும் கூடும்.

தற்கால இந்தியர்கள் தங்களைப்பற்றிக் குறைவாக எண்ணம் கொள்கின்றனர். இதை விட்டொழிக்க வேண்டும். நமது பூர்விக உயர்வைப்பற்றி அகௌரவப் படும்படி ஏதும் கிடையாது. தற்போதைய நிலையில்கூட நாம் வெட்கப்படும்படி ஒனறுமில்லை. நாம் நேர்மையற்ற ஆட்சியில் சிக்கி, சிரமப்பட்டு, 150 வருஷங்களுக்கு மேல் பல கஷ்டங்களுக் காளாகி யிருக்கிறோம். இந்த நிலைமை வேறு எந்நாட்டிலேனும் இருந்தால் அந்நாடு மாய்ந்து மடிந்திருக்கும். ஆனால் நமது கலாசாரம், பூர்விகச் சிறப்பு, நமது உன்னத லட்சியங்கள் இவற்றின் காரண மாக நாம் இன்னும் வாழ்ந்து வருகிறோம். நம் நாட்டுக் குச் சுதந்திரம் கிட்டும் என்ற நம்பிக்கையும் இருக்கிறது. எனவே நீங்கள் சுயமதிப்பைத் தேடிக்கொண்டு அதைப் பராமரித்து வரவேண்டும். இந்த ஸர்வ கலாசாலையில் அதற்கான படிப்பு இருக்கிறது. அதைப் பூர்ணமாகப் பயன் படுத்திக்கொள்ள வேண்டியது உங்கள் கடமை. யுத்த மேகங்கள் சூழ்ந்திருக்கின்றன. இதற்கு மாற்று உடனே இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. ஹிந்துக் களின் கோட்பாடுதான் அதற்கு மாற்று. லோகம் க்ஷேமமாயிருந்தால் அது அனைவருக்கும் க்ஷேமத்தைத் தரும். இது நமதுநாடு சுதந்திர மடைந்த பின்னர்

தான் ஏற்படும். ஆகவே தாய்நாட்டின் விடுதலை பெறும் பெரிய காரியத்தில் நீங்கள் எல்லோரும் ஒத்துழைக்க வேண்டும். அரசியல் வாதிகள் மூலமே சுதந்திரம் அடைய வேண்டுமென்பதற்கில்லை. எல்லா இந்தியர்களும், எந்தத் துறையில் அவர்கள் இருப்பினும் ஒன்று சேர்ந்து அதைப் பெறவேண்டும். இந்த மகத்தான லட்சிய சித்திக்கு நாமெல்லோரும் சௌஜன்யமாக இருந்து வேலை செய்யவேண்டும்.

இந்திய தேச நிர்மாண வேலையில் இந்த ஸர்வகலா சாலைப் பட்டதாரிகள் அனைவரும் ஒத்துழைக்க வேண்டுமெனக் கேட்டுக்கொள்கிறேன். தற்காலப் பொருளாதார நாகரிகமே மனித வர்க்கத்துக்குச் சொர்க்கம் என்று சிலர் எண்ணுகின்றனர். இதை நான் வன்மையோடு எதிர்க்கிறேன்; ஆட்சேபிக்கிறேன். தேவைகளைப் பெருக்கிக்கொள்வதென்ற முறை உயர்ந்ததன்று. தங்கள் சரக்குகளைச் சீனு, இந்தியா முதலிய கீழ்த்திசை நாடுகளில் விற்ருல் அந்நாடுகள் திருப்தியோடு இருந்துவிடும் என்றெண்ணிய ஐரோப்பிய நாடுகளுண்டு. ஆனல் புதியதொரு விழிப்பேற்பட்டு ஒவ்வொரு நாடும் தன்னுடைய தேவையைத் தானே பூர்த்தி செய்துகொள்ளக் கூடிய நிலைமையில் இருக்கவேண்டுமென்ற எண்ணம் உதித்து விட்டது. சமீபத்தில் நடந்த உலகப் பொருளாதார மகா நாட்டின் தோல்வி இதற்கொரு உதாரணம். இந்தியாவில் நமது பொருளாதார க்ஷேமத்தை உத்தேசித்து புதியதொரு கோட்பாட்டை அனுஷ்டித்துப் பிரசாரம் செய்யவேண்டும், தேவைகளை வரையறையின்றிப் பெருக்கிக்கொண்டு போவதில் எனக்கு நம்பிக்கை கிடையாது. இந்தியாவில் 35 கோடிக்குமேல் ஜன சங்கியை இருக்கிறது. சராசரி இந்தியனுக்கு தினசரி ஒரு அணுவேனும் அதிகமாக வருமானம் கிடைக்கும்படி மட்டும் நாம் செய்துவிட்டால் நமது சிறிய பெரிய

கைத்தொழில் சரக்குகளுக்குப் பல வருஷங்கள் வரையில் போதிய கிராக்கி ஏற்படும்படி செய்து விடலாம். பெரிய தொழில்களை வளர்க்க வேண்டியதுதான். ஆனால் சிறிய தொழில்களை இன்னும் அதிகமாக வளர்ச்சி பெறச் செய்யவேண்டும். கிராமங்களைப் புனர் நிர்மாணம் செய்யவேண்டும். கிராம வாசிக்கு இப்போதிருப்பதை விடக் கொஞ்சம் அதிகமாக ஏதாவது செய்தால் அநேக மாக நாம பொருளாதாரப் பிரச்னையைத் தீர்த்துவிட்டது போலத்தான். இந்த முக்கியப் பிரச்னைகளைப் பற்றி யெல்லாம் நீங்கள் சிந்தித்து, பரிகாரத்துக்கு ஏதாவது வழி செய்ய வேண்டுகின்றேன்.

இந்த வருஷத்தில் பட்டதாரிகளாக ஆன நீங்கள் சம்பிரதாயப்படி கிருஹஸ்தாச்ரமத்துக்குள்ள யோக்யதையை அடைந்திருக்கிறீர்கள். இதில் விருப்பமுள்ளவர்கள் சஹ தர்மிணிகளுடன் கூடி இல்வாழ்க்கையில் ஈடுபட வேண்டுகிறேன். இந்திய ஸ்திரீகளின் ஸ்தானம் தற்கால சமூகத்தில் எப்படி உருவாகி வருகிறது என்பதை நாம் அறிவோம். பழைய எண்ணங்கள் மாறி, புதிய கருத்துகளுக்கு இடம் வேண்டுமென்று சொல்லுகின்றனர். பழைய கருத்துக்கும், புதியனவற்றிற்கும் முக்கியமான வேற்றுமை என்ன இருக்கிறது? நான் இலக்கியம் முதலியவற்றைப் படித்ததிலிருந்து ஸ்திரீகள் நமது வாழ்க்கையில் தனியாகவும், தேசியத்திலும் எப்பொழுதும் பெரும் கைங்கர்யத்தைச் செய்திருக்கின்றனர். இந்த லட்சியங்களை மீண்டும் கடைப்பிடித்து இந்திய ஸ்திரீகள் அங்ஙனம் நடக்கும்படி செய்யவேண்டும்.

ஆர்ய ஸமாஜம் இப் பிரச்னையைக் கவனித்து வருவதில் எனக்குச் சந்தோஷம். குருகுலங்களைத் தவிர அவர்கள் கன்னிகா பாடசாலைகளையும் நடத்தி வருகின்றனர். அங்கு நமது பெண்களுக்குச் சரிவரக் கல்வி போதிக்கப்படுகிறது. சுதந்திர நாடுகளில் உள்ளதுபோல நம் நாட்டிலும் இந்தத் தலைமுறையிலேயே சகோதர

சகோதரிகள் பல்வேறு துறைகளிலும் சேவைபுரியக் கூடிய காலத்தை நான் எதிர்பார்க்கிறேன்.

இவ்வருஷப் பட்டதாரிகளுக்கு ஒரு வார்த்தை. இந்தச் சர்வ கலாசாலையில் வாழ்க்கை உங்களுக்குக் கஷ்டமாக இருந்திருப்பினும் நீங்கள் அதனால் அனுகூலம்தான் அடைந்திருக்கிறீர்கள். இப்போது உங்களது உடலும், உள்ளமும் வேகத்தோடும், விருவிருப்போடும் இருக்கும். உங்களிடம் நிறைந்துள்ள ஞானம், கலையின் ஸாரம் இவற்றுடன் எட்டத்திலுள்ள கிராமங்களுக்குச் செல்லுங்கள். அங்கு உங்களுக்குப் பக்கத்திலிருப்பவர்களுக்கு இன்பம் பெருகும்படி செய்யுங்கள். கலை, படிப்பு, விவேகம் இவற்றுடன் நீங்கள் வாழவேண்டும். நல்ல ஆங்கில, சம்ஸ்கிருத, ஹிந்தி புஸ்தகங்களைப் படிக்கும் வழக்கத்தை விட்டு விடாதீர்கள். படித்தவர்களுக்குக் கிடைக்கும் மிகப் பெரிய வரப்பிரசாதம் இது. அப் பழக்கத்தை நீங்கள் விடாது பின்பற்றி நடக்க வேண்டும். பெரிய பிரச்னைகளைப்பற்றியும் நீங்கள் அடிக்கடி சிந்திக்க வேண்டும் நமது நாட்டினரால் பரிகரிக்கப்பட வேண்டிய பிரச்னைகள் பல இருக்கின்றன. அப்பிரச்னைகள் தீருவதற்குப் படித்து நன்கு சிந்திக்கக்கூடிய சகோதர சகோதரிகள் அதிகமாகத் தேவை. சுத்தமாயிருத்தல், வாழ்க்கையில் சகல துறைகளிலும் நாணயமாயிருத்தல், நாட்டுக்காகவும் நல்ல லக்ஷ்யங்களுக்காகவும் தியாகம் செய்யத் தயாராயிருத்தல் முதலியவற்றைப் பற்றி நீங்கள் நமது சகோதர சகோதரிகளுக்கு வலியுறுத்த வேண்டும். நமது புராதன வீரர்கள் உடல் வலியிலும், மனவலியிலும் கொண்டிருந்த திறமைகளை நினைவுபடுததிக்கொள்ள வேண்டும். நீங்கள் வகுப்பு உணர்சசியே இல்லாமல் இருக்கும் மனோபாவத்தை வளரச்செய்துகொள்ள வேண்டும். ஒரு பிரபல ஹிந்து வென்றால் அவர் பிரபல இந்தியராகவும இருக்கவேண்டும். ஒவ்வொரு நாள காலையிலும் உங்கள் ஸர்வகலாசாலையில்

நீங்கள் "எங்கள் படிப்பு எங்களை ரக்ஷிக்க வேண்டும்; எங்கள் சக்தியை ஒருமித்து வளர்க்க வேண்டும் எங்களுக்குப் புகழ் கிட்டி, துவேஷமும் பொறாமையும் விலகும்படி செய்யவேண்டும்" என்று பிரார்த்தனை செய்கிறீர்கள். இதைவிடச் சிறந்த லக்ஷ்யம் வேறு இருக்க முடியாது. இவற்றை எல்லாம்விட முக்கியமான விஷயத்தை புத்தித் துறையில் பிரபல்யமாக விளங்கும் இச் ஸர்வகலாசாலை மாணவர்களுக்குத் தெரிவிக்க வேண்டும். அதாவது காயத்ரி மந்திரத்தின் விசேஷத்தைக் குறிப்பிடுகிறேன். காயத்ரி மந்திரம் உலகத்திலேயே மிகச் சிறந்த, சுய மதிப்புள்ள, புத்தி பூர்வமான பிரார்த்தனை என்பது என் அபிப்பிராயம். அந்த மந்திர ஜபத்தை அனுஷ்டிப்பது நலம் தரும்.

# சலனக் காட்சிப் படங்கள்

*பம்பாயில் கூடிய அகில இந்திய சலனப்பட காங்கி ரஸின் அக்கிராசனப் பிரசங்கம். 7—9—1939.*

இந்த மகாநாட்டிற்குத் தலைமை வகிக்கும்படி வர வேற்புக் கமிட்டியார் என்னை அழைத்ததற்காக நன்றி யுள்ளவனுயிருக்கிறேன். 25 வருஷங்களுக்கு முன்பு இந் நாட்டில் முதன் முதலாக ஸினிமாப் படம் தோன்றிற்று. சினிமாத் தொழிலின் வெள்ளிவிழா நடத்துதற்குரிய அளவு இத் தொழில் அடைந்துள்ள சிறப்புக்காகப் பாடு பட்ட சகலருக்கும் என் பாராட்டுதலைத் தெரிவித்துக் கொள்ள விருமபுகின்றேன். இந்தியாவில் மட்டுமல்ல. உலகத்திலேயே இந்திய ஸினிமா உன்னத ஸ்தானம் அடைவதற்கு எனனென்ன சீர்திருத்தங்கள் அவசியம், என்னென்ன கஷ்டங்களை நிவர்த்தித்தாக வேண்டும் என நீங்கள் நன்கு அறிந்திருப்பீர்கள். நான் உணமையை உரைக்க வேண்டுமாளுல் இதுவரையில் அடைந்துள்ள வெற்றிக்குக் காரணமாயிருந்த முதலாளிகள், பண உதவி செய்தவர்கள், டைரக்டர்கள், கதை எழுதியவர்கள், ஸ்டூடியோ நிபுணர்கள், நடிக நடிகைகள சகலருக்கும் என் நன்றியைச் செலுத்த வேண்டியது அவசியமாகும்.

அரசியல் விஷயங்களில் பிரதான கவனம் செலுத்த வேண்டிய நாட்டில் கலைக்கு என்ன ஸ்தானம் அளிக்க வேண்டும என்பதை முடிவு செய்வது சற்றுக் கடினமான விஷயமே. நம்முடைய நாட்டின் தனிப்பெருமை என்ன வென்ருல் தேசிய இயக்கம் சகல துறைகளிலும் வியாபித் திருப்பதால் கலைக்குப் பிரதான ஸ்தானம் கொடுக்க யாவரும் தயாராயிருக்கின்றனர். புராதன காலத்தி லிருந்து நாளது வரையில் சங்கீதம் நமக்கு எப்பொழு

துமே ஒரு தனிக் கவர்ச்சி யளித்து வந்திருக்கிறது. அதே மாதிரி நாடகமும் நம் உள்ளத்தைக் கவர்ந்து வருகிறது. காதுக்கும் கண்ணுக்கும் ஏககாலத்தில் விருந்தளித்து வருவதால் பேசும் படம் நம் நாட்டில் பாகவதமாயிருக்கத் தான் போகிறது அதன் எதிர்காலமும் ஒளி நிறைந்ததா யிருக்கப் போகிறது

தாங்கள் முன்னேற்றமடையாததற்குப் பிறரை குறைகூறுவதும், எல்லாம் முன்வினைப்பயன் என்பதும் நம் நாட்டில் சர்வசகஜம. முன்னேற்றத்திற்குத் தடையா யிருப்பது நீங்களல்ல, பிறர்தான் என்பதை நான் அறி வேன் அந்தத் தடைகளை நிவர்த்திக்க வேண்டியது அவசி யந்தான். அவைகளைத் பற்றிக் குறிப்பிடுமுன் நீங்களா கவே செய்து முடிக்கவேணடிய விஷயங்களைப் பற்றி முதலில் குறிப்பிட விரும்புகிறேன். நீங்கள் முன்னேற்ற மடைவதற்கு நிரம்ப இடமிருக்கிறது. இன்று ஐக்கிய அமெரிக்காவில் 20,000 ஸினிமாக் கொட்டகைகள இருக் கின்றன. அவைகளுக்கு ஒவ்வொரு வாரமும் 10 கோடி மக்கள் சென்று வருகின்றனர்.

அவர்கள் இந்தத் தொழிலில் போட்டிருக்கும் முதலின் மூலம் 3,00,000 மக்கள் பிழைத்திருக்கின்றனர். நம் நாட்டில் 1000 தியேட்டர்களுக்கு மேலில்லை. படத் தயாரிப்பு, வினியோகம், தியேட்டர் நிர்வாகம் மூன்றிலு மாகச் சேர்ந்து சுமார் 17 கோடி ரூபாய் முதல் போட்டிருக் கிறீர்கள். இம்மூன்று துறைகளிலும் ஈடுபட்டிருப்பவர் கள் எண்ணிக்கை சுமார் 40,000 இருக்கும். நம்முடைய ஜனத்தொகையைக் கவனித்தால் இனனும எவ்வளவோ பேர் இதன் மூலம் பிழைப்பதற்கு இடமிருக்கிறது. ஆகை யால் பேசும் படத்தை இன்னும் அதிக ஜனங்கள் பார்க் கும்படி செய்வது உஙகள் கடமையாகும். மனிதன் சந்தோஷம் அனுபவிக்க ஆவல் கொண்டிருக்கிறான். நியாயமான வழியில் பொழுதுபோக்குவது உழைப்புக்குத் தடையாயிருக்கும் என்று கூறுபவர்களைக் கண்டால்

எனக்குப் பிடிப்பதில்லை. வாழ்க்கை எனும் கனவில் மனோராஜ்யத்திற்கு உற்சாகமளிப்பதுதான் புத்திசாலித் தனம் என்று கோல்டார்மிக் என்கிற ஆங்கில ஆசிரியர் கூறுகிறார். அது முற்றிலும் உண்மை. வேலைக்கு இடையே சற்று உல்லாஸமாகப் பொழுதுபோக்கினால் வேலையே மேன்மையடையும். மற்றக் கலைகளையெல்லாம் விட உங்களுடைய கலையின் எதிர்காலந்தான் மிகவும் சிறப் பாயிருக்கப்போகிறது. உங்களுடைய தயாரிப்புச் செலவு அதிகமாயிருந்தாலும, நவீனத் தயாரிப்பு முறைகள் புதிதாக வரவர இந்தச் செலவு இன்னும் அதிகரிக்கும் எனபது வாஸ்தவமானாலும் மக்களுக்கு மிகச் சொல்ப மான செலவில் உயர்ந்தவிதமான களிப்பை அளிக்கக் கூடிய சக்தி உங்கள் கையில் இருக்கிறது. நமது தேசம் உள்ள ஏழ்மையான நிலையில் நீங்கள் அவர்களுக்கு சுலப மாகக் களிப்பூட்டலாம். அவர்கள் அறிவை வளர்க்க லாம், மனத்திருப்தி உண்டாக்கலாம்.

நான் ஏதோ உங்களுக்குக் கட்டளையிடுவதாகவோ ஹிதோபதேசம் செய்வதாகவோ நீங்கள் எண்ணிவிட லாகாது. ஆனால் பட முதலாளிகளுக்கும் பண உதவி செய்பவர்களுக்கும் போதிய அளவு ஒத்துழைப்பு இருக் கிறது என்று கூறமுடியாது. பண ஆதாய சம்பந்தமாக நீண்ட கால திட்டம் ஒன்று நீங்கள் வகுத்துக்கொள்ள வேண்டும். நீண்ட காலத்தில் போதிய அளவு லாபம் சம்பாதிக்க வேண்டுமென்பது உங்கள் கொள்கையா யிருக்க வேண்டுமே ஒழிய, போட்டவுடனே ஏராளமான லாபம் கிடைக்கவேண்டும் என்று எதிர்பார்க்கலாகாது. இதிலே சில கஷ்டங்கள் இருக்கலாம். ஆனால் இவ்விஷ யத்தில் சர்க்கார் உஙகளுக்கு உதவி புரியவேண்டும நல்ல படங்களைப் பார்க்கும் ஆவலை விருத்தி செய்தால் அம்மாதிரிப் படங்களைத் தயாரிப்பதில் பணம் படைத்த வர்கள உதவி செய்ய முன் வருவார்கள் என்பது நிச்சயம். இவ்விஷயத்தில் நவீன முறையில் கட்டப்பட்ட சினிமா

தியேட்டர்கள் நிரம்ப அமைக்கப்படவேண்டும். அன்னியரை இந்நாட்டில் தியேட்டர் கட்டவிடுவதில் அபாயமிருக்கிறது. இம்மாதிரி விஷயங்களில் சர்க்கார் தலையிடுவது ஒரு புறமிருக்க, வியாபாரப் போட்டிதான் முடிவாக இம்மாதிரி தகராறுகளைத் தீர்க்க முடியும். ஆகையால் நம்முடைய தியேட்டர்களின் வசதி, படங்களின் மேன்மை இவைகளைக் கொண்டே போட்டியைத் தவிர்க்க வேண்டும்.

மேலும் உயர்ந்தபடங்கள் தயாரிப்பதற்கு பணம் நிரம்ப வேண்டும். ஆனால் இதிலும் அபாயம் இருக்கிறது என்று கூறலாம். அபாயத்திற்கு அஞ்சினால் லாபமில்லை என்னும் பழமொழி பழைய காலத்திலிருந்த மாதிரியே இன்றைக்கும் பொருந்தும். பிற நாடுகள் முக்கியமாக அமெரிக்கா மாதிரி நம்நாட்டுப் படங்களும் உன்னத நிலை அடைய வேண்டும். நம் நாட்டில் இயற்கை வசதிக்கோ மனிதர்களுக்கோ குறைவில்லை. நம் நாட்டில் காணும் மாதிரி இயற்கை வனப்பு வேறு எந்த நாட்டில் காணமுடியும? உணர்ச்சி மிக்க நடிகர்கள நம் நாட்டிலிருப்பதுபோல் வேறு எந்த நாட்டில் கிடைப்பார்கள்? அதனால் அகில இந்தியாவுக்கும் கவர்ச்சியளிக்கும் படங்களை எடுக்க முயற்சி செய்யும்படி உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். இவ்விஷயத்தில் பாஷைச் சங்கட மிருக்கிறது என்கிறதை உணர்கிறேன். எல்லா மாகாணங்களும் ஒன்று சேர்ந்து ஹிந்துஸ்தானியில் ஒரு படமும் ஆங்கிலததில் ஒரு படமும் எடுத்தால் இந்தியா பூராவிலும உலகமெங்கும் இதற்குக் கிராக்கி ஏற்படும். நான் தொழிலில் சம்பந்தப்பட்டவனில்லா விட்டாலும், ஒரு யோசனை கூற விரும்புகிறேன். "பழைய இந்தியாவும் எதிர்கால இந்தியாவும்" எனும் தலைப்புக்கேற்ப ஒரு படம் பிடிப்பதில் நீங்கள் யாவரும் ஒன்றுபட வேண்டும். வேத காலத்திலிருந்து தற்காலம் வரையில் நம்சரித்திரத்தில் நவரஸம் பொருந்திய பல சம்பவங்கள் நிகழ்ந்திருக்கின்

றன. எல்லா மாகாணங்களிலுமுள்ள சிறந்த அறிவாளி களின் ஒத்துழைப்பைப் கொண்டு, சுத்த இந்திய சங்கீதத் தையும் உன்னத நடிப்பையும் பார்த்து ஹிந்துஸ்தானி யிலும் ஆங்கிலத்திலும் படமெடுத்தால் இந்தியாவிலும் உலகமெங்கும் அந்தப் படத்தைப் போட்டிப் போட்டுக் கொண்டு வாங்கவும் பார்க்கவும் வருவார்கள். எப்படியும் இந்த முயற்சியைச செய்துபார்க்க வேண்டும். இவ்விஷ யத்தில் சினிமோடகிராப் கமிட்டியின் சிபார்சை சர்க்கார் ஒப்புக்கொள்ள வேண்டும். பம்பாயைத் தலைமை இட மாகக் கொண்ட ஒரு மத்திய சினிமாக் கமிட்டி நிறுவ வேணடும என்று இவர்கள் கூறுகிறார்கள. இந்தியப் படத் தயாரிப்பு, வினியோகம் இரு விஷயஙகளிலும் இந்தக் கமிட்டி கவனம் செலுத்த வேண்டும். மத்திய சர்க்கார் மாகாண சர்க்கார்கள் சினிமாத் தொழிலில் ஏதாவது செய்ய விரும்பினால் அந்த முயற்சிகளை ஒருமைப்படுத்த இந்தக் கமிட்டி முயற்சி செய்ய வேண்டும. இதற்கான பணத்தை மாகாண சர்க்கார்கள் கொடுத்து உதவ வேண் டும். இதற்கு வருஷாந்திர செலவு சுமார் 5 லட்சம் ஆகும் என்று இநதக் கமிட்டி கணக்கிட்டிருப்பதுடன் இந்தச் செலவை மத்திய சாக்கார் மாகாண சர்க்கார்கள், ஸ்தல ஸ்தாபனங்களை, தணிக்கைக் கட்டணத்தில் மிச்சமாவது இவைகளைக்கொண்டு ஈடுசெய்து விடலாம் என்று இவர் கள கூறியிருக்கின்றனர். இந்தச் சிபார்சுகளை சர்க்கார் ஏற்றுக்கொளளும்படி உஙகள் காங்கிரஸ் கிளர்ச்சி செய்யவேண்டும்.

நம்நாட்டில் எழுதப்படிக்கத் தெரியாதவர்கள் அநே கர் இருக்கின்றனர். அவ் அறியாமையைப் போக்க சினி மாவை உபயோகித்துக் கொள்ளலாம். கல்வி சம்பந்த மான படங்கள் ஓரளவு காட்ட வேண்டும் என்று சினிமாக் கமிட்டியினர் கூறியிருக்கின்றனர். இந்த விஷயத்தில் மாகாண சர்க்கார்கள் தியேட்டர்காரர்களை இப்படங் களைக் காட்டும்படி கட்டாயப்படுத்த வேண்டும். இதில்

நிவர்த்தி செய்ய முடியாத கஷ்டங்கள் அவ்வளவு இருப்பதாகத் தோன்றவில்லை.

உங்களுடைய தொழிலை முடிந்தமட்டில் 100க்கு 100 சுதேசியாகச் செய்யவேண்டும். உடை, ஜோடனை சாமான்கள், நகைகள் எல்லாம் சுதேசியாயிருக்க வேண்டும். ஸ்டூடியோ சாமான்கள் இந்தியாவில் செய்யும் நாள் வரும் வரையிலும, அவை தவிர மற்றவைகளெல்லாம் சுதேசியா யிருக்கவேண்டும். நாளடைவில் இதுவும் லாபகரமாயிருக்கும்.

இந்தியரல்லாதவர்கள் உங்கள் தொழில் நிர்வாகத்தைக் கைப்பற்ற முயலக்கூடும்; அது கூடாது. நாட்டு நலனுக்கு அது விரோதமானது. இம்மாதிரி அபாயம் ஏற்பட்டால் அதைத் தவிர்ப்பதற்கு சர்க்கார் தயாராயிருக்க வேண்டும் என்று சினிமோடகிராப் கமிட்டியினர் கூறியுள்ளனர். அவர்கள் எதிர்பார்த்த அபாயம் இன்று நெருங்கி விட்டது. இந்த அபாயத்தைக் கண்டித்து, சர்க்கார் இதைத் தவிர்க்கவேண்டும் என்று கிளர்ச்சி செய்யுங்கள்.

'பிலிம் இந்தியா' பத்திரிகை இந்தியர்க்கு விரோதமான படங்களை எதிர்த்துச் செய்துவரும் கிளாச்சிக்காக அதன் ஆசிரியரைப் பாராட்டுகிறேன். இந்தத் திறமையை இந்திய அரசாங்கத்தாரும் உணர்ந்திருக்கின்றனர். ஆனால் அதைத் தடுப்பதற்கான சாதனங்களை அவர்கள் தேடிக் கொள்ளவில்லை வெளிநாட்டுப் பிலிம்களை உண்மையான இந்திய அபிப்பிராயத்திற்கேற்ப தணிக்கை செயத பிறகு தான் இந்தியாவில் காட்டவேண்டும் என்று திட்டம செய்து அதற்கான ஏற்பாடுகள் செய்ய வேண்டும். இந்தியாவை இழிவு படுத்துவதே தொழிலாகக்கொண்டு சில அன்னிய ஸ்தாபனங்கள் வேலை செய்துவருகின்றன. ஆகையால் இவ்விஷயத்தில் சர்க்கார் தக்க நடவடிக்கை எடுததுக்கொள்ளுமபடி நீங்கள் வற்புறுத்த வேண்டும்.

இவ்விஷயத்தில் சர்க்கார் செய்வதைவிட சுயமதிப்புள்ள இந்தியர்கள், இம்மாதிரி நம்மனதைப் புண்படுத்தும் அந்நியருக்கும பாடம் கற்பிக்கலாம் மேல்நாட்டுப் படங்களால் நமநாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள் எவ்வளவோ கெட்டுவிட்டன.

இந்த நிலைமை மாறவேண்டுமானல் நீங்கள் நல்ல படங்களைப் பிடித்து அவைகளின் உயர்வினல் நம் ஜனங்களின் ருசியை மாற்ற வேண்டும். ஒவ்வொரு இந்திய தியேட்டரிலும் ஓரளவு இந்தியப் படங்களைக் காட்டும்படி திட்டம் செயயவேணடும என்று சிலர் கூறுகின்றனர். இதைப்பறறி உங்கள கருதது என்னவோ எனக்குத் தெரியாது. ஆனல் படக் கட்டுப்பாட்டைவிட, நமது படததின் உயர்வினல் நிலைமையை மாற்றுவதே சிறந்தது என்று நான் கருதுகிறேன்.

உங்கள் தொழில் சம்பந்தமான பிரச்னைகளைப்பற்றி அதில சம்பந்தப்படாத ஒருவன் என்கிற முறையிலேயே நான் பேசியிருக்கிறேன். ஆகையால் உங்களிடையே தொழில் சம்பந்தமாக என் கருத்துக்கள் சிலவற்றைத தெரிவிக்க விருமபுகிறேன். இந்தத தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுள பூரண ஒததுழைப்பு இருக்கிறது என்று நமபுகிறேன். இததொழிலைவிடக் கஷ்டமானது வேறு இருக்கமுடியாது. ஜனங்கள மனதைக் கவாந்து அவாகள உளளத்தைக் கிளறி அவர்கள் அறிவை வளர்க்கும் கதைகள் வேண்டும புராணக் கதைகள போதிய அளவு எடுத்தாகிவிட்டது. இவைகளை நான் வேண்டாமென்று சொல்லவில்லை. நம்முடைய சரித்திரக் கதைகளையும சினிமாவுக்குப் பிரயோசனப்படுத்திக் கொள்ளவேண்டும் என்றுகூற விரும்புகிறேன். சமூக, அரசியல், பொருளாதார சம்பந்தமான படஙகளும் எடுக்கவேண்டும். அமெரிக்க அல்லது பிறநாட்டுப் படங்களுக்கு சமமான மேன்மையுள்ள படங்கள எடுக்கவேண்டும். உங்களுடைய சிறந்த படங்களைப் பார்த்து ஆனந்த மடைந்

திருக்கின்றேன். ஆனால் சங்கீதத்தைவிடப் படிப்புக்கும் பிராதானயம் கொடுத்து, உணர்ச்சி ஊட்டும் படங்களுக்குச் சிறப்பு அளித்தால் நன்றாயிருக்காதா என்று கேட்கிறேன். இந்தக் காங்கிரஸ் மூலம் சினிமாத் தொழிலுக்கு நன்மை ஏற்படும் என்று எண்ணுகிறேன். ஏற்கனவே நான் கூறியுள்ளபடி மத்திய சர்க்காரும் மாகாண சர்க்கார்களும் தங்கள் கடமைகளைச் செய்ய வேண்டும். அம்மாதிரி நீங்களும் செய்ய வேண்டும். ஜனங்கள், சர்க்கார் இருதரத்தாரின் ஆதரவாலும் பிற நாடுகள்போல் இங்கும் சினிமாத் தொழில் உன்னத நிலையடைந்து இந்தியப் படங்கள் இங்கும் எங்கும் காட்டப் பட்டு சீரும் சிறப்பும் கொண்டு விளங்கும் என எதிர்பார்க்கிறேன். இதன் மூலம் இந்தியாவின் புராதன லட்சியமாகிய "அழகு தான் ஸத்தியம், ஸத்தியமே அழகு" என்பதை உலகெங்கும் பரப்புவதற்கு உதவினவர்களாவீர்கள்.

# பேச்சுக் கலை

[மைசூர் பத்திரிகையாளர் கூட்டத்தின் மத்தியில்]

பொதுஜன ஊழியர்கள் பத்திரிகைகளுக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறார்கள். அதனால்தான் இன்று உங்கள் முன் பேச நான் சம்மதித்தேன். பத்திரிகைகளில்லா விட்டால் அரசியல் வாதிகள் பேசுவதை ஆயிரக் கணக்கான மக்கள் படிக்க முடியாது. தென் இந்தியா சிறந்த பத்திரிகைக்காரர்களை சிருஷ்டித்திருப்பது பற்றி நாம் பெருமை கொள்ளலாம். அவாகளால் தான் இந்தப் பக்கத்தில் பொதுவாழ்வு மிகவும் உயர்ந்த நிலையில் இருக்கிறது.

சம்பாஷணையைச் சுவாரஸ்யமாக நடத்துவது ஒரு தனிக் கலை.

இந்தத் துறையில் இந்தியாவில் தலை சிறந்தவர்கள் மகாத்மா காந்தியும் கனம் ஸ்ரீனிவாச சாஸ்திரிகளும் ஆவர். எதிரிலிருப்பவர்களுக்குக் கேட்கும் அளவுக்கு மேல் தொனியை உயர்த்தாமல் பேசும் இயற்கை சக்தி ஆங்கிலேயருக்கு இருப்பது போல இவர்களுக்கு இருக்கிறது. நான் சாதாரணமாக ஆங்கிலேயரைப் புகழ்வதில்லை. ஆனால் இவ்விஷயத்தில் அவர்களைப் புகழவேண்டி யிருக்கிறது. அவர்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டிய மற்றொரு விஷயம் என்னவெனில், ஒரு சமயத்தில் ஒருவர் தான் பேசவேண்டும் எனும் வழக்கத்தை ஏற்படுத்திக்கொண்டால், நீண்ட நேரம் சுவாரஸ்யமாகச் சம்பாஷிக்கலாம் என்பதாகும். பேசினவனே பேசிக் கொண்டிருந்தால் தன் கருத்தைப் பிறர் ஒப்புக்கொள்ளும்படி ஆகிவிடும் என்கிற நம்பிக்கையை இந்த நாட்டில் தான் காணமுடியும்.

பொதுமேடையில் பேசுகையில், பேசுபவர், சபையினரில் தாமும் ஒருவர் என்று எண்ணிக்கொண்டு அவர்களு

டைய ஆசாபாசங்களைப் பிரதிபலிக்க முயற்சி செய்ய வேண்டும். பொது மேடைப் பிரசங்கம் அததியாவசியம் என்பதை நான் பூரணமாக நமபுகிறேன். செயல்தான் முக்கியம், பேச்சு பிரயோஜனமற்றது என்று சிலர் ஓயா மல் சொல்லி வருவதை நான் அறிவேன். நம்மில் மிக உயர்ந்தவர்கள்கூட, ஏன், இங்கு நம்முடனிருக்கும் சர். ஸி. வி ராமன்கூட பாஷையின் உதவியின்றித் தம் எண் ணங்களை வெளியிட முடியாது சரித்திரத்தில் பிரசிதநி பெற்றவர்கள் எல்லாரும சிறந்த பிரசஙகிகளாய் இருந் திருக்கின்றனர். பேச்சுவன்மை இல்லாதவர்கள தான் அதை இழித்துக் கூறுவார்கள்.

கலாசாலைகளில் மாணவரின் முன் பேசுவது பேச்சு வகைகளில் மிகவும் சுலபமானது. கட்டாயம் வகுப்புக்கு வந்தாக வேண்டியது, நெட்டுருப் போடுவது முதலியவை களினால் பள்ளிக்கூடங்களில் பேசுபவர்கள் குறிப்புகளி லிருந்து படிக்கும்படி யாகிவிட்டது. உண்மையிலே வகுப்புகளில் பேசுவது என்றிருந்தால் மூளை மிகச் சுறு சுறுப்பாக வேலைசெய்யும் சொல்லுவதை இருவகைகளில் சொல்லலாம். அவைகளில் சர்வகலாசாலைகளில் இலக்கி யச் சுவையுடன் கூறுவதுதான் சிறந்தது.

கிரிமினல் வழக்கு விசாரணைகளில் ஜூரிகளின் உணர்ச்சியைக் கவரக்கூடிய மேதையுள்ள வக்கீல் பேசி னால் அநியாயங்கள்கூட நியாயமாகத் தோற்றும்படி செய்துவிடலாம்.

வக்கீல் பேசுவதைக் கேட்பவர்கள் சாமானியமான வர்களல்ல. நீதிபதிகள், கண்ணில் விளக்கெண்ணையை ஊற்றிககொண்டு பார்ப்பார்கள். சந்தேகக் கண்ணுடன் கவனிப்பார்கள், கோபமாகக்கூட இருப்பார்கள். எதிரி வக்கீல் தமக்கு எதிரிலுள்ள வக்கீலின் வாதத்தில் குற்ற கண்டு பிடிப்பதற்காகவே அமர்த்தப்படுகிறார். தடுத்துப் பேசுவது பயனளிக்கும் என்று பொதுவாக வக்கீல்கள் எண்ணுகிறார்கள். ஆனால் இது உண்மையல்ல. குறுக்கே

பேசுவது மரியாதைக் குறைவு. பொறுமையின்மையைக் காட்டுகிறது. சில சமயம் எதிரி வக்கீலுக்கு உற்சாக மூட்டி அவர் பேச்சுக்கு அதிக மதிப்பை யளிக்கிறது.

எவ்வளவோ இடைஞ்சல்கள் இருந்த போதிலும் நீதி ஸ்தலத்தில் பேசும் கலையை கஷ்டப்பட்டு வளர்க்க வேண்டும். ஏனெனில் கோர்ட்டுகளிலும்கூட பேச்சின் நடைக்கு மதிப்பு உண்டு.

'ஜனநாயகத்தின் அடிப்படை, விவாதம் மூலம் அரசு புரிவது.' 'எதிராளியைக் குழப்பி, திருப்பி, மனம்மாறும் படி செய்யும் சக்தி உள்ளவன், பலம் பொருந்திய நிலைமை யில் இருக்கிறான்'

புத்திசாலிகள் நிறைந்த ஒரு சபையினரை நாம் விரும்பினால் சிரிக்கவும் அழவும் செய்து ஆட்டிவைக்கும் சக்தி பேச்சுக்கலைக்கு உண்டு. சங்கீதத்திற் கடுத்தபடியா கப் பேச்சுக்கலை எளிதிற் கிடைக்கக்கூடாத பேறு என்று நான் கருதுகிறேன். நல்ல திறமை உள்ள சங்கீத வித்வா னுக்கடுத்தபடியாக உயர்குணமும், பேசும் சக்தியும் வாய்ந்த பொதுஜனசேவகன் ஜனசமூகத்திற்கே நன்மை செய்தவனாகிறான். 'பேசும் வார்த்தையும் சங்கீதமும் போல, புஸ்தகமோ சித்திரமோ இயற்கைக் காட்சியோ மனதைக் கவர முடியாது.' ஹனுமானுடைய பேச்சுத் திறமையை ஸ்ரீ ராமச்சந்திர மூர்த்தி வர்ணித்திருக்கிறார். அதிலடங்கியிருக்கின்றன உயர்ந்த பேச்சாளியின் லட்ச ணங்கள். சிறந்த பிரசங்கியா யிருக்க வேண்டுமானால் சிறந்த இலக்கியங்களைப் படிக்க வேண்டும். சிறந்த பிர சங்க வன்மையைப் பெறுவதற்குச் சுலபமான வழி கிடையாது. வேகமாகப் பேசுவது உயர்ந்த பிரசங்கமாகி விடாது. உயர்ந்த எண்ணங்களை உன்னதமான, இலகு வான வகையில் சொல்லுவதுதான் சிறந்த பிரசங்க முறை யாகும்.

மற்றக் கலைகள் போல் பேச்சுக்கலைக்கும் ஓரளவு மேதை வேண்டும். ஆனால் பயிற்சியினால்தான் பெரிதும்

வன்மை பெறலாம். 'சிறந்த பிரசங்கிகளாக விரும்புவர்கள் நிரம்பப் படிக்கவேண்டும்.'

இதைப் பண்படுத்தும் நிலையங்கள் இந்தியாவில் ஏற்படவேண்டும். இந்த அம்சத்தை ஒருவரும் கவனிப்பதில்லை. உபாத்தியாயரின் குரலோசையிலிருந்துதான் அவருடைய திறமை மதிப்பிடப் படுகிறது. வீட்டில்கூட குழந்தைகளிடம் நாம் மெல்லிய குரலில் பேசுவது இல்லை. பள்ளிக்கூடங்களில் தொனிப்பயிற்சி, பாடததில் ஒரு பகுதியாயிருக்க வேண்டும். வசீகரமான குரல் பேச்சுத் துறையில் பாதி வெற்றி யளிக்கும். பெரிய சபையில் பேசுகையில் தலைகுனிந்து கொண்டும் பேசலாகாது. உயரப் பார்த்துக் கொண்டும் பேசலாகாது. நேரே பார்த்துக் கொண்டு பேசவேண்டும். அப்பொழுது தான் கடைசி வரிசையில் உள்ளவர்களுக்கும் கேட்கும். விஞ்ஞான முறையில் நான் கூறும் யோசனை சரியோ இல்லையோ, அனுபவத்திலிருந்து பார்த்தால் இதுதான் சிறந்தது என்று கூறமுடியும்.

நல்ல பிரசங்கிக்கு நல்லபாஷா ஞானம்வேண்டும். ஓழிந்த வேளைகளில் அகராதியையோ பூகோளப் படங்களையோ பார்த்துக்கொண்டிருங்கள். ஒவ்வொரு தடவையும் ஆகராதியைப பார்க்கையில் ஒரு புது வார்த்தையோ, அல்லது ஒரு பழைய வார்த்தைக்குப் புது அர்த்தமோ தெரிந்து கொள்ளலாம்.

தாய் பாஷையில் சிறப்பாகப் பேச வேண்டுமானுல் சமஸ்கிருத ஞானமும் அவசியம் வேண்டும்.

சமஸ்கிருதத்தில் அழகாகச் சொல்ல முடியாத அபிப்பிராயங்களே இல்லை. பவழத்தில் முத்துக் கோர்த்தாற்போல் இருக்கும், பேச்சுநடுவில் சமஸ்கிருதபதங்களை உபயோகிப்பது.

சபையினருக்கு மரியாதை செலுத்தவேண்டுமானுல் பிரசங்கத்தை முன்கூட்டியே யோசித்துக் குறிப்புகள் எழுதிக்கொள்ள வேண்டும். எப்படி ஆரம்பிப்பது, எப்

படி முடிப்பது, எப்படி முடிப்பது என்பதைத் தெரிந்துகொள்வது பிரசங்க வெற்றிக்கு இன்றி யமையாதது. இதற்குச் சபையினர் மனப்பான்மையைத் தெரிந்து கொண்டு அவர்களுடன் ஒருமைப்பா டடைய வேண்டும். பேச்சில் சுடச்சுடப் பதில் சொல்வதும் ஹாஸ்யரசமும் வேண்டும். அசம்பிளியில் கேள்வி நேரந்தான் முக்கிய மானது. ரஸமானதும்கூட. இவ்விஷயத்தில் ஸர் ஜேம்ஸ் கிரிக் தான் சர்க்கார் கட்சியில் மேதை நிறைந்த பேச்சு வன்மை யுள்ளவர்.

ஒரு சமயம் ஸர் ஆட்டோஹோமியர் அறிக்கைபற்றி வாதிக்க அசம்பிளியில் பிரத்தியேகக் கூட்டம் ஒன்று வேண்டுமென்று சபைத்தலைவரைக் கேட்டேன். உடனே ஸர் ஜேம்ஸ் கிரிக் எழுந்திருந்து, "தலைவர் அவர்களே! சர்க்காரும் ஏதாவது கொஞ்சம் வேலை செய்ய வேண்டாமா?" என்று கேட்டார். உடனே அங்கிருந்த அனைவரும் கொல்லென்று சிரித்து விட்டார்கள்.

ரேடியோவில் பேசுபவர்கள் குறிப்பை வைத்துக் கொண்டு பேச அனுமதிக்கப்பட வேண்டும். ஏற்கனவே பிரசங்கத்தை எழுதிவிட்டு விஷயம் புரியாதவர்கள் அதை மேற் பார்வை பார்த்த பிறகு பேசினால் ரேடியோப் பிரசங்கங்கள் சுவாரஸ்யமாய் இருக்காது.

நம்முடைய ஜனங்களின் அபிப்பிராயங்களை உருவக மாக்குவது, அவர்கள் உணர்ச்சியைத் தூண்டுவது மிக அவசியமாகத் தெரிந்துகொள்ள வேண்டிய கலை. எதிர் கால இந்தியாவில் பேசத் தெரிந்தவன் முக்கிய ஸ்தானம் வகிப்பான். அரசியல் துறையில் ஆவேசத்துடன் பேச வேண்டும். எதிராளியின் அபிப்பிராயத்தைப் பற்றிக் கவலைப்படலாகாது. எதிராளி மிக நல்லவன், அவனைவிட நான் இன்னும் சற்று நல்லவன் என்று கூறினால் வோட்டுக் கிடைக்காது. எதிரியிடம் நியாயமாய் நடந்து கொள்ளலாம். ஆனால் சதா எதிரியைப் பற்றியே நினைத் துக்கொண்டு நம்மைப்பற்றி சிந்திப்பதற்கே அவகாச மில்லாமல் போய்விட்டால் நன்றாய் இருக்காது.

# "கல்வி"

[ஹைதராபாத் நைஜாம் காலேஜில் செய்த பிரசங்கம்]

சுயராஜ்யம் சித்திக்க வேண்டுமென்பது எனது முதலாவது ஆசை; அடுத்தபடியாக நான் ஆசைப்படுவது கல்வி. இந்த ஆசையில் ஓர் முறையும் சேர்ந்தே இருக்கிறது. நமக்குக் கூடிய சீக்கிரம் சுயராஜ்யம் கிட்டப் போகிறது. அப்போது போதிய தேசாபிமானமுள்ளவர்கள் நிர்வகித்தாலன்றி சுயராஜ்யம் பயனுள்ளதாக இராது. சீலம், ஞானம், சேவா பக்குவம், இந்தக் குணங்கள் பொருந்தி, உரிய ஸ்தானங்களுக்குத் தக்க நபர்களைத் தெரிந்தெடுத்து ஆதரிக்கக்கூடியவர்கள் இதற்கு அவசியம். இப்படிப்பட்டோரை நாம் தயார் செய்யவேண்டும். இல்லையானால் அதிகாரத்துவத்தைவிட ஜனநாயகம் மோசமாகிவிடக்கூடும். நமது நாட்டைச் சீரான முறையில் புனருத்தாரணம் செய்யும் வேலையில் முனைந்திருக்கும் ஆசிரியர்கள், மாணவர்கள் இவர்களையெல்லாம் சந்தித்துப் பேசுவதில் எனக்கு எப்போதும் ஆனந்தம்.

நமது நாடு உலகிலேயே நல்ல கல்வியறிவுடைய நாடுகளில் ஒன்ருகத்தான் விளங்கியது. இப்போது பல துறைகளில் க்ஷீணமுற்றிருந்தாலும், ஒரு காலத்தில் இந்தியாவில் விஞ்ஞானிகள், வேதாந்திகள், தீர்க்கதரிசிகள் முதலியவர்கள் பெருமைகொள்ளும்படியாக உதித்தார்கள். இன்றுகூட இந்தியாவில் இவர்களுக்குப் பஞ்சமில்லை. முன்போல இப்போது இல்லையென்ருல் அதற்கான காரணங்கள் பல, அவைபற்றி இப்போது பேச இடமில்லை. ஜனக்கணிதக் கணக்கின்படி இந்தியாவில் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களின் தொகை 100க்கு 10 வீதம் என்று புள்ளி விவரம் தரப்பட்டிருக்கிறது. இதையும்

நம்புவதற்கில்லை. உண்மையாக 100க்கு 5 பேர்தான் எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள். சிறிது எழுத்தறிவு மாத்திரம் வந்துவிட்டால் கல்வி அறிவு பெற்று விட்ட தாகாது ஆகவே உலகத்திலுள்ள எல்லா நாடுகளையும் விட இந்தியாவில் இப்போது கல்வி அறிவு குறைவு என்பது திண்ணம்.

கலவி அறிவு பெருகுவதற்கு, கட்டாய ஆரமபக் கல்வி சம்பந்தமாகச் சர்க்கார் தன்னுடைய கடமையை ஏற்றுக்கொள்ளவேண்டும். 6 முதல் 14 வயதுவரை சிறுவர் சிறுமிகளுக்குக் கல்வி அறிவு உண்டாக்குவதற் காகச் சர்க்கார் தங்கள் வருமானத்திலிருந்து ஏற்பாடு செய்யவேண்டும். இது அவர்களது முதல் கடமை. இங்கிலாந்தில் அப்படி நடக்கிறது. இந்தியாவிலும் அதேபோல் நடக்கவேண்டும். ஒவ்வொரு கிராமத்திலும் நல்ல பள்ளிக்கூடம் ஒன்றிருக்கவேண்டும். ஒவ்வொரு குழந்தையும் கட்டாயமாக அப்பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டும. இது என்னுடைய லக்ஷ்யம்.

தற்போதுள்ள ஆரம்பக் கல்வி முறையில் சில குறை பாடுகள் இருக்கின்றன. குளிர்ச்சியான வேளைகளில்லா மல் காலை 10 மணிக்குப் பள்ளிக்கூடம் ஆரம்பமாகிறது. உஷ்ணம் கொதிக்கும்படியான காலத்தில் பாடசாலையில் வேலைகள் நடக்கின்றன. நமது நிலைமைகளையும், அபார ஏழமையையும் அறியாதவர்கள் போட்ட திட்டப்படிக் கட்டிடங்கள், மேஜை நாற்காலிகள் இவை வேண்டு மென்ற ஒருவித விருப்பம் நமது கல்விமான்களிடம் உதித் திருக்கிறது. கோயில்கள், மசூதிகள், மாதா கோயில்கள், தாம சாலைகள் இவற்றைச் சாக்கார் தங்கள் வசப்படுத்திக் கொள்ளவேண்டும். அங்கே பள்ளிக்கூடங்களை நடத் தும்படி செய்யவேண்டும். இதுபோன்ற வசதிகள் இல்லாத இடங்களில் வேறு கட்டிடங்களுக்கு வகை செய்யலாம் மத சம்பந்தமாகவுள்ள கட்டிடங்களை அறிவு வளர்ச்சிக்குரிய புனிதமான வேலைக்கு உபயோகப்

படுத்தக்கூடாதென்று எந்த மதமும் தடைவிதிப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

முயற்சியும், சுறுசுறுப்புமுள்ள புத்தகப்பிரசுரகர்த்தர்கள் எப்படியோ பாடபுத்தக கமிட்டியாரின் நன்மதிப்புக்குப் பாத்திரமாகிவிடுகின்றனர். ஒவ்வொரு வருஷமும் பாடப் புத்தகங்களை மாற்றும்படி செய்துவிடுகிறார்கள். அடிக்கடி ஏன் இந்தமாதிரிப் புத்தகங்களை மாற்ற வேண்டும்? ஆரம்பத்தில் சில வருஷங்கள்வரையில் பாடப் புத்தகங்கள் எதற்காக என்பதே எனக்குத் தெரியவில்லை. குழந்தைகளின் ஞாபக சக்தியை முதலில் வளரச் செய்யவேண்டும். இதற்குப் பாடப் புத்தகம் அவசியமில்லை. பின்பு வேண்டிய பாடப் புத்தகங்களைத் தேசிய மயமாக்கவேணடும். செலவைத் தாங்கமுடியாமல் கஷ்டப்படும் பெற்றோர்களிடமிருந்து புத்தக வியாபாரிகள் பெருவாரியான பணம் பெறுகிறார்கள். சர்க்காரின் கல்வி இலாகாவே நல்ல எழுத்தாளர்களைக்கொண்டு எழுதச் செய்த புததகங்களை வெளியிட்டு, அடகக விலைக்கு அவைகளை விற்று, அதன் மூலம் பெற்றோர்களின் கஷ்டத்தைக் குறைக்கவேண்டும்.

அடுத்த விஷயம் உபாத்தியாயர்கள். மாணவர்களைக் காட்டிலும் உயர்வாக இப்போது உபாத்தியாயர்கள் இல்லை. காலேஜ் வகுப்புக்களை நடத்துவதற்கு மட்டும்தான் சிறந்த கல்விமான்கள் அவசியம் என்று அதிகாரிகள் எண்ணுவது விசித்திரமானது. குழந்தைகளுக்குப் போதிப்பதற்கு யார் வேண்டுமானாலும் இருக்கலாமென்று அவர்கள் எண்ணுகின்றனர். இது மிகவும் தவறான அபிப்பிராயம். அதிகாரிகள் கொண்டுள்ள மேற்படி முறையைத் திருத்தி அமைத்துக் கொள்வது அவசியம். 6 மாதமோ அல்லது 1 வருஷமோ பயிற்சி பெற்ற புத்திமான்களான பட்டதாரிகளைக் கிராமங்களுக்கு அனுப்பி அவர்களுக்குப் போதுமான ஊதியம் கொடுத்து, குழந்தைகளை அன்போடு கவனித்துப் பாடங் கற்பிக்க ஏற்பாடு

செய்வது நலம். இது என்னுடைய திட்டம்; அனுபவ சாத்தியமான ஏற்பாடுதான் இது. ஆனால், இவ்வகையில் மிகக் குறைந்த பட்சமான செலவுக்குக்கூட சர்க்கார் பெருந்தொகையைக் கடனாகப் பெறவேண்டியிருக்கும். எப்படியாயினும் இது செய்யத்தக்கதே.

கிராம வாழ்க்கையில் இன்று பள்ளிக்கூடங்கள் முக்கியமான அம்சமாக விளங்கவில்லை. பெற்றோர்களும் உபாத்தியாயர்களும் ஒத்துழைக்கும் பக்ஷத்தில் பள்ளிக் கூடங்கள் எல்லாம் கிராமங்களில் சமூகத்துக்கும், புத்திக்கும், இலக்கியத்துக்கும் பொருத்தமான இடங் களாக விளங்கும். இதெல்லாம் சொப்பனவாழ்வுபோலத் தோன்றலாம். ஆனால் இதைச் செய்யாவிட்டால் படிப் பின்மை என்ற குறையை நிவர்த்திக்க முடியாது.

இனி முதியோர் கல்வி விஷயமாக சர்க்காரும், பொது விஷயங்களில் சிரத்தை உடையவர்களும் ஒன்று சேர்ந்து மேலே சொன்னது போல் ஒரு இயக்கத்தை ஆரம்பிக்க வேண்டும். புத்தகசாலை இயக்கம் நடந்து வருகிறது. இதை நடத்துபவர்களிடம் எனக்கு அபார மதிப்புண்டு. ஆனால் ஒன்று கேட்கிறேன். படிக்கத் தெரியாதவரிடம் புத்தகத்தைக் கொண்டுபோய்க் கொடுப்பது அவமானகர மல்லவா? ஊர் ஊராகச் சுற்றக்கூடிய புத்தக சாலைகள் இப்போது நமக்கு வேண்டியதில்லை. சுற்றுப் பிரயாணம் செய்து கல்வி அறிவைப் பெருக்கக்கூடிய நபர்கள்தான் வேண்டும். தற்போது வைத்திருக்கும் பள்ளிக்கூட நேரங்களை மாற்றினால் வகுப்புக்கு வரும் மாணாக்கர்கள் தொகை பெருகுமென்று எண்ணுகிறேன். தங்களுடைய படிப்பு முடிந்தவுடன், பாரம்பர்யமான தங்கள் தொழில் களைத் தொடர்ந்து செய்ய வேண்டும் என்ற எண்ணம் மாணவர்களுக்கு இருக்கும்படி பாடசாலைகள் அவர்களுக் குப் பயிற்சி அளிக்க வேண்டும். படித்தவர்கள் என்று ஒரு புதிய ஜாதி சிருஷ்டிக்கப்பட்டிருக்கிறது. சம்பிர தாயத்தை ஒட்டிய அம்சங்கள்கூட இல்லாத கோஷ்டி

அது. ஒவ்வொருவரும் தம்முடைய சக்திக்கு மீறிய முறையில் வாழ விரும்புகிறார்கள். எனவே கல்வி, கூடுமான வரையில் சொற்பச் செலவில் கிட்டக்கூடிய முறையில் அமைய வேண்டும்.

உயர்தரப் பாடசாலைகள் நல்ல இடத்தில் இல்லை; அவைகளில் போதிய சிப்பந்திகளும் இல்லை, சாதனங்கள் குறைவு, சர்க்கார் பள்ளிககூடங்கள் கூடாதென்று நான் சொல்லவில்லை. ஆனால் அப் பள்ளிக்கூடங்களில் பணக்காரர்களுக்கு மட்டுமின்றி நல்ல புத்திசாலிகளுக்கும் இடமிருக்க வேண்டும் இதனால் ஆளுவோருக்கும் ஆளப்படுவோருக்கும் நலனுண்டு

சென்னையிலே 3-வது பாரம் வரையில் ஸ்தல பாஷையைக்கொண்டு பாடங்களைப் போதிப்பதெனபது ஏற்பாடு. 4-வது பாரம் முதல் 6-வது பாரம் வரையில் ஆங்கிலத்திலோ அல்லது ஸ்தல பாஷையிலோ அவரவர் இஷ்டத்தைப் பொறுத்து போதனை பெறலாம் சுமார் 100 பள்ளிக்கூடங்களில் இதுவரை இஷ்டத்தைப் பொறுத்துப் போதனை செய்யும் விஷயம அமுலில் இருந்து வருகிறது. இதன் பலன் திருப்திகரமாகவே இருக்கிறது. மாணவர்களுக்கு அவர்களுடைய பாஷையில் போதித்தால் நல்ல பலன்தான் கிட்டுகிறது. இதர பாடங்களை ஸ்தல பாஷையில் போதித்தால் மாணவர்கள் ஆங்கிலப் பாடத்தில் தனிக்கவனம் செலுத்துவது சாத்தியம். இதன் மூலம் அதில் ஞானம் அபிவிருத்தி யடைகிறது. எல்லாப் பாடங்களையும் ஆங்கிலத்தில் போதிப்பது எனபது தற்போதைய வழக்கமாக இருக்கிறது. ஆங்கிலப் பாடம் போதிப்பவர்தான் அதில் நிபுணத்வம் பெற்றிருப்பா. மற்றப் பாடங்களைப் போதிப்பவர்கள் அப்பாஷையில் தீவிரமான பாண்டித்திய மில்லாமல் இருப்பாகள. ஆகவே மாணவாகளுக்கும் 5, 6 விதமான வகை இங்கிலீஷில பாடபோதனை நடக்கிறது! இதனால் எது இங்கிலீஷ் என்றே தெரியாமல் திகைக்க வேண்டியிருக்

கிறது! ஸ்தல பாஷையில் மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்கும்போது வகுப்பில் சூழ்நிலையே மாறுதல் அடைகிறது. பாடங்கள் எல்லாம் ருசிகரமாக அமைகின்றன. வேலையையும் துரிதமாகச் செய்ய முடியும். ஸ்தல பாஷையைக் கொண்டு போதிப்பதால் உபாத்தியாயர்களுக்கும் மாணவர்களுக்கும் புத்தி பூர்வமாக ஏற்படக்கூடிய பளு குறைந்துவிடுகிறது.

எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முறை சூன்யம் பிடித்த வேளையில் ஆரம்பமாயிற்றுப்போலும்! இப்போது இம் முறை ஒரு நோயால் அவதிப்படுவதுபோல் இருந்து வருகிறது. இதற்கு நேரான வழி ஒன்றிருக்கிறது. அதாவது படிக்க வரும் மாணவர்களை மூன்று தரமாகப் பிரிக்கவேண்டும். ஒவ்வொரு பிரிவுக்கும் தனித்தனியாகத் திட்டம் ஏற்பாடு செய்யவேண்டும். (1) சர்வ கலாசாலைப் படிப்புக்குத் தகுதியுடையவர்கள் (2) எஸ். எஸ். எல். ஸி. யுடன் தங்களுடைய படிப்பைப் பூர்த்தி செய்பவர்கள் (3) தொழில் துறையில் பயிற்சிபெற விரும்புவர்கள். எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களில் 100க்கு 20 பேர்தான் சர்வகலாசாலைப் படிப்புக்குப் போகிறார்கள். நான் மேலே சொன்ன கடைசிப் பிரிவில், சென்னை சர்வகலாசாலையும், அநேகமாக ஆந்திரா, அண்ணாமலை ஸர்வகலாசாலைகளும் சங்கீதம், தச்சுவேலை இவற்றைக் காலேஜில் பாடங்களாக வைக்கத் தகுதி உள்ளவை என்று ஏற்றுக்கொண்டிருக்கின்றனர். ஹைஸ்கூல்களுக்கெல்லாம் பண உதவி செய்வதெப்படி? ஆரம்பக் கல்வி இன்னும் அதிகமாக வியாபிக்க வேண்டுமானால் ஸெகண்டரி ஸ்கூல்கள் எல்லாம் தங்களுடைய செலவைத் தாங்களே சரிக்கட்டிக் கொள்ளக்கூடிய நிலைமையில் இருக்கவேண்டும்.

தொழில் துறையில் உள்ள கல்விபற்றி எனக்கு அவ்வளவு பற்றுதல் கிடையாது. சர்க்காரும் முதலாளிகளும், தேசத்தை வளர்ப்பதற்கான தொழில்களில் பணம் போட வந்தாலன்றி தொழில் துறையில் கல்வி அறிவுபெற்ற

பட்டதாரிகளைப் பெருக்குவதில் பயனில்லை. அப்படிச் செய்தால் பிரச்னை இன்னும் அதிகச் சிக்கலாகிவிடும்.

பெண்கள் கல்வியை எடுத்துக்கொள்ளலாம். வக்கீல்களாகவும், டாக்டர்களாகவும் பிராபல்யமடையும் ஸ்திரீகளின் கல்விபற்றி நான் சொல்லவரவில்லை. நமது ஸ்திரீகளைப் பொதுவாகப் படிக்கவைக்கவேண்டியதுதான். ஆனால் அதிகமாக எதுவும் கூடாது. இந்தியப் பெண்கள் விவாஹமாகித் தாய்மார்களாக வேண்டியது சாதாரணமாக இருந்து வரும் அம்சம். நமது ஸ்திரீகளுக்கு எந்த விதமான படிப்பு வேண்டுமென்பதைப் படித்த ஸ்திரீகளைக் கலந்தாலோசித்துச் செய்யவேண்டும். விஷயம் தெரிந்த ஸ்திரீகளின் ஒத்துழைப்பில்லாததால் இன்று இந்திய சமூகம் கஷ்டப்படுகிறது. ஸ்திரீகளும், புருஷர்களோடு சேர்ந்து ஒத்துழைக்கத் தலைப்பட்டால் நிச்சயமாக முன்னேற்றம் பெருகும்.

இங்குள்ள மாணவர்கள் தென்னிந்தியாவிலிருப்பதைப்போலில்லாமல் ஆரோக்கியசாலிகளாக இருக்கிறார்கள். அவர்களை நான் பாராட்டுகிறேன். தேக வலுவைத் தேடிக்கொள்வதில் இங்குள்ள மாணவர்களுக்குப் புகழுண்டு. அதை அவர்கள நிலைபெறச் செய்துகொள்ள வேண்டும். தங்களுடைய பெற்றோர்கள் செய்யும் தியாகங்கள் காரணமாக அநேக மாணவர்கள் படிக்கின்றனர். எனவே அவர்கள் எல்லோரும் தங்களுடைய ஒழுக்கத்தையும் சீலத்தையும் வளரும்படி செய்துகொள்ள வேண்டும். தங்கள் பெற்றோர்கள் தங்களுக்காகப் படும் கஷ்டங்களும், செய்யும் தியாகங்களும் வீண்போகவில்லை என்பதை நிரூபிக்க வேண்டும். தேசாபிமான உணர்ச்சி இருப்பது ஒரு பெரிய நற்குணம். நாம் ஒவ்வொருவரும் நமது தாய்நாட்டின்பால் அன்பு செலுத்த வேண்டும். அது நாம் நாட்டுக்குச் செய்ய வேண்டிய பெருங் கடமை. தாய் நாட்டைக் கண்டு நாம் பெருமைப்பட வேண்டும்; வெட்கப்படக் காரணம் எதுவுமே

கிடையாது. எதிர்காலம் உங்கள் கையிலிருக்கிறது. உங்கள் படிப்பு விஷயத்தில் நீங்கள் கவனம் செலுத்த வேண்டியதுதான்; ஆனால் நாட்டிற்கு ஏதாவது ஒரு பெரிய நெருக்கடி ஏற்படுமானால் அதற்குத் தகுந்தாற் போல் நடந்துகொள்ள வேண்டிய பொறுப்பு உங்களுக் கிருக்கிறது. அதை மறந்து விடாதீர்கள். 1914–19 வருஷத்திலே சாம் ராஜயத்தின் கதி மிக்க நெருக்கடியா யிருந்தது. அப்போது இங்கிலாந்தில் காலேஜ் மாணவர்கள் என்ன செய்தாகள் தெரியுமா? தங்கள் படிப்பை விட்டார்கள். தங்களைத் தாங்களே பின் வருமாறு கேட்டுக் கொண்டார்கள் :— "இங்கிலாந்து வீழ்ந்தால் யார் வாழ்வார்? இங்கிலாந்து வாழ்ந்தால் யார் வீழ்வார்?" இதை நீங்கள் மனதில் வைத்துக்கொண்டு இந்தியா வீழ்ந்தால் யார் வாழமுடியும்? இந்தியா வாழ்ந்தால் நமக்கெல்லாம் க்ஷேமம் என்ற கொள்கை யோடு நடக்கவேண்டும.

# ஓய்வு நேரத்தை வீணாக்குதல்

ரேடியோ பிரசங்கங்கள், மக்களின் கவனத்தை இழுக்கும் விஷயங்களைப் பற்றினவையாக இருக்க வேண்டும். 'ஓய்வு நேரத்தை வீணாக்குதல்' என்பது இத்தகைய விஷயங்களிலே ஒன்று. ஓய்வு நேரத்தைச் செலவிடுவது, சோம்பேறித்தனமாக வீண் பொழுது போக்குவதோ, அல்லது ஒன்றுமே செய்யாதிருப்பதோ அல்லது காலத்தை எதில் செலவழிப்பது எனத் தெரியாமல் திணறிக் கொண்டிருப்பதோ அல்ல. கடுமையாகவும் இடைவிடாமலும் உழைப்பதே, ஓய்வின் மறு அம்சமாகும். கடுமையாக உழைத்து இடைவிடாமல் வேலை செய்யும் ஒவ்வொருவருக்கும், அவர் ஆணாயிருந்தாலும் சரி, பெண்ணாயிருந்தாலும் சரி ஓய்வு அவசியமாகும்.

வேலை நேரத்தில் நல்ல முறையிலும் உருப்படியாகவும் வேலை செய்ய வேண்டுமானால், ஓய்வு நேரத்தைச் சிறந்த வகையில் உபயோகிக்க வேண்டியதும் அத்யாவசியமானவைகளில் ஒன்று. ஆனால் இந்தத் தேசத்தில் உள்ள ஒரு துர்ப்பாக்கியம் என்னவென்றால், நம்மில் மிகச் சொற்பமான பேர்களுக்குத்தான் போதுமான வேலை இருக்கிறது. அதிகமான வேலையுள்ளவர்கள் ஓய்வு நேரத்தைப் பற்றியோ அல்லது அதை எப்படிச் சிறந்த முறையில் கழிப்பதென்பதைப் பற்றியோ சிந்திப்பதே கிடையாது.

நான் முன் கூறியது போல, ஓய்வு நேரம் என்பது வேறு, சோம்பேறித்தனமாகப் பொழுது போக்குவதென்பது வேறு. ஆகவே வீண் பொழுது போக்குவதைப் பற்றி நான் இப்பொழுது பேசப் போவதில்லை. ஏனென்றால், வீண் பொழுது போக்குவதென்பது எந்த வகையில்

கழிந்தாலும் சரி, அது வீண்தான். ஆகையால் தான் ஒரு கவி, "சோம்பேரிகள் செய்யாத தீய காரியங்கள் சில வற்றைப் பேய் செய்துவிடுகிறது" என்று சொன்னார். இதில் "சோம்பேரிகள" என்பதற்குப் பதிலாக "சோமபேரித்தனம்" என்று மாற்றிக்கொள்ள வேண்டும்.

சிலர் வேலை செய்யாமலிருக்கும் போது, தங்கள் நேரத்தையோ நாட்களையோ ஓய்வாகக் கழிக்கிறார்கள. இவாகளும்கூட, தங்களுடைய ஓய்வைச் சரியான முறையில் செலவழிக்காமல் போகக்கூடும். நம் நண்பர்களிடமும் பகைவர்களிடமும் உள்ள கெட்ட சுபாவங்களைப்பற்றிச் சிந்திப்பதும் விவாதிப்பதும் ஒரு தீய பழக்கமாகும். சிற்சில சமயஙகளில், நமமுடைய நண்பர்களாயிருந்தாலுமகூட அவர்களைப்பற்றி அவதூறு சொல்லுவதில் நாம் மகிழ்ச்சி அடைகிறோம பிறர் அவதூறாகப் பேசும்போது நாம் இன்னும் அதிகமாக மகிழ்ச்சி அடைகிறோம். இதைததான் புறங் கூறுதல் என்று கூறுவார்கள்.

பெண்களிடந்தான் இந்த சுபாவம் அதிகமென்று ஆண்கள் சொல்லுவது வழக்கம், பெண்களிடம் கேட்டால், இவ்விஷயத்தில் ஆண்கள் பெண்களுக்குச் சளைத்தவர்களலலா என்று கூறுகிறார்கள். பெண்கள், ஆண்களிடம் இக் குறையைக் காண்கின்றனர். பெண்களிடம் ஆண்கள் இக் குறையைக் காண்கின்றார்கள். எப்படியிருந்தபோதிலும், இருபாலரும் இக்குறையை ஒப்புக்கொள்வதில்லை.

ஆனால் என்றைக்கேனும் ஒருநாள் மாலையில் ஓர் ஆடவர் சங்கத்துக்கோ அல்லது பெண்கள் கழகத்துக்கோ நாம் போவதாக வைத்துக்கொள்வோம. அங்கே சிலர் வெளியிலோ அல்லது உள்ளேயோ ஏதேனும் விளையாட்டில் ஈடுபட்டிருக்கிறார்கள். மற்றவர்களில் பலர் எதுவும் செய்யாமல் 'சும்மா' இருக்கிறார்கள். அவர்கள்

நாற்காலியில் உட்கார்ந்துகொண்டோ அல்லது உலாவிக் கொண்டோ பேசிக்கொண்டிருப்பார்கள். அவர்களுடைய பேச்சைக் கவனித்தால், அது அநேகமாகப் பெரிய விஷயங் களைப் பற்றியதாகவோ அல்லது சிறு விஷயங்களைப் பற்றியதாகவோ இருக்காது. மற்றவர்களுடைய அந்த ரங்க வாழ்க்கையைப் பற்றியும், அல்லது கிராமத்திலோ மாகாணத்திலோ தேசத்திலோ அந்த ஊரிலோ பேசப் படும் புது அவதூறான விஷயத்தைப் பற்றியுந்தான் பெரும்பாலும் இருக்கும். இதுதான் வீண் பொழுது போக்குவதென்று நான் குறிப்பிடுகிறேன்.

எல்லா மனிதரும் நல்லவர் என்றோ கெட்டவர் என்றோ நான் சொல்ல வரவில்லை. நம்மில் பெரும்பா லோர் தீயவர்களென்பதைக் கடவுள் அறிவார். ஆயினும் அடியோடு கெட்ட ஆடவர்களோ பெண்களோ, யாருமே கிடையாதென்பதை யாவரும் அறிவர். நாம் அனைவருமே சிற்சில சமயங்களில் குற்றம் செய்கிறோம். நல்ல சுபாவங் களுடன் இருக்கும்போது, எல்லாரும் மிக நல்லவர்க ளாகவே இருக்கிறோம். நாம் நன்றாக யோசித்து தாராள நோக்கமுடன், ஆண்களையும் பெண்களையும் பற்றி அவரவர்க்கு உரியதைவிட சற்று அதிகமாகவே புகழ்ந்து பேச முயன்றால், அவர்களிடம் உள்ள குறைகளைச் சற்றுக் குறைவாகக் கண்டிக்க முயன்றால், நம் ஓய்வு நேரத்தில் அவர்களைப்பற்றி அவதூறாகப் பேசாமல் இருந் தால், பிறர் அவதூறாகப் பேசும்போது அதைச் செவி கொடுத்துக் கேட்டு மகிழ்ச்சி யடையாமலிருந்தால், மொத் தத்தில் உலகத்தில் உள்ள எல்லா மக்களுமே தற்போதுள் ளதைவிட இன்னும் மேலானவர்களாக விளங்குவார்க ளென்பது என் கருத்து. சம்பந்தப்பட்ட மக்களுக்குத் தீமை பயப்பதோடல்லாமல், மனித சமுதாயத்தையே பொதுவாகக் கவனிக்கும்போதும் இதனால் தீங்குதான் விளைகிறது.

இதைத்தவிர மற்றவர்களைப்பற்றி நாம் பேசும்

போது, நம்மைப்பற்றியும் நாம் சிந்திக்கவேண்டும். உங்களை மற்றவர்கள் எப்படி நடத்த வேண்டுமென்று நீங்கள் விருமபுவீர்களோ, அதுபோலவே நீங்கள் மற்ற வர்களையும் நடத்தவேண்டும். உங்களைப்பற்றி மற்ற வர்கள எவ்விதம் பேசவேண்டுமென்று நீங்கள் விரும்பு வீர்களோ, அவ்விதமே நீங்களும் மற்றவர்களைப் பற்றிப் பேசவேண்டும். புருஷனுடைய யோக்யதையைப் பற்றியும் பெண்ணின் ஒழுக்கததைப் பற்றியும மிகவும் சுலபமாகப் பழிகூறப் படுகிறது. எனது நீண்டகாலப் பொது வாழ்க்கையின் அனுபவத்திலிருந்து நான் இதைக் கூறு கிறேன். மனிதனுடைய யோக்யதை, பெண்ணின் கற்பு ஒழுக்கம் ஆகிய இரண்டையும்பற்றி, சுலபமாகப் பழி கூறப்படுகிறது; மறுத்து நிரூபிப்பதோ மிகச் சிரமம். ஆகையால், நம்மைப்பற்றி அவர்கள் எவ்வளவு தாராள மாக மதிப்பிட வேண்டுமென நாம் அவர்களிடம் எதிர் பார்ப்போமோ, அதே போல அவ்வளவு தாராள மனப் பான்மையுடன் நாம் மற்றவர்களையும் மதிப்பிடவேண்டும். இப்படிச் செய்தால், உலகம் முழுதும் இன்னும் சிறிது மேம்பட்டதாக விளங்கும் நாம் வாழ்க்கை நடத்துவதற் கும் அதிக அனுகூலமாயிருக்கும்.

அடுத்தபடியாக, நம் ஓய்வுக் காலத்தை வீணில் கழிக்கும் இன்னொரு பழக்கமும் சர்வ சாதாரணமாக இருந்துவருகிறது. அதாவது நம் சொந்த நாட்டைவிட்டு, நம பழக்க வழக்கங்களுக்கு முற்றும் மாறுபட்ட வெளி நாடுகளுக்குச் சென்று வசிப்பதாகும். இப்படி வெளி நாடு களுக்குச் செல்லுவதும் அங்கே சுற்றுப் பிரயாணம் செய் வதும் நம் ஓய்வுக்காலத்தை வீணுக்குவதேயாகும். கடின மான வேலை செய்துகொண்டிருப்பதை விடுத்து, அதற்குப் பதிலாக இன்னும் சிரமப்பட்டுக்கொண்டு சுற்றுப்பிரயா ணம் செய்துகொண்டிருப்பது ஓய்வாகாது. அதிக வேகத்தின் பலனுக, நேரமும் தூரமும் அறவே ஒழிந்து விடுகின்றன. ஆயினும் ஓய்வும் வேகமும் ஒன்றுக்கொன்று

பொருந்தமாட்டா. ஒருவர் தம் ஓய்வுக்காலத்தைச் சரிவரப் பயன்படுத்திக்கொள்ள வேண்டுமானால், அந்த ஓய்வின்பயனை அவர் அனுபவிக்கவேண்டும் அவர் வேலை செய்யும் இடங்களிலேயே அவர் ஓய்வைச் சந்தோஷமாகக் கழிக்க முடியும். பலவிதமான காட்சிகளையும், சூரியன் உதயமாவதையும் அஸ்தமிப்பதையும் இன்னும் இதர இயற்கை எழில்களையும் கண்டு களிக்கலாம். இப்படியாக, ஒருவர், தாம் வேலை செய்யும்போது காணாத பல அரிய காட்சிகளைக் கண்டு அனுபவிக்கலாம். ஒருவருக்கு ஓய்வு கிடைக்கும்போது, நட்சத்திரங்களோடு கூடிய ஆகாயத்தையும், பலவிதச் செடிகொடி மரங்களையும், ஏரிகளையும், நதிகளையும், மலைகளையும், இன்னும் இதர சாதாரண வனப்புக்களையும் கண்டு மகிழலாம்.

தேக உழைப்புள்ள ஆணோ பெண்ணோ தமது ஓய்வு நேரத்தை, தம் குடும்பத்தைச் சேர்ந்தவர்களோடு அளவளாவுவதில் கழிக்க வேண்டுமென்றும் நான் கூறுவேன். தன் மனைவியையும் குழந்தைகளையும் பற்றிச் சரவரத் தெரிந்து கொள்வதற்குப் போதுமான அளவு நெருங்கின பழக்கம் இல்லாத பெற்றோர்களும் இருக்கிறார்கள். ஆறு குழந்தைகளுக்குத் தந்தையாகவுள்ள ஒரு குடும்பத்தலைவருக்கு, தம் குழந்தைகள எந்த வகுப்புக்களில் வாசிக்கின்றன, குழந்தைகளுக்கு என்ன தேவையா யிருக்கின்றன, அவர்களிடையே காணப்படும் குணாதிசயங்கள் என்ன என்பவைகளைப் பற்றித் தெரிந்திருக்காது. வீட்டில் எவ்வளவு நேரத்தைச் செலவழிக்க வேண்டுமோ, அவ்வளவு நாம் செலவழிப்பதில்லை. கூடுமானவரையில் ஓய்வு நேரத்தை வீட்டை விட்டு வெளியே போய்த்தான் செலவழிக்க வேண்டுமென்று நினைப்பது தவறு. சாத்தியப்பட்டவரை ஓய்வை வீட்டிலேயே கழிக்க முயல வேண்டும்.

வெளியில் எளிதில் காணமுடியாத எத்தனையோ புதிய ருசிகரமான விஷயங்களை ஒருவர் தம் குடும்பத்தி

லேயே மனைவியிடமும் குழந்தைகளிடமும் காணலாம். மேலும், அதிகமாக உழைத்துவிட்டால், உங்களுக்கு ஓய்வு கிடைக்குமாயின் நீங்கள் அக்காலத்தில் தேக சிரமமான காரியமோ அல்லது மூளைக்கு வேலை கொடுக்கும் அலுவலோ எதுவுமே செய்யாமல் சும்மா இருக்க வேண்டுமென்று சிலர் கூறுகிருர்கள். முக்கியமாக டாக்டர்கள் இப்படிச் சொல்லுகிருர்கள். உடம்புக்குச் சிரமம் கொடுக்காதபடி வேண்டுமானுல் ஒருவர் இருக்கலாம்; ஆனுல் மூளைக்கு வேலை கொடுக்காமல் எப்படி இருக்க முடியும்? டாக்டர்களே இதை நம்புகிருர்களா என்பது எனக்குத் தெரியவில்லை. "மூளைக்குக் கொஞ்சம்கூட சிரமம் கொடுக்காமல் ஓய்வு தந்துவிட வேண்டும் என்று நீங்கள் என்னிடம் சொல்லுவீர்களானுல், உங்கள் நோயாளியைப்பற்றி நீங்கள் சரிவரத் தெரிந்து கொள்ளவில்லை. என்னுடைய மூளை, வேலை செய்யத்தான் வேண்டும்; வேலை செய்தே தீரும்" என்று என் டாக்டர்களிடம் நான் பலமுறை தெரிவித்திருக்கிறேன். ஆகவே மூளைக்குப் பரிபூர்ணமான ஓய்வு கொடுக்கும்படி டாக்டர்கள் கூறுவது சரியன்று என்பதே என் கருத்து. மனதுக்குச் சந்தோஷமாயுள்ள காரியங்களிலே மூளையைச் செலுத்தும்படி கூறவேண்டியதே சரியான முறையாகும். ஓய்வு நேரத்தைச் சிறந்த முறையில் செலவழிப்பதற்கு இது ஒரு வழி. ஒரு குறிப்பிட்ட வேலையில் ஈடுபட்டிருந்த ஒருவர் வேறு சந்தோஷமளிக்கும் காரியங்களில் மனதை ஈடுபடுத்த வேண்டும். அரசியல்வாதி என்ற முறையில், என்னுடைய ஓய்வுக் காலத்தைச் செலவிடுவதற்குச் சிறந்த ஒருவழி எதுவென்ருல் நல்ல சங்கீதத்தைக் கேட்டு அனுபவித்தல், சிறந்த கவிகளைப் படித்தல், நல்ல ஓவியங்களைக் கண்டு இன்புறுதல், அல்லது நண்பர்களுடனே என் குடும்பத்தாரிடமோ நல்ல பேச்சுக்களைப் பேசி அளவளாவிக் கொண்டிருத்தலே ஆகும். ஓய்வு நேரத்தைச் சரிவரத் பயன்படுத்த இது மற்ருெரு வழி.

நம்மிடையே இன்னும் சிலர் ஓயாமல் நாவல்களையும் கட்டுக் கதைகளையும் படிப்பதில் தங்கள் ஓய்வைக் கழிக் கிறார்கள். வாசித்துக் கொண்டிருப்பதில் எனக்கும் பிரியந்தான். ஆனால் கட்டுக் கதைகளெல்லாம் கிட்டத் தட்ட ஒரே மாதிரியாக இருக்கின்றன. நாவல்களும் பெரும்பாலும் நமக்குப் புறம்பானவையாகவே இருக் கின்றன. ஆகவே, இந்த மாதிரியாக வீண் பொழுது போக்கி ஓய்வைக் கழிப்பதையும் நாம் தவிர்க்கவேண்டும். கடைசியாகப் பார்க்கப் போனால் ஷேக்ஸ்பியர், வால்மீகி, காளிதாசன், தாகூர் போன்றாரின் இலக்கியங்களைவிடச் சிறந்தது வேறு எதுவுமே கிடையாது. இவர்களுடைய இலக்கியங்களில் திளைத்துக்கொண்டே, ஒருவர் தம் ஓய்வை நல்லபடியாக செலவழிக்கலாம். தீய அல்லது உதவாக்கரையான புத்தகங்களைப் படிப்பதில் செலவிடும் நேரம், ஓய்வை வீணுக்குவதாகும். ஆகையால், நம் ஓய்வுக் காலத்தை நல்லவழிகளில் பயன்படுத்தி, உலகம் இன்புற வும் மேம்பாடடையவும் நாம் அனைவரும் உதவுவோமாக.

# இந்திய அரசியல் வாதியின் தொல்லைகள்

[ஸிம்லா அகில இந்திய ரேடியோவில் 3-9-1936]

ஒரு இந்திய அரசியல் வாதியின் தொல்லைகளைப்பற்றிப் பேசுகையில் கூடியமட்டில் என் சொந்த அனுபவங்களைக் குறிப்பிடாமலேயே பேச முயலுகிறேன். இம்மாதிரி விஷயங்களில் சுயசரிதையைச் சொல்லுவதற்கு ஆவல் ஏற்படுவது இயற்கையே. இந்த முயற்சியில் நான் எவ்வளவு தூரம் வெற்றி பெற்றேன் என்பது என் பிரசங்கத்தைக் கேட்பவர்கள் கடைசியில் கூறவேண்டிய விஷயம். அரசியலில் உண்மைத் தன்மையை இப்போது இந்த நாட்டில் காணமுடியாது. ஏனெனில் மத்திய சர்க்காரிலோ மாகாணத்திலோ பூரண சுய ஆட்சி கிடையாது. சுய ஆட்சி இல்லாததால் மேல் நாட்டு ஜனநாயங்களில் உள்ளதைப் போல் கட்டுப்பாடான அரசியல் கட்சிகள் இங்கே சரியாகத் தோன்றவில்லை. இந்திய தேசீய மகா சபையான காங்கிரஸையும் சேர்த்துத்தான் நான் கூறுகிறேன். "காங்கிரஸையும் சேர்த்து" என்று நான் கூறுவதற்குக் காரணம் காங்கிரஸ் சுயராஜ்யம் என்னும் நோக்கத்தைப் பிரதானமாகக் கொண்டிருந்தும் அது பெரிதும் தேர்தல்களில் கவனத்தைச் செலுத்தி வந்திருக்கிறதே ஒழிய மேல் நாடுகள்மாதிரி கட்சிப் பிரசார வேலையில் அவ்வளவாக ஈடுபடவில்லை.

ஆகையால் இந்திய அரசியல் வாதியின் தொல்லைகளைப் பற்றிப் பேசுகையில் இந்த உண்மையை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். இதைத் தவிர எல்லா அரசியல்வாதிகளும் தாங்கள் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இந்நாட்டில் சுயராஜ்ய லட்சிய சித்தியிலேயே

தங்கள் முழுக் கவனத்தையும் செலுத்தவேண்டி யிருக்கிறது. காருட் கோமகனிலிருந்து மிதவாத அரசியல் வாதிவரையில் எல்லாரும் தத்தம் மனோபாவத்திற்கேற்ப "சுயராஜ்யம்" எனும் மந்திரத்தை உச்சரித்து வருகிறார்கள். நான் இருக்கும் கட்சி, அதிலுள்ள அரசியல் வாதிகள் இவர்களுடன் எனக்குள்ள அனுபவத்தைக் கொண்டு நான் கூறக்கூடியது என்னவென்றால் எல்லாரும் ஒரே கட்சியை சேர்ந்தவர்களா யிருந்தாலும் அவர்களில் பிற்போக்காளர்கள், மிதவாதிகள், தீவிர வாதிகள், சோஷலிஸ்டுகள் எல்லாரும் இருக்கின்றனர். ஆனால் பிற்போக்குக்கு நாட்டில் இடமே இல்லை. பிற்போக்காளர்களை சர்க்காரும் சரி, ஜனங்களும் சரி யாரும் ஆதரிக்கமாட்டார்கள். ஆகையால் இந்திய அரசியல் வாதி எப்பொழுதும் சர்க்காருக்கு எதிராகவே இருந்தாக வேண்டும். இது தான் அவருடைய முதற் கவலை.

அவருடைய இரண்டாவது கவலை தேர்தல்கள் அதுவும் பொதுத் தேர்தல்கள். அரசியல் துறையில் முன்னேற்ற மடைந்துள்ள தேசங்களில் கட்சி அபேட்சகரை கட்சிப் பிரசாரகர்கள் கட்சிப் பலத்தைக் கொண்டு ஆதரிப்பார்கள். இந்த நாட்டில் இம்மாதிரி ஏற்பாட்டை நாளடைவில் அமுலுக்குக் கொண்டுவர முயற்சி செய்து வந்தாலும் கட்சி அபேட்சகர் தம் பிரசாரத்தைத் தாமே தான் செய்ய வேண்டியிருக்கிறது வீடு வீடாகச் சென்று ஒவ்வொரு வாக்காளராகச் சந்தித்து அவர் ஆதரவைப் பெறுவது என்பது மிகவும் கஷ்டமான காரியம் என்று நான் கூறுவதனால் என்னுடைய மதிப்புக்குப் பாத்திரமான சென்னை வாக்காளர்கள் கோபங்கொள்ளமாட்டார்கள் என்று நினைக்கிறேன். இந்த அனுபவமே வாழ்க்கையில் ஒரு படிப்பினையாகும். ஆனால் வாக்காளர்கள் அன்பு மனப்பான்மையால் இந்த வேலை ஓரளவு எளிதாகிவிடுகிறது. பிற நாடுகளில் அபேட்சகர்களுக்கு கிடைக்கிறமாதிரி உதவி இல்லாவிட்டால் இந்த வேலை

மிகவும் கடினமாகத்தான இருக்கும். பிறநாடுகளில் சிறந்த சேவை செய்கிற மாதிரி இங்கே பெண் தேர்தல் பிரசாரகர்கள் இல்லாததால் இந்தக் கஷ்டம் சற்று அதிகமாகவே ஏற்படுகிறது ஆனால் என சொந்த அனுபவத்தில் இந்தக் கஷ்டம் கிடையாது. என் தேர்தல் விஷயத்தில் என் மனைவி உதவி புரிந்ததால் நூறு பெண்கள் தேர்தல் பிரசாரத்தில் ஒத்துழைத்தனர். தேர்தல் சம்பந்தமாக கஷ்டம் குறைய வேண்டுமொனால் அவர்கள் பெண்களின் ஒத்துழைப்பையும் நாடவேண்டும்.

மற்ற நாடுகள் மாதிரி தேர்தல் முடிந்தவுடன் அபேட்சகரின் தொல்லையும் தீர்ந்துவிடுவதில்லை. இந்திய அரசியல் வாதி சட்டசபைக்குச் சென்றவுடன் என்றும் எதிர்க்கட்சியி லிருக்கவேண்டும். எப்பொழுதும் எதிர்க்கட்சியிலிருப்பது சுலபமான காரியமன்று. பூராக்காலமும் அரசியல் வேலைக்கு அர்ப்பணம் செய்யும கோஷ்டி நம் நாட்டில் இல்லை. இங்கிலாந்தில் நிரம்பப் பணம் படைத்தவர்கள் நிரம்ப ஓய்வு உள்ளவர்கள் அரசியலைத் தங்கள் வாழ்க்கைப் பணியாக ஏற்றுக்கொண்டு வேலை செய்கிறார்கள். கட்சிப் பணத்திலிருந்து ஊதியம் பெற்று சதா காலமும் அரசியல் வேலை செய்பவர்களும் இருக்கிறார்கள். இந்த இரு வசதிகளும் நம் நாட்டில் இல்லை. இது இந்திய அரசியல் வாதியின் பெருங் கவலையா யிருக்கிறது. கட்சி நிதி ஏற்படுத்தவேண்டிய காலம் நெருங்கி விட்டதென்றே நினைக்கிறேன். இந்த விஷயத்தில் நம் முயற்சியை உடனே தொடங்கவேண்டும். சட்டசபை மெம்பர்களுக்கு மத்திய சட்டசபையில் மாதம் ரூ. 500ம் மாகாண சபையில் மாதம் ரூ 300ம் போகவர இலவச முதல் வகுப்பு ரயில் பாஸும் கொடுப்பது அவசியம். எதிர்க்கட்சியினருக்குச் சர்க்காருக்குள்ள வசதிகள் கிடையா. சர்க்காருக்கு வேலை செய்ய உயர்ந்த சம்பளம் வாங்கும் திறமையுள்ள உத்தியோகஸ்தர்கள் சகலமான தகவல்களும் சேகரித்துக் கொடுக்கின்றனர். ஆனால் எதிர்க்

கட்சியினர் சர்வக்ஞர்கள் என்று தங்களை நினைத்துக் கொண்டு தங்கள் வேலையைத் தாங்களே செய்யவேண்டியிருக்கிறது. இந்திய அரசியல் வாதிகளின் பெருங் கவலைகளில் இது ஒன்று. படிப்பதற்கும் சிந்திப்பதற்கும் தகவல்கள் சேகரிப்பதற்கும் பொழுதே கிடையாது. அரசியல் கட்சிகளில் ஆராய்ச்சி செய்யும் மத்திய ஸ்தாபனம் இருந்தால் அரசியல் வாதியின் வேலை வெகுவாகக் குறைந்துவிடும்.

மிகத் தயக்கத்துடன் கூறுகிறேன். இந்திய அரசியல் வாதியின் மற்ருெரு கவலை பத்திரிகைத் தொடர்பு. பத்திரிகைகளை வெறுக்கும் கோஷ்டியில் சேர்ந்தவனல்லன் நான். அவைகளுக்கு நன்றி செலுத்துகிறேன். அரசியல் வாதிகளாகிய நாம் பத்திரிகைக்காரர்களுக்குப் பெரிதும் கடமைப்பட்டிருக்கிருேம். இதில் கஷ்டம் என்னவென்ருல் நீங்கள் ஒரு தகவலும் கொடுக்கமுடியாமல் இருக்கும் நிலைமையில் அவர்கள் எல்லா விபரங்களும் வேண்டுமென வற்புறுத்துவார்கள். நீங்கள் ஏதாவது ஒரு விஷயத்தை பிரபலப்படுத்த விரும்பிஞல் அந்த விஷயம் அப்பொழுது தேவையில்லை என்பார்கள். பத்திரிகைக்காரர்களை ஒதுக்கி வைப்பதும் உசிதமல்ல. அவர்கள் கையில் சிக்கிக் கொள்வதும் சரியல்ல. இரண்டுக்கும் நடுவான வழியைப் பின்பற்றுவதுதான் உசிதம்.

அரசியல் வாதிக்குக் கடிதம் எழுதுபவர்களை திருப்தி செய்வது மற்ருெரு தொல்லை. தினசரி யாராவது எதைப் பற்றியாவது எழுதிக்கொண்டிருப்பார்கள். யாசிப்பவர்கள், உத்தியோகம் விரும்புபவர்கள், நண்பர்கள், உண்மை உரைக்கும் உத்தமர்கள், விரோதிகள், அஞமதேயக் கடிதம் எழுதுபவர்கள் எல்லோரும் எழுதுவார்கள். 1920-ல் நாகபுரி காங்கிரஸின்போது தேசபந்துதாஸ், மோதிலால் நேரு, இருவருடனும் காலை உண்டி அருந்திக் கொண்டிருந்தேன். தபால்கட்டு வந்தது, தேசபந்துதாஸ் தமக்கு வந்த ஏராளமான கடிதங்களில் சிலவற்றைப்

படித்துப் பார்த்துவிட்டு என்னை நோக்கி "ஊரிலுள்ள பைத்தியக்காரர்கள் எல்லாம் ஏன் நம்மை நாடி வருகின்றனர்" என்று கேட்டார். "நாமும் பைத்தியக்காரர்களாயிருப்பதனுல்தான்" என்று தேசபந்துவுக்கு நான் பதில் கூறினேன். அரசியல் வாதிக்கு ஏன் இவ்வளவு பேர் எழுதுகின்றனர் என்பதற்குக் காரணம் ஓரளவு விளங்கிற்று. நாங்கள் எங்களால் இயன்ற அளவு எல்லோரையும் திருப்தி செய்யப் பார்க்கிருேம்.

அரசியல் வாதியின் தொல்லைகள் இத்துடன் முடிந்து விடவில்லை. மற்ருெரு தொல்லை அவனைப் பார்க்க வருபவர்கள் சம்பந்தமானது. அவர்கள் எல்லாரும் வருகிருர்கள். சிலர் அவனுக்குப் புத்திகூற வருகிருர்கள். சிலர் சமூக பொருளாதார பிரச்னைகளை அவருடன் வாதிக்க வருகின்றனர். சிலர் ஏதாவது சுய நன்மை கோரி வருகின்றனர். ஆனுல் அவர்கள் யாரும் வந்த காரியத்தை உடனே கூறமாட்டார்கள். நீங்கள் அவசரப்படுத்தினுல் அவர்களுக்குப் பிடிக்காது அவர்களுடன் பொறுமையாயிருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

இந்திய அரசியல் வாதிகளின் தொல்லைகளை நான் அடுக்கிக்கொண்டு போகிறேன் என்று எண்ண வேண்டாம். இதோ முடித்து விடுகிறேன்.

அரசியல் வாதியின் முக்கிய கவலை இந்த தேசத்தின் விஸ்தீரணம், அடிக்கடி சுற்றுப் பிரயாணம் செய்வது, நண்பர்களுடன் பேசுவது, தேர்தல் பிரச்சாரத் தொல்லை இவைகள் கவலையின் சுருக்கமான ஜாப்தா. தொல்லைகளுக்கு மாற்றம் இருக்கிறது. பாராட்டுப் பத்திரங்கள், பூமாலைகள், ஊர்வலங்கள், சங்கீதம், புகழ் எல்லாம் திருப்திகரமான அம்சங்கள். இவைகள் எனக்குப் பிடிக்காது என்று கூறினுல் நான் மனித இயல்புக்குமாருக நடந்தவனுவேன். நான் உண்மையைக் கூறுகிறேன். எனக்கு இந்த உபசாரங்கள் மிகவும் பிடிக்கும்.

ஆனால் எங்காட்டிலும் அரசியல் வாதிகள் உறுதி யுடையவர்களா யிருக்கவேண்டும். அரசியல் வாதிக்கு உணவு ஒய்வு தூக்கம் ஒன்றும் தேவையல்ல என்று சாதாரண மனிதன் நினைக்கிறான. இதையெல்லாம் மீறி வாழவேண்டும்.

அரசியல் வாதி என்றால் எல்லா இடங்களிலும் ஒரு அலட்சியம். சில இடங்களில் அரசியல்வாதி எனும் பதம் வசைமொழியாகக் கருதப்படுகிறது இது அரசியல் வாதியின் மற்றொரு தொல்லை. ஆனால் அவர் எல்லாவற் றையும் சகித்துக்கொண்டு சிரித்தவண்ணமே செல்லு கிறார். அரசியல் விவகாரங்கள் தகராறுகள் ஏற்பட் டால் இன்று அவரைத் திட்டுபவர்கள் நாளை அவர் உதவியை நாடி வருவார்கள்.

இன்னும் அரசியல் வாதிகள் தொல்லையை சொல்லி முடிக்கவில்லை என்றால் உங்களுக்குக் கோபம் வரும். இது என்னுடைய மற்றொரு கவலை. நீங்கள் கோபம் கொளள லாம. ஆனால் நான் ஆத்திர மடையலாகாது. இவ்வளவு கவலைகளுக்கிடையே அரசியல் வாதி எப்படி சித்த ஸ்வா தீனத்துடன் இருக்கிறார் என்று நீங்கள் ஆச்சரிய மடையலாம். எனக்கே அது ஆச்சரியமாகத்தான் இருக் கிறது. ஆனால் 'அரசியலைத்தவிர சங்கீதம், நாடகம், புஸ்தகங்கள், புஷ்பங்கள், இயற்கை அழகு, குழந்தைகள் முதலியவற்றில் நான் லயித்துப்போகும் மாதிரி பிறரும் செய்தால் கவலையின்றி வாழலாம். இவைகள் தாம் என் மூளை பழுதாகாமல் என்னை அரசியல்வாதியாகவும் வைத்திருக்கிற கருவிகள்.

இந்தப் பிரசங்கத்தைக் கேட்கும் நீங்கள் நான் மறு முறை பேசமுடியாமல் அவ்வளவு கவலை தோய்ந்த அரசியல் வாதியாகி விடுவேன் என்று நீங்கள் கவலையுறு கிறீர்கள். ஆகையால் நான் போகிறேன் என்று சொல் லாமல், போய் வருகிறேன் என்று சொல்லுகிறேன்.

# சங்கீதமும் லௌகீகமும்

[சென்னை ரேடியோவில் 29—6—'38]

இதுதான் முதல் தடவை நான் சென்னையிலிருந்து ஒலிபரப்பும் கருவியின் மூலமாகத் தமிழில் பேசுவது. இந்த ரேடியோ ஸ்டேஷன் மேன்மேலும் அபிவிருத்தி யடைந்து, சிறப்பாகத் தமிழ் நாட்டுச் சங்கீதத்தையும், கலையையும், ஞானத்தையும் தென்னாட்டிலும் உலக முழுவதிலும் பரப்புவதற்கு உதவுமென்று நம்புகிறேன். முக்கியமாக நம்முடைய கர்நாடக சங்கீதத்தின் சிறப்பை எங்கும் பரப்ப வேண்டுமென்பது என்னுடைய ஆசை.

சங்கீதத்தில் எனக்கு ஞானம் குறைவு. ஆசை அதிகம். உங்கள் எல்லோரையும்போல் நல்ல சங்கீதத்தைக் கேட்பதற்கு அளவிலா ஆவலுள்ளவன். ஆனால் நம்முடைய சங்கீதம் அபிவிருத்தியடைந்து உயிர்க் கலையாக நமக்குள் வாழவேண்டுமானால் அதில் சில சீர்திருத்தங்கள் செய்ய வேண்டியது அத்தியாவசியம்.

எந்த விஷயத்திலும் சீர்திருத்தம் என்றால் சிலருக்குப் பிடிக்காது. அவசரமாக முன்பின் யோசியாமல் சீர்திருத்தம் செய்வதை நானும் ஒப்புக்கொள்ளவில்லை. ஆனால் கவி பவபூதியின் வாக்கை நாம் ஞாபகப் படுத்திக் கொள்ள வேண்டும். அதாவது "பழையதென்பதினால் மாத்திரம் எல்லாம் நல்லதாகி விடாது" என்பது.

நம்முடைய சங்கீதக் கச்சேரிகள் கேட்கும்பொழுதும், கேட்ட பிறகும், சில சமயங்களில் தவிர நமக்கு உண்மையான உத்ஸாகம், சந்தோஷம், வாழ்வில் ஆசை, இவைகள் உண்டாவதில்லை. நம்முடைய கச்சேரிகளில் பாடும் பாட்டுக்களும், அவைகளின் வார்த்தைகளும்

அர்த்தங்களும் பாடும் ராகங்களும், மனுஷ்யனுக்கு இவ்வுலகத்தில் ஓர் அருவருப்பையும், மூடபக்தி செய்தால் எல்லாம் சரியாகிவிடும் என்ற ஒரு எண்ணத்தையும் உண்டாக்குகின்றன. நான் உண்மையாக ஈசுவர பக்தியுள்ளவன். நம் நாட்டில் அந்த பக்தி என்றைக்கும் இருக்கவேண்டும் என்று ஆசைப்படுகின்றவன். ஆயினும் கேவலம் சில அவதாரங்களின் குணாதிசயங்களையும், அற்புதமான காரியங்களையும், ஸ்தோத்திரம் பண்ணுவது தான் அந்த பக்திக்கு ஒரே வழி என்று நினைப்பவன் இல்லை. பகவானை உலகெலாம் காணலாம். உலகத்தின் சிருஷ்டியைக் கண்டு, ஆச்சரியப்பட்டு, ஆனந்தமடைந்து, உலகில் உள்ளோருக்கு சேவைசெய்து உலகில் சந்தோஷம் நிறையுமாறு செய்வதும் உண்மையான பகவத் கைங்கர்யம் என்று நான் நம்புகின்றேன்.

ஆதலால், நம்முடைய சங்கீதத்தை நம்முடைய பாடகர்கள், பாடகிகள், ஐந்துமணி நேரம், நாலுமணி நேரம் பாடி, சில சங்கீத வித்வான்களுக்கும், தம்மை சங்கீத வித்வான்கள் என்று பிறர் நினைக்க வேண்டுமென்று ஆசைப்படுகின்ற பலருக்கும், சந்தோஷத்தை உண்டு பண்ண வேண்டுமென்ற ஆசையை விட்டுவிட்டு, உங்களையும் என்னையும் போன்ற மனிதர்களுக்கு உண்மையான சந்தோஷத்தைத் தங்கள் சங்கீதத்தால் உண்டாக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கின்றேன். அதற்காகச் சும்மா, ராமன், கிருஷ்ணன் இந்த அவதாரங்களைப் பற்றியே பாடுவதை மிகவும் குறைத்துக்கொண்டு, உலகத்தில் நாம் பார்க்கும் அதியற்புதமான, சூரியோதயம், சூரியாஸ்தமனத்தைப் பற்றியும், சந்திரிகையின் அழகைப் பற்றியும், கடலின் காம்பீரியத்தைப் பற்றியும், நக்ஷத்திர மண்டலத்தின் அழகிய தோற்றத்தைப் பற்றியும், நம் நாட்டின் மலைகளைப் பற்றியும் நதிகளைப் பற்றியும், புஷ்பங்களைப் பற்றியும், சரியான ராகங்களில் சுருக்கமாக பொருத்தமான வார்த்தைகளின் மூலமாகப் பாடவேண்டு

மென்று கேட்டுக்கொள்கிறேன். தமிழ் நாட்டுத் தமிழருக்கு இப் பாட்டுக்களைத் தமிழிலேயே பாடவேண்டும்.

இதுவுமன்றி, குழந்தைகளையும் அவர்களுடைய செயல்களையும் பற்றி நம் நாட்டின் மக்கள் மனதில் இப்பொழுது எழும் லௌகிக எண்ணங்களைப் பற்றியும், உண்மையான, உயர்ந்த சிருங்காரத்தைப் பற்றியும், நம் மனதில் உணர்ச்சி உண்டாகும்படி பாடவேண்டும். நான் அறிந்தமட்டில் சில பதங்கள் தவிர நம்முடைய கச்சேரிகளில் இம்மாதிரிப் பாட்டுகள் பாடப்படுவதில்லை.

இதுவும் தவிர, நாட்டுச் சரித்திரத்தில் நடந்திருக்கும் பெரிய தீரச் செயல்களைப் பற்றியும், நம் நாட்டின் பெருமையைப் பற்றியும், நம் நாட்டின எதிர்கால வாழ்வைப் பற்றியும், நம் மக்கள் வீரம் சௌரியம் தியாகம் இவைகளைப் பற்றியும் தகுந்த ராகங்களில் தகுந்த வார்த்தைகளைக்கொண்டு பாடவேண்டும்.

இப்பொழுது நான் பார்த்த அளவில் நம்முடைய கச்சேரிகளில் பாட்டுக்கள் அநேகமாக, ஆரம்பம் முதல் முடிவு வரையில் பகவத் ஸ்தோத்திரமாகவும், பாட்டின் பாஷை நமக்குப் புரியாததாகவும், சில சமயங்களில் பாடகர்களுக்கே புரியாததாகவும், "நாம் ஏன் பிறந்தோம் இந்த உலகில்" என்கிற எண்ணத்தை உண்டாக்குவதாகவும் இருக்கின்றன. தமிழ் நாட்டில் பாடகர்கள் தமிழ் பாஷையில், ஏதோ ஒன்றிரண்டு பாடல்கள் பாட ஆரம்பித்துவிட்டால் ஜனங்கள் உத்சாகத்தை நீங்கள் பார்த்திருப்பீர்கள். கீர்த்தனைகள் முடிந்து பல்லவியும் முடிந்து துக்கடாக்கள் எப்பொழுது பாடப் போகின்றார்கள் என்று எதிர்பார்ப்பவர்களில் நானும் ஒருவன்.

இதெல்லாவற்றையும்விட சங்கீதத்தை ஒரு முக்கியமான சாஸ்திரமாக மாத்திரம் வைத்துக் கொள்ளாமல், கூடியமட்டில் எல்லோருக்கும் தெரியும்படி செய்ய வேண்டுமானால், நம் கச்சேரிகளில் பாடும் பாடகர்களும், அப் பாட்டுகளைக் கேட்பவர்களும், பாட்டுகளின் ஸாஹித்

யத்தை அறிந்து கொள்ளும்படி செய்யவேண்டியது அத்யாவசியமாகும்.

முதலில் பாடகர்கள் தாம் பாடும் பாட்டுகளின் அர்த்தத்தையும் ஸாஹித்தியத்தையும் நன்ருய் அறிந்து கொள்ளவேண்டும். இவ்வாறு சொல்வதற்காக பாடகர்கள் எனமீது கோபித்துக் கொள்ளக்கூடாது. தியாகய்யரவர்களின் அபாரமான திறமையினுலும் சாமா சாஸ்திரிகள முதலிய பெரியோர்களாலும் இயற்றப்பட்ட தெலுங்குக் கீர்த்தனைகளையும் தீக்ஷிதர் போன்ற மஹான்களின் சமஸ்கிருதப் பாட்டுக்களையும் வெகுகாலம் பாடத்தான் வேண்டும். ஆனுல் இப் பாட்டுக்களையும் பாட ஆரம்பிப்பதற்கு முன், பாடகர்கள் வெகு சுருக்கமாக இரண்டு நிமிஷத்திற்குள், பாட்டின் அர்த்தத்தை ஜனங்களுக்குப் புரியும் பாஷையில் சொல்லிவிடவேண்டும். இது அசாத்தியமான காரியமன்று. இப்பொழுது நம்முடைய கச்சேரிகளில் பக்க வாத்தியங்களை வாசிக்கச் சொல்லிவிட்டு, பாடகர்கள் வாளாவிருக்கும் சமயத்தை இக் காரியத்திற்கு நன்ருய் உபயோகிக்கலாம்.

மேலும், தமிழ் நாட்டில் பாடகர்கள் கச்சேரிகளில் தமிழ்ப் பாடல்களை அதிகமாகப் பாடவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தமிழில் அழகிய பாடல்கள் இல்லை என்று சொல்வது வீண் சாக்கு கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தன் சரித்திரத்திலிருந்தும், அருணுசலக் கவியின் ராமாயணக் கீர்த்தனத்திலிருந்தும், அழகிய பாடல்களை எடுத்துப் பாடலாம். இவைகளிலும் பக்தி ரஸம்தான் ததும்புகிறது என்பதை ஒப்புக்கொள்கிறேன். ஆனுல் வேறு ரஸங்களும் அடங்கியிருக்கின்றன. இவைகளுடன்கூட சுப்ரமணிய பாரதியின் அழகிய கிளிப் பாட்டு, கண்ணன் பாட்டு, தேசிய கீதங்கள் இவைகளையும் சேர்த்துப் பாடிவிட்டால் கச்சேரிகள் மிகவும் சோபிக்கும். இம்மாதிரிப் பாடல்களை பல்லவிக்குப் பின்தான் பாட வேண்டும் என்ற வழக்கத்தை மாற்றி முன்னுலேயும்

பாடலாம் என்ற வழக்கத்தைக் கொள்ளவேண்டுமென்று பாடகர்களை கேட்டுகொள்கின்றேன்.

என்னுடைய ஆசை நம் கச்சேரிகள் சுமார் இரண்டு இரண்டரை மணிக்குள முடிக்கப்பட்டு அதில் பாதிக்கு மேல் தமிழ்ப் பாட்டுக்கள் இருக்கவேண்டு மெனபது. இப்படிச்செய்தால் நம் சங்கீததகின் கௌரவம் குறைந்து விடுமென்று சிலர் எண்ணலாம். நான் அப்படி எண்ணு புவன் இல்லை. நீங்களுமெ எண்ணக்கூடாதென்று கேட்டுக் கொள்கின்றேன் உண்மையான சங்கீதத்தின் அழகு, படித்தவர்களும், படிக்காதவர்களும், சஙகீத ஞானம் உள்ளவர்களும் அனுபவிக்கும்படி இருக்கவேண்டும். சமஸ்கிருத கவி ஒருவர் மிகவும் நன்ருய்ச் சொல்லி யிருக்கிறபடி,

"மிருகமறியும், குழந்தையறியும், பாம்பறியும் நல்ல சங்கீத ரஸத்தை". இமமூன்றையும் கவி குறிப்பிட்டதின் உட்கருத்து நல்ல சங்கீதத்தை, அனுபவிப்பதற்கு ஞானம் அவசியமில்லை; மனதில் சுபாவிகமான நல்லுணர்ச்சி இருந்தால் போதும், செவியிருந்தால் போதும் என்பதாகும்.

நீங்கள் பாட்டுக் கச்சேரிகள் கேட்டுக்கொண்டு உட்கார்ந்திருக்கும்போது, என்போல் அங்குள்ளவர்களை அடிக்கடி சுற்றிப் பார்த்தால், தியாகராஜ கீாத்தனைகளைப் பாடும்போதுமெ மற்றும் அம்மாதிரி கீர்த்தனங்கள் பாடும் போதும், சாதாரணமாக அவர்கள் சங்கீதத்தை அனுபவித்த போதிலும், அக்கீர்ததனங்க ளெல்லாம் பக்தியே ததும்ப வேறு எண்ணம் ஒன்றுமில்லாமெ லிருப்பதால் கொஞ்சம் அசிரத்தையாகத்தான் இருக்கின்ருர்கள். ஆனுல் பக்தி ரஸமா யிருந்தால்கூட ஜனங்களுக்குத் தெரிந்த பாஷையில் பாடகர் "திருவடி சரண" மென்று ஆரம்பித்தால் ஜனங்களிடத்தில் ஒரு குதூகலத்தை உடனே பார்க்கமுடியும். அப்பாட்டிலும்கூட "எடுத்த ஜனனம் கணக்கெழுதத் தொலையாது, இரங்கி மகிழ்ந்து

தேவரீர் வேணுமென்று கொடுத்த மானிட ஜன்மம் வீணாகிப் போகுதென் குறைதீர்த்த பாடுமில்லையே" என்ற வார்த்தைகளைக் கேட்டவுடன் இவ்வளவு நேரம் உத்ஸாகமாக இருந்த ஜனங்கள் முகத்தில் "ஓகோ நாம் பாபிகள்; இந்த ஜன்மம் எடுத்ததே வீண்" என்று அசடு தட்டுகிறது.

பாஷை ஒருபுறம் இருக்க, நம்முடைய தமிழ் நாட்டில் ஜனங்களை உத்சாகப் படுத்தக்கூடிய கும்மி, தெம்மாங்கு, ஓடம் முதலிய அழகிய பாடல்கள் பல இருக்கின்றன. ஒருவிதமான பக்கவாத்தியமுமில்லாமல், நல்ல சாரீரத்துடன் இப் பாடல்களை நம்முடைய ஸ்திரீகள் வெகு அழகாய்ப் பாடுவதை நான் அநேகம் தடவை கேட்டிருக்கிறேன். நம்முடைய வித்வான்கள், இம்மாதிரிப் பாடல்களைத் தாங்கள் பாடுவது தங்களுக்குக் கௌரவக் குறைவென்று நினைக்கலாம். அப்படி எண்ணக்கூடாதென்று நான் அவர்களைக் கேட்டுக் கொள்கின்றேன்,

சங்கீத வித்வான்களின் உண்மையான உயர்ந்த நோக்கம், தங்கள் சங்கீதத்தைப் பல்லாயிரக் கணக்கான ஜனங்கள் அனுபவிக்க வேண்டுமென்பதுதான். அதற்காக அவர்கள் சாஸ்திர முறை தவற வேண்டுமென்று நான் சொல்லவில்லை. சாஸ்திர முறைப்படி அவர்கள் பாடி எல்லோரையும் சந்தோஷப்படுத்த முடியும். சங்கீத வித்வான்களை நான் ஒன்று கேட்டுகொள்கின்றேன். அவர்கள் கச்சேரியில் பாடும்பொழுது, அவர்கள் முன் உட்கார்ந்துகொணடு, ஞானத்துடன தாளம் போட்டுத் தலைகளை ஆட்டுகின்றார்களே, அவர்களை மட்டுமாவது அல்லது முதல் வரிசையில் உட்கார்ந்துகொண்டு ஞானம் உள்ளவர்கள்போல் தலைகளை ஆட்டுகின்றார்களே, அவர்களை மட்டுமாவது, பார்க்காமல் சபையில் உள்ள ஜனங்கள் எல்லோரையும் சுற்றிப் பார்ப்பார்களேயானால், நான் மேலே குறிப்பிட்டிருக்கும் மாதிரிப் பாட்டுக்களைப் பாடும்போதுதான், அவர்கள் எல்

லோரும் கச்சேரிகளை அனுபவிக்கிறார்கள் என்பது பாடகர்களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல் விளங்கும்.

கசசேரி கேட்கின்றவர்கள், கேவலம் தங்களுடைய செவிகளை மாத்திரம் உபயோகிப்பதுடன நிற்காமல் கச்சேரியில் அவர்களும் கலந்துகொள்ளும்படி செய்தால் நான் மேலே சொல்லியபடி, கச்சேரிகள் கேட்கும் ஆண் களும், பெண்களும், இன்னும் சந்தோஷப்படுவார்கள். தனியாகப் பாடுவதில் நம்முடைய பாடகர்கள் மிக்க திறமையும பாண்டித்யமும் பெற்று இருக்கிறார்கள். ஆனால் பத்துப்பேர் சேர்ந்து பாடுவது நம் நாட்டில் அரிது. சில பஜனைகள் தவிர, அந்த பஜனைகளில்கூட கூச்சல் ஜாஸ்தியே தவிர நல்ல சங்கீதம் குறைவு

என்னுடைய ஆசை, நம்முடைய கச்சேரிகளில் கடைசியில் ஒரு பாட்டையாவது பாடகரும், கச்சேரிக்கு வந்திருக்கும் எல்லோரும் சேர்ந்து ச்ந்தோஷமாகப் பாட வேண்டுமென்பது. இது துர்லபமான காரியமல்ல; ஆனால் சுலபமுமல்ல. ஆரம்பத்தில் இம்மாதிரி பாட யத் தனிப்பது ஹாஸ்டத்தை உண்டாக்கலாம்.ஆனால் சில வருங் களுக்குள் ஒரே பாட்டை அதுவும் சுலபமான பாட்டை, எல்லாக் கச்சேரிகளிலும், எல்லோரும் சேர்ந்து பாடுவது வழக்கமாகிவிட்டால், இப்படிச் சேர்ந்து பாடுதலை இனிமை யாகச் செய்து விடலாம். உதாரணமாக தமிழில் பாரதி யாரின 'வாழிய செந்தமிழ்' பாடலாம். தெலுங்கில் அய்யர்வாள் மங்களததைப் பாடலாம். இப்படிப் பாடி கச்சேரிகளை முடிப்போமானால் நான் மேலே சொல்லியபடி நம்முடைய கச்சேரிகளைத் தேசப் புனருத்தாரணத்தில் சரியான பங்கெடுத்துக் கொள்ளும்படி செய்துவிட முடியும்.

பாடகர்கள் நான் மேற்சொன்ன துறையில் உழைக்க முன் வருவார்களேயானால் கச்சேரி கேட்கும் ஜனங்கள் கச்சேரி முடிந்தவுடன் ராகங்களையும் பாடல்களையும்

பற்றி குதர்க்கம் செய்வதைவிட்டு ஆகா, நம் தேசம் என்ன அழகிய தேசம், என்ன அழகிய மலைகள், நதிகள், புஷ்பங்கள், நம் வாழ்வு எவ்வளவு உயர்வு, நாம் பிறருக்குத் தீங்கு செய்யாமல் சுகமாய் வாழ முடியும், என்பது பற்றிப் பேசிக்கொண்டு திரும்புவார்கள். இது ஒரு பெரிய தேச கைங்கரியம். இதைச் செய்யும்படி, பாடகர்களைக் கேட்டுக்கொள்கின்றேன். அவர்களை அவ்வாறு செய்யும்படி வற்புறுத்துமாறு உங்களையும் கேட்டுக்கொள்கிறேன்.

# நான் பேசும் தமிழ்

[சென்னை ரேடியோவில் 1—10—'38]

சில வருஷங்களுக்கு முன் ஆங்கிலம் படித்தவர்கள், தங்கள் அபிப்பிராயங்களைப் பொது மக்களுக்குத் தமிழில் சொல்லுவதென்றால், அநேகமாக அசாத்தியமாயிருந்தது. அவர்களுக்கு அப்படித் தமிழில் பேசுவது அவமானமாகத் தோன்றியது. பாஷையின் சிறப்பையும் அதனுடைய அருஞ்சுவையையும், அதன் மூலமாக லௌகிக பாரமார்த்திக எண்ணங்களையும் பசுமரத்தாணிபோல் ஜனங்கள் மனதில் பதியச் செய்ய முடியும் என்பதை எனது நண்பர் தமிழ்நாட்டுத் தேசீயக் கவிச்சக்கரவர்த்தி சுப்ரமண்ய பாரதியார் முதன் முதலாகத் தமிழ் உலகிற்குத் தெரிவித்தார். அவர் பாடல்களை அவர் வாயால் பாடிக் கேட்கும் பாக்கியம் எனக்குச் சென்னையில் 1906, 1907-ம் வருஷங்களில் கிடைத்தது. அவைகளைக் கேட்டு எனக்குத் தேசபக்தியும், தமிழில் அன்பும் அதிகரித்தன.

1919, 1920-ம் வருஷங்களில் தமிழ் நாட்டிலுள்ள எல்லா ஜில்லாக்களிலும், அநேகமாக எல்லாப் பட்டணங்களிலும், எல்லாப் பெரிய கிராமங்களிலும் நான் அறிந்த தமிழ் மொழியில் ஆயிரக்கணக்கான பிரசங்கங்கள் செய்துள்ளேன். அக்கூட்டங்களுக்கு ஆயிரக்கணக்கில் ஆண் மக்களும் பெண்மணிகளும் அந்நாளிலேயே வருவார்கள். எனது சொற்பொழிவு கேட்டு ஆனந்திப்பார்கள். அவர்கள் ஆனந்தப்படுவதைப் பார்த்து நான் மனம் பூரிப்பேன். அந்நாட்களில் எனக்கும் தேகத்தில் ஏராளமான சக்தியும் இருந்தது. ஒவ்வொரு பிரசங்கமும் மூன்று அல்லது நான்கு மணி நேரம் நடக்கும். எனது அன்பார்ந்த தமிழ் மக்களும், செவி சாய்த்து மிக்க உற்சாகத்துடனும்

ஊக்கத்துடனும் கேட்பார்கள். அப்பொழுது இதற்கு ஒரு அவசியமும் இருந்தது.

மற்ற மாகாணங்களைப்போல் நம்முடைய மாகாணத்திலும், அப்பொழுதுதான் முதன் முதலாக ஜனங்களுக்கு ராஜீய விஷயங்களில் விழிப்பு ஏற்பட்டுக்கொண்டு வந்தது இப்பொழுது சுமார் 20 வருஷகாலமாக இப்பாரத பூமியில் மகாத்மா காந்தியின் தலைமையில் நடக்கும் தீவிர சமூகப் புரட்சித் பிரசாரத்தினுல் தமிழ்ப் பத்திரிகைகள் அழகாக, எளிய தமிழில் எழுதி வருவதாலும், அவைகளை லக்ஷக்கணக்கான மக்கள் படித்து வருவதாலும், தமிழ் நாடெங்கும் நமது சமூகம் அரசியல் பற்றிய ஞானம் ஓரளவு பரவியிருக்கிறது என்றே சொல்லலாம். அந் நாளில் அப்படியன்று. நான் என்னுடைய பிரசங்கங்களில் சொல்லிவந்த சில பல்லவிகளை இப்பொழுதும் தமிழ் நாட்டு நண்பர்கள் சிலர் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருக்கிறார்கள்.

நான் முதன முதலாகப் பேசிய விடங்களில், தமிழ் மக்கள் அரசியல் விஷயங்களில் அசிரத்தையாக இருக்கக் கூடாது என்பதற்கு ஓர் மேற்கோள் காட்டி, பல காரணங்கள் உரைத்து, அவைகள் ஒவ்வொன்றையும் சொல்லி முடித்தவுடன் "இராமன் ஆண்டால் என்ன? இராவணன் ஆண்டால் என்ன?" எனறு இருக்கக்கூடாது என, அடிக்கடி சொல்வது வழக்கம். அந்நாட்களில் என் பிரசங்கங்களை முடிக்கும்போதெல்லாம் நமது பாரதத்தாயின் புராதன சிறப்புகளையும் இப்பொழுது அவள் இருக்கும் நிலைமையையும் சுட்டிக்காட்டி, நம் தாயை நாம் புனருத்தாரணம் செய்யவேண்டுமெனச் சொல்லும்பொழுது எனக்கும் கேட்பவர்களுக்கும் மனம் புண்ணாகி சேர்ந்தாற் போல் வருத்தப்படுவோம். அப்படிச் சொல்லி முடித்தவுடன் ஜனங்களின் உற்சாகத்துக்கு அளவே இருக்காது. அப்படி நான் பேசும்பொழுது, பொதுவாக சம்ஸ்கிருத பதங்களையும் அதிகமாய் உபயோகிப்பது வழக்கம். நான்

தமிழ் பாஷை பேசும்பொழுது நூற்றுக்கு சுமார் ஐம்பது வார்த்தைகள் சமஸ்கிருத வார்த்தைகளாக இருக்கும். இன்றும் அப்படித்தான. அதைக் கேட்டு இதுகாறும் தமிழ் மக்கள் சந்தோஷப்படுகிறார்களே யொழிய, வெறுப்பு அடையவேயில்லை. என்றைக்கும் வெறுப் படைய மாட்டார்கள் என்பதும் எனது துணிபு. தமிழ் வார்த்தைகளையும் சமஸ்கிருத வார்த்தைகளையும் இடை இடையே சேர்த்துப் பேசுவது, முத்தையும் பவழத்தையும் சேர்த்துக் கோர்த்த மாலைபோல் இருக்கும். இது என் னுடைய அனுபவம், எனது நம்பிக்கை. அவ்விதம் பேசும் போது அப்பேச்சில், அர்த்த புஷ்டி இருக்கும் என்பதும் எனது கொள்கை. தமிழையும் சமஸ்கிருதத்தையும் சேர்த்துப் பேசினால் அதிரம்மியமான தொனி ஏற்படு கிறது. அம்மட்டுமல்ல, சுலபமான சமஸ்கிருதத்தோடு சுலபமான தமிழைச் சேர்த்துப் பேசினால், ஜனங்களின் மனதில் விஷயங்கள் பசுமரத்தாணிபோல் பதிகின்றன.

ஆனால், என் அனுபவத்தில் உயர்ந்த இலக்கணத் தமிழ் பேசினால், நாம் பேசும் நோக்கம் பயன்படுவதில்லை என்பது எனது அபிப்பிராயம். கூடியமட்டில் பொது ஜனங்கள் பேசும் தமிழைக்கொண்டு பேசவேண்டும். ஆனால், பிரசங்க மேடைகளில் பெரிய விஷயங்களைப் பற்றிப் பேசும்பொழுது, கொச்சைத் தமிழில் பேசுவது அழகாக இருக்காது கடுமையான தனித் தமிழையும் விட்டு நிரம்பக் கொச்சையான தமிழையும் விட்டு நடுத் தரமாக இலக்கண இலக்கிய முறைகளுக்கு விரோதமில் லாமல் சுலபமான அரிய தமிழில் பேசுவதுதான் உத்தமம் என்பது என்னுடைய அபிப்பிராயம். இத்தமிழ் எங்கும் சுலபமாக பரவிவிட்டது. உற்சாகத்தை உண்டாக்கக் கூடிய தாயிருக்கிறது

இம்மாதிரி நான் பேசும் தமிழை நானே கற்றுக் கொண்டிருக்கிறேன். நான் பள்ளியில் தமிழ் கற்றுக் கொண்டது அந்நாளில் 4 வது ஸ்டான்டார்டு என்னும்

வகுப்புவரைதான். அதாவது, என்னுடைய ஒன்பதாவது வயதுவரை. அதற்குப்பின், நான் பள்ளியில் கற்றது சமஸ்கிருதந்தான். ஆனல், பள்ளியில் படிக்கும்பொழுதே பொதுக் கூட்டங்களில் நான் பேச ஆரம்பித்துவிட்டேன். அப்பேச்செல்லாம் ஆங்கில பாஷையில்தான். நான் பள்ளியைவிட்டு, பொதுவாழ்வில் ஈடுபட்டபின் சில வருஷங்களில் ஆங்கிலத்தில்தான் பிரசங்கங்கள் செய்து வந்தேன். தமிழில் பேசச் சொன்னல் மிகவும் சங்கோஜப்பட்டு மறுத்துவிடுவேன் முதல் முதலாக நான் தமிழில் பொதுக் கூட்டத்தில் பேசியது 1910-ம் வருஷம், மதுராந்தகத்தில் காலஞ்சென்ற சர். சங்கரன் நாயர் தலைமையில் கூடிய கூட்டுறவு மகாநாட்டில்தான். ஏதோ ஆங்கிலப் பதங்களை அடிக்கடி உபயோகித்துக் கொண்டு ஒருவாறு பேசி முடித்தேன்.

பிறகு, பழகப் பழக, தமிழ் வார்த்தைகளும், தமிழ் வார்த்தை சரியாக அகப்படாத இடத்தில் சம்ஸ்கிருத வார்த்தைகளும் என் பேச்சுக்கு சாதகமாக வந்தன. பின்பு பலவருஷங்களாக நான் பேசிவரும் தமிழில் ஒரு ஆங்கிலப்பதம்கூட உபயோகிப்பது கிடையாது. நுட்பமான ராஜீய விஷயங்களைப்பற்றி விஸ்தாரமாகப் பேசும்போதுகூட ஆங்கில வார்த்தைகளை உபயோகிக்கவேண்டியதில்லை என்பதை நான் அனுபவத்தில் அறிந்துகொண்டிருக்கிறேன், Democracy, Federation, Budget, British Imperialism, Responsible Government, Sefeguards, Finance, Parliamentar ycontrol...

இம்மாதிரி வார்த்தைகளுக்கு எல்லாம் தமிழிலேயே பதங்கள் கண்டுபிடித்து உபயோகித்து வந்திருக்கிறேன். இந்த விஷயத்தில் தமிழ்நாட்டுத் தமிழ்ப் பத்திரிகைகள் ஏராளமாக உதவி செய்திருக்கின்றன. இப்பொழுது தமிழ்நாடு முழுவதும் ராஜீய பாஷையாகத் தமிழ் உபயோகப்பட்டு வருகிறது. ஆதலால் அந்த பாஷையில், ராஜீய எண்ணங்களுக்கும், ஆங்கில பாஷையில் உபயோ

கப்படுத்தும் ராஜீய வார்த்தைகளுக்கும், எந்தத் தமிழ் வார்த்தைகள் அவசியமான இடங்களில் எந்த சமஸ்கிருத வார்த்தைகள் உபயோகப் படுத்தலாம் என்பதைப்பற்றி ஓர் அகராதி தயாரித்துப் பிரசுரம் செய்வது உத்தமம் என்று நான் நினைக்கிறேன்

தமிழில் நாமாகப் பேசுவதைக் காட்டிலும், மற்றவர்கள் ஆங்கிலத்தில் பேசுவதை, சிறப்பாக ராஜீய விஷயங்களைப் பற்றிப் பேசுவதை, தமிழில் மொழிபெயர்த்து, தமிழர் அறியும்படி செய்வது மிகவும் சிரமமான காரியம். இந்தக் காரியத்தைச் செய்யும் பாக்கியம் எனக்குப் பல தடவை கிடைத்திருக்கிறது. மகாதமா காந்தி, தேசபந்து தாஸ், பாபு ராஜேந்திரப்ரசாத், சர்தார் வல்லபாய் படேல், பண்டிட் ஜவஹர்லால் நேரு இவர்கள் எல்லோரும் தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்யும்பொழுது அவர்களுடன் சென்று அவர்கள் செய்யும் ஆங்கில ராஜீயப் பிரசங்கங்களைத் தமிழில் மொழிபெயர்த்திருக்கின்றேன். அக்கூட்டங்களில் ஆங்கிலமும் தமிழும் தெரிந்தவர் அநேகர். அவர்களை நான் திருப்தி செய்திருக்கின்றேன். இரண்டு உதாரணங்கள் மாத்திரம் நான் சொல்ல விரும்புகிறேன்.

ஒருகால், சென்னைக் கடற்கரையில் மகாத்மா காந்தி ஆங்கிலத்தில் பேசியதை நான் தமிழில் சொல்லிக்கொண்டிருந்தேன். "My treatment is aseptic and not antiseptic" என்று சொன்னார். இன்னொரு தடவை திருச்சியில் தேச பந்துதாஸ் ஆங்கிலத்தில் பொதுக்கூட்டத்தில் பேசிக்கொண்டிருக்கும்போது "To discuss the ethics of Non-co-operation when Mahatma Gandhi is in jail is like botanising over your mother's grave. Now Satyamurthy, translate" என்று சொன்னார் அந்த சமயங்களில் எந்த வார்த்தைகளைக் கொண்டு தமிழில் நான் மொழி பெயர்த்தேன் என்று இப்பொழுது சொல்லமுடியாது. எனக்கு ஞாபகமும் இல்லை. ஆனால் என் மொழிபெயர்ப்பை ஜனங்கள்

ஆமோதித்தார்கள் என்பதைத் தங்களுடைய கரகோஷங்களினால் கட்டினார்கள்.

இன்னொரு பிரச்னை, தமிழ் பேசும்போது சமஸ்கிருத வார்த்தைகளை உபயோகிக்கக் கூடுமா, கூடாதா என்பது. இந்தப் பிரச்னை வெகு நாளைக்குமுன் தீர்ந்துவிட்டது. அதைப்பற்றி நாம் இப்பொழுது பேசுவதில் பயனில்லை. தமிழில் கம்பராமாயணம், தாயுமானவர் பாடல்கள், தேவாரம், திருவாசகம் முதலிய பல நூல்களில் ஏராளமான சமஸ்கிருத வார்த்தைகள் சேர்ந்து உபயோகப்பட்டிருக்கின்றன. என் அனுபவத்தில் தமிழர்கள் அவைகளைக் கேட்டு அபரிமிதமாக சந்தோஷப்படுகிறார்கள்.

தமிழுக்கும், சமஸ்கிருதத்துக்கும் விரோதம் இருக்கிறது. தமிழுடன் சமஸ்கிருதத்தைச் சேர்க்கக்கூடாது என்று சொல்லுபவர்கள் ஒரு சிறு கூட்டத்தார். அவர்கள் தமிழ் நாட்டாரால் பொருட்படுத்தப்படவில்லை. பொருட்படுத்தப்படவும் மாட்டார்கள். தமிழ் பாஷையின் பெருமையை, என்றைக்கும் காக்கவேண்டும்.

நம் தமிழ் மக்கள் சம்ஸ்கிருதம், ஹிந்தி, தற்காலத்தில் ஆங்கிலத்தையும் நன்றாகப் பயின்று, இந்திய தேச சேவையிலும், உலக வாழ்விலும், தங்களுக்கு உரித்தான பங்கை எடுத்துக்கொள்ள வேண்டும். மற்ற பாஷைகளைக் கற்பதினால், நம்முடைய பாஷையில் அபிமானம் குறையும் என்று சொல்வது வீண்வாதம். ஆகையால் என் தமிழ் சகோதர சகோதரிகள் தமிழை நன்றாய் ஆதரிப்பதுடன், கிணற்றுத் தவளை போலில்லாமல், முக்கியமான, அவசியமான, இதர பாஷைகளையும் படித்து தமிழில் உண்மையான அபிவிருத்தியைத் தேடவேண்டும்.

தமிழின் சிறப்பை நாம் அனுபவித்து மற்றவர்களும் அனுபவிக்கும்படி செய்யவேணடும். "யாமறிந்த மொழிகளிலே தமிழ் மொழிபோல் இனிதாவதெங்குங் காணோம்" என்ற உண்மையைத் தமிழரும மற்றவரும் அறியுமபடி நாமெல்லோரும் செய்யவேண்டும். நான் பேசும் தமிழ் வாழ்க.

# நான் விரும்பும் புஸ்தகங்கள்

[பம்பாய் ரேடியோவில் 12-11-41]

ரேடியோ ரஸிகர்களுக்கு நான் படிக்க விரும்பும் புஸ்தகங்களைப்பற்றிப் பேசும் சந்தர்ப்பம் வாய்ப்பதைப் பற்றி சந்தோஷம். பொதுவாக நம் நாட்டவர், நல்ல படிப்பாளிகளுங்கூட, தாங்கள் படிக்கவேண்டிய அள வுக்குப் புத்தகங்களைப் படிப்பதில்லை. அல்லது அவ காசம் நேர்ந்த போதெல்லாம் படிப்பது என்ற பழக்கமும் இல்லை. இது வருந்தத் தக்கது. புஸ்தக விஷயத்தில் ஒரு சாதாரண ஆங்கிலேயன் செலவு செய்வதைவிட மிக்க குறைவாகவே ஓர் இந்தியன் செலவிடுகிருன். நான் இங்கி லாந்து சென்றபொழுது சுரங்கத் தொழிலாளி, கொத்து வேலை செய்பவர்கள் போன்ற ஏழை மக்களின் விருந்தின ஞக இருந்திருக்கிறேன். அவர்கள் வீட்டில் நல்ல புஸ்த கங்கள் போதிய அளவுக்கு இருப்பதையும் அவற்றை அடிக்கடி படிப்பதையும் கண்டிருக்கிறேன்.

இந்தியாவில் வெகு சிலரே புஸ்தகங்கள் விலை கொடுத்து வாங்கக் கருதுகிருர்கள் அறிவுடைய பெற் ருேராலும் பிறராலும் சேமிக்கப் பெற்றுத் தங்களுக்குக் கிடைத்த புஸ்தகத் தொகுதிகளையுடையவர்களுங்கூட அவற்றை வேண்டிய அளவு பயன்படுத்திக்கொள்வ தில்லை. நம் நாட்டில் இப்போது பொதுப் புஸ்தகசாலைகள் பெருகி வருகின்றன. ஆனுல் இந்த புஸ்தகங்களை முறை யாக உபயோகிப்பவர்கள் பிறநாடுகளைவிட இங்கே குறைவாக இருக்கிருர்கள்.

புஸ்தகங்கள மனிதனின் சிறந்த சிநேகிதர்கள். நீங்கள் விரும்பினுலன்றி அவைகள் உங்களுடன் பேசுவ தில்லை. அவைகளுடன் பேச உங்களுக்கு விருப்பமில்லா

விட்டால் நீங்கள் அவைகளை மூடிவைத்து விடலாம். நெடுங்காலத்தைக் கடந்து இன்றுவரையும் சிரஞ்சீவித் துவம் வாய்ந்துள்ள புஸ்தகங்கள், மன எழுச்சி யளிக்கும் முறையில் உங்களுடன் பேசுகின்றன. ஆகையால் நான் படிக்க விரும்பும் புஸ்தகங்களைப் பற்றிய என அனுபவங் களை உங்களுக்குக் கூற விரும்புகிறேன்.

சாதாரணமாகப் படிபபுளள ஓர் இந்தியனுக்கு, குறைந்தது இரண்டு பாஷையாவது தெரிநதிருக்கும். அவை, தாய் மொழியான தமிழ், ஹிந்தி, மராத்தி, குஜராத்தி, தெலுஙகு, முதலியவற்றில் ஒன்றும் ஆங்கி லமும ஆகும். ஒரு வேளை சமஸ்கிருதமும் தெரிந்திருக்க லாம். முஸ்லிமானு யிருந்தால் பெர்ஷியன் அல்லது உருது தெரிந்திருக்கும். இம்மாதிரி இருபாஷை தெரிந்த இந்தி யர்கள் தெரிந்தெடுத்துப் படிக்கக்கூடிய புத்தகங்கள் ஏராளமா யிருக்கின்றன. நான் கூறுவது ஆசசரியமா யிருக்கலாம். ஆனால் அது உண்மை.

பெரும்பாலான படித்த இந்தியர்கள், ஆங்கிலப் புஸ்தகங்களையே பெரிதும் விரும்பிப் படிக்கிறார்கள். நான் அடிக்கடி படிக்க விரும்பும் புஸ்தகங்களும் ஆங்கில நூல்களே என்பதையும் தெரிவித்துக்கொள்கிறேன். இவைகளில் ஷேக்ஸ்பியர் நாடகங்களுக்குத் தான் முதல் ஸ்தானம் அளிப்பேன். ஷேக்ஸ்பியர் நாடகங்களிலும் கவிதைகளிலும் ஒரு வரி விடாமல் எனக்குத் தெரியும் என்று கூறுவேன். இதனால் தற்பெருமை பாராட்டிக் கொள்வதாக நீங்கள் எண்ணுதல் கூடாது. ஷேக்ஸ்பியர் நாடகங்களிலும், சோக நாடகங்கள் தான் சிறநதவை. எப்பொழுது நேர்ந்தாலும் அவைகளை நான் திரும்பத் திரும்பப் படிக்கின்றேன். மறுபடியும் படிக்க விரும்புகின் றேன். இதற்குக் காரணம் சுலபமாகக் கூறிவிடலாம். மனித உணர்ச்சிகளைக் கடந்து நம் உள்ளத்தை உருக்கு கிறார் ஷேக்ஸ்பியர் மனித வாழ்க்கை சம்பந்தமான பிரச்னைகளைத் தீர்ப்பதிலோ சொல்லலங்காரத்திலோ

மட்டும் அவர் நம் மனதைக் கவர்ந்து விடுவதில்லை. நம் ஆசாபாசங்களை அவர் சித்தரிப்பதுதான் கவர்ச்சிக்குக் காரணம். அவருடைய ஹாம்லெத்-ஒபீலியா, லியர்-கார்டிலியா, மாக்பெத்-லேடி மாக்பெத், ஒதெல்லோ-டெஸ்டிமோனு ஆகிய பாத்திரங்கள் வெறும் கற்பனைகள் அலல. உலகத்தில் நடமாடும் மனித வர்க்கத்தின் பிரதிநிதிகள். மற்றொரு தலை முறையில் வாழ்ந்தவர்களின் வாழ்க்கையை அவர் சித்திரிக்கிருர் என்பது உண்மை ஆனால் அவர்களுடைய உணர்சசி அவர்களுடைய பேச்சு, அவர்களுடைய சிந்தனைகள் எல்லாம் என்றென்றும் மக்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத் தக்கவை.

மனித பௌருஷத்தை, மனித வளர்ச்சியை சித்திரிப்பதில் ஷேக்ஸ்பியருக்கு நிகராக யாரையும் கூற முடியும் என்று எனக்குத் தோன்றவில்லை. பெர்னார்ட் ஷாவின் நூல்களைப் படிப்பதிலும் எனக்குப் பிரியமுண்டு ஆனால் அவர் "தான்" என்கிற எண்ணம் அதிகமாகக் கொண்டவர். பணக்காரராயிருந்து சோஷலிஸ்ட் என்று சொல்லிக்கொள்வதில் பிரியங்கொண்ட கோஷ்டியைச் சேர்ந்தவர். சமூகத்தில் அவர் அதிர்ச்சியை உண்டாக்கினாலும் அவர் நிம்மதியுடன் வாழ்க்கை நடத்துகிருர். அவருடைய நாடகங்கள் ருசிகரமானவை, படிக்கத் தகுந்தவை.

இன்னும் நான் படிக்க விரும்பும் ஆங்கிலக் கவிஞர்கள் ஷெல்லி, கீட்ஸ், டெனிஸன், பிரௌணிங் போன்ற பலர் இருக்கின்றனர். இவர்களில் பிரௌணிங்கின் கவிதை சுலபமாகப் புரியக்கூடியதன்று. ஆங்கிலத்தில் பல உயர்ந்த நாவல்கள் இருக்கின்றன. இந்த பாஷையில் நவீனங்கள் வெகு வேகமாகப் பெருகி வருகின்றன.

ஆனால் ஸர் வால்டர் ஸ்காட் நாவல்களில் ஒரு தனிக் கவர்ச்சி இருக்கிறது. அவருக்கு நிகரான நாவலாசிரியர் இன்னும் தோன்றவில்லை. அவைகளை மீண்டும் மீண்டும்

படிக்க விரும்புகின்றேன். ஜார்ஜ் மெரிடித்தின் நாவல்களில் ஏதோ தனி மர்மம் இருக்கிறது. நளினமான வசன நடை வேண்டுமானால் டிக்கின்ஸி, சார்லஸ்லாம்ப் ஹாஸ்லிட் முதலியவர்களின் புஸ்தகங்களைப் படிக்க வேண்டும். இம்மாதிரிப் புஸ்தகம இன்னும் எத்தனையோ குறிப்பிடலாம். தற்காலத்தில் பிரசித்திபெற்ற நூலாசிரியர்கள் எத்தனையோ பேர் இருக்கின்றனர். ஆனால் பழைய பெரியவர்கள் புஸ்தகங்களையே பெரிதும் நான் படிக்க விரும்புகிறேன்.

ஆங்கிலத்திற்கு அடுத்தபடியாக நான படிக்க விரும்பும் புஸ்தகங்கள் சமஸ்கிருத பாஷையைச் சேர்ந்தவை. சமஸ்கிருத புஸ்தகங்கள் படிப்பது பெரும்பாலான ஹிந்துக்களின் தினசரி வழக்கம். இவைகளை தினசரி பாராயணம் செய்கின்றோம். சமஸ்கிருத இலக்கியங்களில் தயக்கமன்றி வால்மீகி ராமாயணத்திற்கு முதல் ஸ்தானம் கொடுப்பேன். ஒவ்வொரு தரம் படிக்கையிலும் ஒரு தனி அழகு தென்படுவது தான் அழகிய இலக்கியத்தின் சிறப்பு என்று ஒரு சமஸ்கிருத கலைஞர் கூறுகிறார்.

இதை அளவு கோலாகக் கொண்டு பார்த்தால் வால்மீகி ராமாயணம் தனி அழகு வாய்ந்த தென்பதில் தடையில்லை. வால்மீகி ராமாயணத்தை நான் பன்முறை படித்திருக்கிறேன். அதைத் தினசரி படித்து வருகிறேன். ஒவ்வொரு தடவையும் புது அழகு, அதிசயிக்கத்தக்க புதிய பொருள் காண்கிறேன். ராமாயணம் தேவதைகள், குரங்குகள், ராட்சசர்கள் நிரம்பியதாலும் மனித உணர்ச்சி நிரம்பிய சாதாரணக் கதை. அந்தக் கதை என்றென்றும் மனித உள்ளத்தைக் கவரத்தக்கது. ராமாயணததின் உன்னத பாததிரங்களான ராமர், ஸீதை, லட்சுமணர், ஹனுமான் ஆகியோர் இன்றும வாழ்பவர்கள் போல் நமக்குப் புரியும் பாஷையில் பேசுகிறார்கள்.

வால்மீகிக்கு அடுததாற்போல் நாடக உலக சிரேஷ்டரான காளிதாஸனைக குறிப்பிடுவேன். காளிதாஸனின்

சாகுந்தலத்திற்கு அழகிய மொழிபெயர்ப்புகள் ஆங்கிலம், ஜெர்மன், பிரெஞ்சு முதலிய பல ஐரோப்பிய பாஷைகளில் வெளி வந்திருக்கின்றன.

ஆனால் பிரசித்தி யடையவேண்டிய அளவிற்கு உலக மக்களிடையே பிராபல்யம் பெறவில்லை. கவர்ச்சி மிக்க காட்சிகள், குண சித்திரம், காதல், கருணை, துக்கம் தீரம், தியாகம் முதலிய மனித உணர்ச்சிகள் சித்தரிப்பு- இந்த அம்சங்களில் அதற்கு நிகரானது கிடையவே கிடையாது என்று கூறிவிடலாம். அது வெறும் காதற்கதை யன்று. காதல் கனிவு பெற்று தியாகமாக மாறுகிறது இந்த நாடகத்தில். சமஸ்கிருதத்தில் சூத்ரகனின் மிருச்ச கடிகையும் பவபூதியின் நாடகங்களும் இருக்கின்றன. அவைகளும் உன்னதமானவை. இவைகள் பன்முறை படிக்கத்தக்கவை. நான இந்நாடகங்களை சந்தோஷமாகப் படிப்பதுண்டு.

ஆனல் தாய் பாஷைதான் நம் இருதயத்தை சுலப மாகத் தொடுகிறது. என தாய் பாஷை தமிழ். ஆனல் பழந் தமிழ் இலக்கியங்கள் பண்டிதர்கள தவிர மற்றவர் கள் படித்து சாதாரணமாக அனுபவிக்கக் கூடாதவையா யிருக்கின்றன. எளிய தமிழ் நடையில் நவீன கதைகளும் இதர புஸ்தகங்களும் எழுதப்பட்டு வருகின்றன.

ஆனல் தேவையான அளவுக்குப் புஸ்தகங்கள் இன் னும் வெளிவரவில்லை. இம்மாதிரி புஸ்தகங்கள் வெளி வந்தால் அவைகளை நான் படிக்க விரும்புகிறேன். மராத்தி யிலும் குஜராத்தியிலும் ஏராளமான புஸ்தகங்கள் நவீன முறையில் எழுதப்பட்டு வருவதாக அறிகிறேன். இந்தப் பாஷைப் பிரியர்கள் இந்தப் புஸ்தகங்களை நிரம்ப வாங்கிப் படித்துப் பயன் பெறுவார்கள் என்றும் எதிர் பார்க்கிறேன்.

புஸ்தகங்களின் பாஷையைவிட அவைகளில் பொதிந்து கிடக்கும் எண்ணங்களே முக்கியமானவை. இந்த எண்ணங்களை நவீனமான நடையில் அலங்கரித்தால்

அவை மனித உள்ளத்தை எளிதில் கவரும் என்பதில் சந்தேகமில்லை. இம்மாதிரி புஸ்தகங்கள் எல்லா இந்திய பாஷைகளிலும் வெளிவரவேண்டும்.

ரயிலில் பொழுது போவது கஷ்டமாயிருக்கையில் எந்த மாதிரிப் புஸதகங்கள் படிக்கலாம் என்பதைக் கடைசியாய்க் குறிப்பிடுகிறேன். எட்கார வாலஸ் போன்ற ஆசிரியர்களின் துப்பறியும் நாவல்கள் நம் மனதைக் கவர்கின்றன. இந்தப் பிரசங்கத்தைக் கேட்பவர்கள என் அபிப்பிராயத்தை ஏற்றுக்கொள்கிறார்களோ, என்னவோ—இந்த நவீனங்கள் சுலபமாகச் சலிப்புத்தட்டி விடுகின்றன.

எல்லா நவீனங்களும் ஒரே மாதிரியா யிருக்கின்றன. நவீனங்களில் தோன்றும் குற்றவாளி கவர்ச்சிதரும் மனிதனல்ல ஆனால் ஷெர்லாக் ஹோம்சின் நவீனங்கள் விதிவிலக்கானவை. இவர் புத்தகங்கள் மிகச்சிலவே இருக்கின்றன.

காதலால் ஏற்படும சிக்கலை விவரிக்கும் நவீனங்கள் அடுத்தபடியானவை. இவைகளும் ஒரே மாதிரியான கதைகளாகவே இருக்கின்றன. இந்த ரஸமற்ற பாத்திரங்கள் மனத்தை உருக்கும், அல்லது கிளர்ச்சி செய்யும் அம்சம் எதுவுமில்லை. ஆனால் பொழுதுபோக்க இவைகள் உபயோகப்படுகின்றன. ஆகையால் இம்மாதிரி புஸ்தகங்களும் நிறைய எழுதப்படலாம்.

இன்னும் நான் படிக்க விரும்பும் புஸ்தகங்கள் அநேகம் இருக்கின்றன. அவைகளைப் பற்றிக் குறிப்பிட அவகாசம் இல்லை. படிக்க படிக்க இன்னும் படிக்க வேண்டும் என்கிற எண்ணம் அதிகரிக்கிறது. இந்தக் காலத்தில் அழகாக அச்சிடப்பட்ட அருமையான புஸ்தகங்கள் வெளிவருகின்றன. இவைகளெல்லாம் படிக்கத் தக்கவை. இம்மாதிரி புஸ்தகங்களில் அவரவர்கள் இஷ்டத்திற்கேற்றபடி அதிக புஸ்தகங்கள் படித்து, சதா சர்வ காலமும் உலகத்தை உய்விக்கும் பேராசிரியர்கள் குழாத்தில் கலந்து வாழ்வோமாக!

# சட்டங்கள் எதற்கு?

மனிதனுக்கும் மிருகத்துக்கும் உள்ள முக்கியமான வித்தியாசம் பகுத்தறிவு. சிறப்பாகத் தனக்குள்ள சுபாவததினுலேயோ, அல்லது தனக்கு வேண்டும் வேண்டாம் என்ற காரணத்தாலேயோ, கேவலம ஆசையினுலோ, பயததினுலோ விஷயங்களை நிர்த்தாரணம் செய்து காரியங்களைச் செய்வதைக் காட்டிலும், எது நல்லது எது கெட்டது (தனக்கும் உலகுக்கும) என்று அறிந்து காரியங்களைச் செய்வதும் செய்யாமலிருப்பதும் தான் பகுத்தறிவு. அம்மாதிரிப் பகுத்தறிவைச் சரியாய் உபயோகித்து ஒவ்வொரு விஷயததைப் பற்றியும், ஏன் நாம் இதைச் செய்யவேண்டும், அல்லது ஏன் இதைச் செய்யலாகாது என்று உணர்ந்து நடப்பதுதான் மனிதனுடைய கடமை.

சட்டங்கள் பலவகை. முதலாவது வகை ஆண்டவன் செய்திருப்பதாக மனிதர்கள் நம்பும் சட்டங்கள். பாபம் செய்யக்கூடாது; புண்ணியம் செய்யவேணடும்; பிறருக்குத் தீங்கு செய்யலாகாது; முடிந்த அளவில் பிறருக்கு உதவி செய்யவேண்டும் என்பவை அம்மாதிரி சட்டங்களில் முக்கியமானவை ஆனால் இச்சட்டங்களை லௌகிக அர்த்தத்தில் சட்டங்கள் என்று சொல்ல முடியாது. ஏனென்ருல் அச்சட்டங்களை மீறி நடந்தால் அவர்களைத் தண்டிப்பதற்கும் அச்சட்டங்களின்படி நடந்தால் அவர்களைப் பாராட்டவும் இவ்வுலகில் அதிகாரங்களோ அதிகாரிகளோ இல்லை. ஒவ்வொரு மனிதனுடைய மனச்சாட்சிதான், அதிகாரம், அதிகாரி. இச்சட்டங்கள் ஏன் இருக்க வேண்டுமென்ருல், மனிதனுக்கு மனச்சாட்சியும் தெய்வ பக்தியும இருப்பதுதான் காரணம். இச்சட்டங்கள் ஒழியாது. இவைகள் மனிதனல் ஆக்கப்பட்டதல்ல. இவற்றை மனிதனல் அழிக்கவும் முடியாது; அழிக்கவும்

கூடாது. அழித்தால் நம்முடைய நாகரிகம் நசித்துப்போம் நாம் கேவலம மிருகங்களாய் விடுவோம்.

அடுத்தாற்பொல் சில சட்டங்கள் இருக்கின்றன. இவை இயற்கைச் சட்டங்கள். நெருப்புச் சுடும்; பனி குளிரை உண்டாக்கும்; மேலே உள்ள சாமான்களைப் பூமி இழுக்கும். காற்றுப் பறக்கும், பிறந்தவனுக்குச் சாவுண்டு; மனிதனுக்கு விருப்பு, வெறுப்பு, பசி, தாகம் முதலியன உண்டு இவைகளை நான் உதாரணங்களாகச் சொல்லியிருக்கிறேன். இம்மாதிரி அநேக சட்டங்கள் இருக்கின்றன. இவைகளைச் சட்டங்கள் என்று சொன்னது ஒரு அர்த்தத்தில்தான். இச் சட்டங்கள மனிதனால் செய்யப்படவில்லை. இவற்றை மனிதனால் மாற்றமுடியாது ஆனால், இச்சட்டங்களின்படி மனிதன் நடந்து தான் தீரவேண்டும். இவைகளுக்கு மாறாக நடந்தால் மனிதனுக்குக் கைகண்ட தண்டனை கிடைக்கும்.

இவ்விரண்டு வகைச் சட்டங்களைத் தவிர, மனிதனால் செய்யப்படும் சட்டங்கள் இன்னும் பல இருக்கின்றன. அவற்றில் முக்கியமாக இரண்டு வகை உண்டு. சட்ட சபைகள் மூலமாகவோ, மற்ற வழியிலோ. மனிதனால் எழுதப்பட்டு அங்கீகரிக்கப்படும் சட்டங்கள் ஒரு வகை. இரண்டாவது வகை எழுத்து மூலமாய் இல்லாமல் புராதனமாய் சாசுவதமான சட்டமென்று மனிதன் நம்பி அதனபடி நடக்க முயல்வது; அதைத் தவறி நடந்தால் சட்டப்படியோ, அல்லது வேறுவழியிலோ மனிதனைத் தண்டனைக்குட்படுத்துவது. சமஸ்கிருதத்தில் இதை "தர்மம்" என்பார்கள். ஆங்கிலத்தில் "காமனலா" என்பார்கள். தமிழில் "நல்லொழுக்கம்" என்பார்கள். இம்மாதிரிச் சட்டம் ஒன்றில்லாமல் மனித சமூகம் நாகரிக வாழ்க்கை நடத்த முடியாது.

ஆனால் இச்சட்டம இன்னதென்று அப்போதைக்கப்போது நீதிபதிகளும் பெரியார்களும் நிச்சயம் செய்வார்கள். அநேக தேசங்களில் இச்சட்டம் இன்னதென்று

பொதுவாக ஜனங்களுக்குத் தெரிந்திருக்கிறது. மனித சமூகங்கள் அவற்றை ஒப்புக்கொண்டிருக்கின்றன. ஆனால் நாளடைவில் நாகரிகம் மாறும்பொழுதும் மனிதனின் எண்ணங்கள் மாறும் பொழுதும் இச்சட்டங்கள் அப்போதைக் கப்போது மாறிக்கொண்டு வருகின்றன. ஒரு வண்டியின் சக்கரங்கள் சமமாகவும் சுலபமாகவும் ஓடுவதற்கு எண்ணெய் எவ்வளவு அவசியமோ அதேமாதிரி மனித சமூகம் வாழ்வதற்கும் இம்மாதிரிச் சட்டங்கள் இன்றியமையாதவை இச்சட்டங்கள் எதற்கு என்று கேட்டால் மனிதன் எதற்கு என்றுதான் பதில் சொல்ல முடியும்.

முக்கியமாக, ஒவ்வொரு தேசத்திலும் மனிதனால் செய்யப்பட்டு மனிதனால் மாற்றப்படக்கூடிய சட்டங்கள் உண்டு. அச்சட்டங்களின்படி நாகரிக தேசங்களில் மனிதன் நடந்துதான் தீரவேண்டும். சட்டம் தெரியாதென்று எவனும் சொல்ல முடியாது; தவறி நடந்து அகப்பட்டுக் கொண்டால் தண்டனைக்குள்ளாவான். அம் மாதிரிச் சட்டங்கள், மூவகைக் குற்றங்களைத் தண்டிக்கும் சட்டம். மனிதனுக்குச் சொத்து முதலிய விவகாரங்களைப்பற்றி ஏற்பட்டிருக்கும் சட்டம் சமூக வாழ்விற்குச் சாதனமாக, வரிவிதிக்கும் சட்டம், சுகாதாரச் சட்டம் முதலியவை. வாஸ்தவமாக மனிதன் நல்ல சுபாவத்தைப் பூராவாக அடைந்து களவு, பொய், பேராசை முதலிய குற்றங்களைச் செய்வதில்லை யென்று ஏற்பட்டால், குற்றங்களைத் தண்டிக்கும் சட்டம் வேண்டாம். அம்மாதிரி ஒரு நாள் மனிதன் ஆவான் என்பது பலருடைய நம்பிக்கை. ஆனால் வெகுகாலம் ஆகும். அது வரை இச்சட்டங்கள் இருக்க வேண்டியது தான்.

அதேமாதிரி இன்னொருவன் சொத்தை அபகரிக்க வேண்டும், ஆக்ரமிக்க வேண்டும் என்ற துராசையில்லாமல் எல்லோரும் சம உரிமை பெற்று வாழவேண்டுமென்றிருந்தால், சொத்து முதலிய விஷயங்களைப்பற்றிய சட்டங்கள் அவசிய மில்லாமலிருக்கலாம்.

ஆனால் அது மட்டும் போதாது. இப்பொழுது உலகெங்கும் ஏழை பணக்காரர்கள், முதலாளி தொழிலாளி, ஜமீந்தார் குடிகள் என்ற வித்தியாசத்தை ஒழிக்கவேண்டும், அல்லது அடிப்படையாக மாற்றவேண்டும் என்ற எண்ணம் பரவியிருக்கிறது. ஆகையால் சொந்தச்சொத்து என்னும் விஷயத்தைப்பற்றி இப்பொழுது இருக்கும் சட்டங்கள் போதாது, சரியானவை அல்ல என்றும், அவை அடியோடு மாறவேண்டுமென்றும் உலகமுழுவதும் நம் நாட்டிலும் பெருத்த கிளர்ச்சி நடந்துவருகிறது.

ஆதலால் இம்மாதிரிச் சட்டங்கள் ஏன் என்று நாம் நன்றாய்க் கேட்கலாம் ஆனால் அதற்குப் பதில் இவ்விஷயங்களில் சட்டங்களே வேண்டாமென்பது இல்லை. அச்சட்டங்களை எல்லா மனிதர்களின் முன்னேற்றத்திற்கும் அனுகூலமாகத்திருத்தி அமைக்க வேண்டுமென்பதுதான்.

மூன்றாவது வகைச் சட்டம் மனித சமூகம் ஒற்றுமையாகவும் சுகமாகவும் வாழ்வதற்கு ஏற்ற சட்டம். மனித சமூகம் வாழ்வதற்கு, மனித சுபாவம் மேலே சொன்னபடி முற்றும் மாறும் வரையில் அரசாங்கம் வேண்டும். ஜனநாயக முறையிலோ வேறு எந்த முறையிலோ ஓர் அரசாங்கம் நடந்துதான் தீரவேண்டும். எம் முறையாயிருந்தாலும் ஓர் அரசாங்கம் நடத்துவதற்குப் பணம் வேண்டும். "பணத்தைக்கொடு" என்று சட்டரூபமான அதிகாரமில்லாமல் அரசாங்கத்தார் தயவாகக் கேட்டால் பணம் கிடைக்காது. வரி விதித்து வசூலிக்கவும், வரி கொடுக்காவிட்டால் தண்டனை விதிக்கவும், சர்க்காருக்கு அதிகாரம் கொடுக்கும் சட்டம் அவசியம் வேண்டும். இச்சட்டங்கள் 'ஏன்' என்று கேட்டால் அரசாங்கம் மனித வாழ்க்கைக்கு அவசியமா யிருக்கும் வரையில் இச் சட்டங்களும் அவசியமே.

ஆனால் ஏழை மக்களுக்கு இச் சட்டங்கள் ஏன் என்று கேட்கலாம். அவர்களுக்குப் பதில், வரி விதிக்கும் மார்க்கத்தில் சில மாறுதல்கள் செய்யலாமே ஒழிய, வரி

விதிக்கும் சட்டம் இருக்கத்தான் வேண்டும். முக்கிய மான மாறுதல், ஏழைகள் எவ்வளவு கொடுக்க முடியுமோ, அவ்வளவு மட்டுந்தான் வரி கொடுக்கும்படி கட்டாயப்படுத்த வேண்டும்; பணக்காரர்கள் சர்க்காருக்கு வேண்டிய அளவு அதிக வரி கொடுக்கத்தான் வேண்டும்.

இவற்றைத் தவிர பொதுவாக சமூக வாழ்க்கை நன்ருக நடப்பதற்காகச் சில சட்டங்கள் இருந்தே தீர வேண்டும். முக்கியமாக சுகாதாரச் சட்டங்கள். நம் நாட்டில், நாம் உடம்பையும், துணிகளையும் சுத்தமாக வைத்துக்கொள்ள ஆவலுள்ளவர்களா யிருந்தபோதிலும், நம்முடைய பக்கத்து வீடுகள், நாம் வசிக்கும் சாலைகள், சந்துகள், பேட்டைகள், கிராமங்கள், நகரங்கள், பரிசுத்தமா யிருக்கவேண்டும் என்பதின் அவசியத்தை நாம் அறியவில்லை. இதைக் கேவலம் பிரசாரத்தினுல் மனிதர்கள் அறியும்படி செய்யமுடியாது. சரியான சட்டங்கள் செய்து அதன்படி ஜனங்களை நடக்கக் கட்டாயப்படுத்த வேண்டியதுதான். இச்சட்டங்கள் ஏன் என்று கேட்டால் மனிதன் சுகமாய் வாழ்வதற்குத்தான்.

நான் சில உதாரணங்களைச் சொல்லி யிருக்கிறேன்; தெய்வீக இயற்கைச் சட்டங்களைத் தவிர மனிதன் செய்யும் சட்டம் ஒவ்வொன்றைப் பற்றியும், 'ஏன்' என்று கேட்பதற்கு மனிதனுக்கு உரிமை உண்டு. அக்கேள்விக்குச் சரியான பதில் ஜனநாயக ஆட்சியின்கீழ் ஜனப் பிரதிநிதிகள் ஜனங்களின் எண்ணத்தை அறிந்து பொது நலத்தை உத்தேசித்துச் சட்டம் செய்வதுதான்.

சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதென்ருல் கேவலம் போலீஸ், மாஜிஸ்ட்ரேட் அதிகாரத்தினுல் மட்டும் முடியாது. சட்டங்கள் பொதுஜன அபிப்பிராயத்துக்கு இணங்க இருக்கவேண்டும். ஜனங்கள் சட்டங்கள் ஏன் என்று கேட்டால், உங்கள் க்ஷேமத்துக்குத்தான் என்று உண்மையாகப் பதில் சொல்லவேண்டும்.

# தென்னிந்திய நாடகம்

தென்னிந்திய நாடகமேடை இன்னும் பழைய மாதிரியிலேயே இருந்து வருகிறது. அதில் சில நல்ல அம்சங்களும், சில கெடுதல்களும் சேர்ந்தே இருக்கின்றன. அது அபிவிருத்திக்குரிய வழிகளைத் தேடி, ஒருவாறு வெற்றி பெற்று வந்தாலும், தீவிரமான சில குறைபாடுகள் இன்னும் இருக்கின்றன என்பதை ஒப்புக்கொள்ளவே வேண்டும். நாடகத்தில் அநுதாபமுள்ள விமர்சகர்கள், குறைகளை மட்டும் எடுத்துக் காட்டுவதை விட, அவற்றை நீக்கும் வழிகளில் மனம் செலுத்துவரென நான் நம்புகிறேன்.

தென்னிந்திய நாடகங்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவற்றிற்கு வேதபூர்வமான ஆதாரங்கள் இருக்கின்றன. அதாவது வேதகால முதலாகத் தோன்றியது நாடகம். "உலக நிகழ்ச்சிகளுக்கு அனுகுணமாக நான் இந்த நாடகத்தை சிருஷ்டித்திருக்கிறேன்................" என்று பிரும்மாவே தெரிவித்திருக்கிறார். நாடகத்தைப்பற்றி இதைவிடப் பூரணமான அபிப்பிராயம் வேறு இருக்க முடியாது.

நாடகத்தின் சித்தாந்தம் வேதங்களிலிருந்து பிறந்ததாகும். அதன் சாரம் ரிக்வேதத்திலிருந்தும், சங்கீதம் சாம வேதத்திலிருந்தும், நடிப்பு யஜுர் வேதத்திலிருந்தும், உணர்ச்சி, ரஸங்கள் இவை அதர்வண வேதத்திலிருந்தும் தோன்றியிருக்கின்றன.

தென்னிந்திய நாடகத்தை எடுத்துக் கொள்ளலாம். "வேஷம்" என்பது பூர்விக திராவிடர்கள் உருவாக்கிய

முறை என்று தெரிகிறது. முதலில் பொதுவாக இந்த வேஷங்களெல்லாம் ஒரே பேர்வழி தரித்துக்கொள்வதா யிருந்திருக்க வேண்டும். பூர்விக ஜோடனைகளால் அவர் இரவில் வேஷம் புனைந்து, பாட்டுக்கள், அபிநயங்கள் இவற்றுடன் நடிப்பது வழக்கம்.

அடுத்தபடியாக இதில் ஒரு அபிவிருத்தி ஏற்பட்டது. நாடக பாத்திரங்களின் எண்ணிக்கை பெருகிற்று, சம்பா ஷணை அமைக்கப்பட்டது. ஒரு நோக்கத்தைக் குறிக் கும்படி நாடகத்துக்கு ஒரு கட்டமும் புகுந்தது. ராமா யணம், மகாபாரதம் போன்ற மத சம்பந்தமான நாடகங் களும் தோன்றின. "வாழ்க்கையின் உயர்ந்த உண்மை களை உணர்த்த மேல் நாடுகளில் நாடகங்கள் மூலமாக முயற்சி நடந்தது. படிப்பில்லாதவர்களுக்கு அவைகளைப் புரியும்படியாகச் செய்வது அதன் நோக்கம். அதைப் போலவே இந்தியாவிலும் வாழ்க்கையின் உன்னதக் கொள்கைகளைப் பாமரர்களுக்கு அறிவிக்க, பிரும்மாவால் 5-வது வேதமாக சிருஷ்டிக்கப்பட்டதெனச் சொல்லப் படுகிற "நாட்டியம்" என்பதன் மூலம் முயற்சி நடந்தது" என்று ஒரு எழுத்தாளர் வரைந்திருக்கிறார். நடனமும் நாடகத்தின் பிரதான அம்சம்தான்.

இது காரணமாக, சமீபகாலம் வரையில் எல்லாக் கிராமங்களிலும், சில நகரங்களிலும் "தெருக்கூத்து"கள் நடந்து வந்தன. இப்பொழுதும் சில கிராமங்களில் இவை நடக்கின்றன. "தெருக்கூத்தில்" நடிப்பவர்கள் நடிப்பையே தொழிலாகக் கொண்டவர்கள். தங்களிட முள்ள ஜோடனைகள், பழைய காலத்து உடைகள் இவற்றுடன் கிராமம் கிராமமாகப் போவார்கள். அவர் களில் தலைவனாகவுள்ள ஒருவன், கூத்துக்காக அடுத்தாற் போல் போகவேண்டிய கிராமத்துக்கு, முன்னதாகவே சென்றுவிடுவான். அங்கே கிராமத்தில் பிரதானமாக இருப்பவர்களைப் பார்த்து அவர்கள் ஆதரவைத் தேடிக் கொண்டு மேற்படி கிராமத்தில் பொதுவாக உள்ள ஒரு

இடத்தைத் தேர்ந்துகொள்வான். பிறகு அங்கே கூத்து நடக்கும். அநேகமாக "ஹரிச்சந்திரன்", "மார்க்கண் டேயர்" ஆகிய சரித்திரங்கள்தான் நடக்கும் இந்த நாடகங்கள் எப்போது ஆரம்பிக்கும் எப்போது முடியும் என்று குறிப்பாக நேரத்தைச் சொல்லமுடியாது. இரவு 10 அல்லது 11 மணிக்குக் கிராமத் தலைவர் வந்ததும் கூத்து ஆரம்பமாகும். இந்த நாடகத்துக்கு மேடை கிடையாது. கிராம வாசிகளெல்லாம், கூத்தாடிகள் நடிக்கும் இடத்தைச் சுற்றிலும் உட்கார்ந்துவிடுவார்கள். கூத்து ஆரம்பிக்குமுன் பாட்டு; அடுத்தபடி நாடகத்தை நடத்துபவர் நீண்ட கதை சொல்வார். பின்னர் நடிகர் வருவார். அவர், மிக எளிய முறையிலும், நாகரிகமில் லாதவகையிலும் உடை தரித்துக் கொண்டிருப்பார். இந்த வேஷத்தைத் தாங்கியிருப்பவர் யார் என்பதைக் 'கட்டியக்காரர்' தெரிவிப்பார். அநேகமாக அவசியமற்ற பாட்டுக்களெல்லாம் இக்கூத்துக் கிடையே பாடப்படும். இடையே 'கோமாளி' என்று ஒருவர் வருவார். எல்லா ஸீன்களிலும் இவர் இருப்பார், இதனால் நாடகம், வளர்ந்துகொண்டேபோகும். சூரியோதயத்தின் போது தான் இக்கூத்து முடியும். உதய ராகம் பாடியதும் நாடகம் அஸ்தமிக்கும். நாடகத்தைப் பார்க்க வருபவர் களுக்குக் கட்டணமேதும் கிடையாது. கிராமவாசிகளின் பெருந்தன்மையையே நடிகர்கள் நம்பியிருக்கவேண்டும். இவற்றால், நம் பழைய நாடகங்களின் ஏற்பாடுகள் எல்லாம் எவ்வளவு தூரம் நாகரிகவளமின்றி இருந்திருக் கின்றன என்பதை ஒருவாறு நிதானித்துக்கொள்ளலாம். ஆனால் இன்னொரு அம்சத்தையும் இங்கே தெரிவிக்க வேண்டும். அதாவது இந்தத் தெருக்கூத்துக்களில் கூட, சில நடிகர்கள் தங்களுடைய நடிப்பின் தனிச் சிறப்பை நிரூபித்திருக்கின்றனர். கட்டுப்பாடாக இருந்து முன் ஏற்பாடு செய்யும் சக்தி அவர்களுக்குக் கிடையாது. தற்கால நாடகங்களின் முறைகளைப்பற்றியும் அவர்களுக்

குத் தெரியாது. அதனால், இம்மாதிரி தெருக்கூத்துக்க ளெல்லாம் மிக விரைவில் ஜனங்களின் ஆதரவை இழந்து பழிப்புக்கு ஆளாகிவிட்டன.

பிறகு தெருக்கூத்துக்களுக்குப் பதிலாக வேறு நாடகக் கொட்டகைகள் தோன்றின. நாடகத்தைத் தொழிலாக நடத்தும் கம்பெனிகளும், அமெச்சூர் நாடகக் கோஷ்டிகளும் ஆரம்பமாயின. ஸ்ரீமான்கள் முனிஸ்வாமி நாயுடு, கல்யாணராமய்யர், சுந்தரராவ், ஸி கன்னையா, மிஸ் பாலாமணி முதலியவர்கள், புதியமுறை நாடகத் தொழிலுக்குச் சிறந்த வழிகாட்டிகளாக இருந்தனர். 50 வருஷங்களுக்கு முன்னால் சென்னைக்குப் பார்ஸி நாடகக் கம்பெனியொன்று வந்திருந்தது. மேலே சொன்ன பிரமுகர்களுக்கு, பார்ஸி நாடகத்தைப் பார்த்தவுடன் சில புதிய எண்ணங்கள் உதித்தன. பின்னரே அவர்கள் நாடக மேடைமீது முதல் தடவையாக ஒரு நாடகத்தை நடித்தனர். ஸீன், உடை இவையெல்லாம் அபிவிருத்தி யடையாமல் பழைய மாதிரியிலேயே தானிருந்தன. ஆயினும் சிலவிதிகளை அனுஷ்டிப்பதென்பது அபிவிருத்தி யடைந்தது. நாடகங்களில் திட்டமாக ஒரு குறிப்பிட்ட கட்டம் அமைந்திருக்கும்; குறிப்பிட்ட ஒரு கால வரைக் குள் நாடகம் முடிவடையும்; எனினும் அவை 5, 6 மணி நேரம் வரை நடக்கும். இவ்விஷயத்தில் பலவித சங்க டங்களை அவர்கள் சமாளிக்க வேண்டியிருந்தது. இவை யெல்லாம் எப்படி யிருந்த போதிலும், மேலே குறிப்பிட்ட வர்கள் நாடகத்தை ஜனங்களிடையே உண்மையாக மறுபடியும் பிராபல்ய மடையும்படி செய்தார்கள் எனபதில் ஆட்சேபமில்லை. எனவே, நாம் அவர்களுக்கு இவ்விஷயத்தில் நன்றி செலுத்தக் கடமைப்பட் டுள்ளோம்.

இன்னும் சிறிது காலத்துக்குப் பின்னர், நாடகச் சீர் திருத்தத்துக்காக ஓர் இயக்கம் தோன்றியது. அப்போது, பெல்லாரி ஸ்ரீமான் கிருஷ்ணமாச்சார்லு முதலில்

பெல்லாரி ஸரஸ விநோதினி சபை'யை ஸ்தாபித்தார். அவரைப் பின்பற்றிச் சென்னையில், சுகுண விலாஸ சபையை ஸ்ரீமான் ப. சம்பந்த முதலியார் ஆரம்பித்தார். இதன் பின்னர் தான் சீர்திருத்த இயக்கம் முழு உருக் கொண்டது. இவர்கள் பூர்ணமாகச் சம்பாஷணையை அமைத்து இலக்கிய நடையில் நாடகங்களை எழுதினர். காட்சி வாரியாக நாடகததைப் பிரித்தனர். 3 அல்லது 4 மணி நேரத்துக்குள் நாடகம் முடியும்படியும் செய்து வைத்தனர். இன்னும் இவர்கள் தாங்களே நடித்துக் காட்டினார்கள். தங்களுடைய நண்பர்களையும் நடிக்கச் செய்தார்கள். பின்னர் தான் நாடக மேடைக்கிருந்த அபக்கியாதி மாறி புகழ் ஏற்பட ஆரம்பித்தது. இந்த நாடகங்களுக்கு, கண்ணியமுள்ள ஸ்திரீகளும் வந்து பார்ப்பதென்பது அப்போதுதான் ஆரம்பமாயிற்று. அதன் பிறகு கலை உணர்ச்சியும், நாகரிகமும் கொண்டவர்களுடைய கவனத்தை, இந்நாடகங்கள் கவர்ந்தன. காட்சித் திரைகள், உடைகள் இவற்றை நிர்ணயிக்கும் முறைபற்றியும் தீவிர முயற்சி செய்யப்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக இம்முறை எங்கும் பரவியது. பல அமெச்சூர் தியேட்டர்கள் தோன்றின; கல்லூரிகள் பள்ளிக்கூடங்கள் இவற்றிலெல்லாம் நாடகங்கள் நடத்த ஏற்பாடாயிற்று. இந்நாடகங்களிலும் சிறந்த நடிகர்களிருப்பர்.

அமெச்சூர் சபைகளினால் நாடகத்தைத் தொழிலாகக் கொண்ட கம்பெனிகள் பாதிக்கப்படவில்லை. உதாரணமாக, ஸ்ரீமான் ஸி கன்னையா, நாடகத் துறையில் பல வகைகளில் முன்னேறி வழி காட்டியவர். அவர் அமெச்சூர் நாடகங்களிலிருந்து பல அரிய அம்சங்களை ஏற்றுக்கொண்டு அவற்றில் சிலவற்றை அபிவிருத்தியும் செய்தார். நாடகத் துறையில் வேறு யாருமே சாதிக்காத காரியத்தையும் அவர் சாதித்தார். "தசாவதாரம்" நாடகத்தை அவர் ஆயிரக் கணக்கான தடவை நடத்தியிருக்கிறார் என நான் நினைக்கிறேன். ஸீன் ஜோடனை

களே இந் நாடகத்திற்குப் பெருவெற்றி அளித்தன என்பது வாஸ்தவம். ஆயினும், அதற்காகக் கதை அமைப்பிலோ அல்லது கானத்திலோ இதில் குறையும் இல்லே. தென்னிந்திய நாடகமேடையை வருமான முள்ளதாகச் செய்வது எப்படி என்பதை அவர் நிரூபித்துக்காட்டி விட்டார்.

இவ்விஷயத்தில் முதன்மை ஸ்தானம் இவருக்கே உரியது. இனி, அமெச்சூர் நடிகர்களிடமும், நடிப்பையே தொழிலாகக் கொண்டவர்களிடமும் உள்ள சில குறைபாடுகளேயும் நான் கூறுகிறேன்.

தென்னிந்திய நாடகங்களுக்கு வழி காட்டியாக யிருந்த பிரமுகர்களே முன்னர் தெரிவித்தேன். அவர்களில் அநேகர் காலமாகிவிட்டனர்; அல்லது நாடகமேடையிலிருந்து விலகிக்கொண்டுவிட்டார்கள். தாழ்ந்தவகையான ஸினிமாக்களாலும், பார்ஸி நாடக தியேட்டரின் படையெடுப்பினுலும் அவர்கள் தொழில் வெகுவாகப் பாதிக்கப்பட்டது. ரஸிகர்களின் ருசி மட்டமாகிவிட்டதும் அதற்குக் காரணம்.

ஆகவே இன்று வெற்றிகரமான நாடகமென்ருல் அது நிலேபெற்றிருப்பதற்கு நன்கு பாடக்கூடிய இரண்டொருவர் அவசியம் இருக்கவேண்டியிருக்கிறது. சில யுவதிகளும் இருக்கவேண்டும். விசித்திரமான உடையும், பொருத்தமில்லாத திரைகளும் தேவை. அவ்வப்போது சம்பந்தா சம்பந்தமின்றித் தோன்றும் ஹாஸ்யக்காரன் (பபூன்) ஒருவன் பொருத்தமிருந்தாலும் இல்லாவிட்டாலும் அடிக்கடி பல பாட்டுக்கள் ரஸிகர்கள் மனதில் எவ்விதத் தொடர்பான அபிப்ராயமும் படாதபடி சாமான்யக் கதை அமைப்பு இவற்றுடன் நாடகம் நடிக்க வேண்டிவருகிறது. திரைக்குப் பின்னுலிருந்து பின்பாட்டு வேறு; அளவுக்கதிகமாக நாடகத்தின் நீளம். இவைகளேனத்தையும் நாடக வெற்றிக்காக நம்பி யிருக்கவேண்டியிருக்கிறது. குணத்திலுள்ள குறைகளேச் சமாளிக்க

மேற்படி விஷயங்களின் அளவைக்கொண்டு ஈடு கொடுக்க வேண்டியிருக்கிறது.

மேலும இதுபோன்ற தியேட்டர்களில் இடவசதி சகிக்க முடிவதில்லை. பொறுமை யுள்ளவர்கள்தான் இதைச் சமாளித்துக்கொள்வது சாத்தியம் இரண்டொரு பாடகர்களையோ அல்லது நடிகர்களையோ தவிர மற்றவர்களெல்லாம் நடிக்கவே தெரியாதவர்கள். இந்நிலையில் உயர்தர நடிப்பைப் பற்றியே பேசுவதற்கில்லை. சாதாரண நடிகருக்கு நல்ல உடுப்பு இராது. ஏதோ நாமும் ஒரு வேஷம் என்று அவர் தம்மை நினைத்துக்கொண்டு விடுகிறார், குறிப்பிட்டு சிலாகிக்கும்படி சம்பாஷணையும் கிடையாது. நாடகம் முழுதும் ஒரே பாட்டு மயம்! அதில் பேச்சு இரண்டொரு வரிகள் இடையே இருக்கும்; அதுவும் தாழ்வான நடையில். விடாது பாடும் பாட்டின் அலுப்பை நிவர்த்தித்துக்கொள்ளவே அவ்வரிகள்!

இந்த நிலைமை மாறி வேறுவித மாகும் என்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஏனெனில் இதுபோலவுள்ள நாடகத் தியேட்டர்களின் சொந்தக்காரர்களது நோக்கம் பணம் சம்பாதிப்பதுதான். நாடகத்தின் முக்கிய அம்சங்களான போதனையும் உணர்ச்சி யூட்டலும் இன்றி பாட்டுக்களைக் கொண்டே பணம் தேடுவது சுலபமாயிருக்கிறது. முடிவுள்ள இந்த நாடகங்களின் கதைகளெல்லாம் பழையவை; தற்காலத்துக் கேற்ப மெருகிட்டு மட்டமான முறையில் மாற்றி அமைக்கப்பட்டவை. இவற்றால் பாஷைக்கோ, இலக்கியத்துக்கோ அபிவிருத்தி இராது. ரஸிகர்கள் மனத்திலும் அவை நிலைகொள்ளாது.

இதிலும் சில விலக்குகள் இருக்கின்றன; அவ்விலக்குகள் பற்றிக்கூட நான் ஒரு குறையைத் தெரிவிக்கவேண்டும். நான் மதத்தில் நம்பிக்கைகொண்டவன். தெய்வ பக்தியில்லாமல் வாழ்வதில் பயனில்லை என்பது என் நம்பிக்கை. ஆனால் மதம், தேவதைகள் இவைகளையெல்லாம் மனித உருவாக்கி நாடகமேடைமீது ஏற்றி ஹாஸ்

யங்களுக்கெல்லாம் அவர்களை உபயோகித்துக்கொள்வது மத சம்மதமல்ல என்று நான் கருதுகிறேன். இந்தமுறை வெறுக்கத்தக்கதாகும்.

நம் நாட்டு நாடக மேடைமீது, ஸ்ரீராமன், ஸ்ரீ கிருஷ்ணன் போலவெல்லாம் வேஷம் புனைந்து நடித்துக் காட்டுகின்றனர். கிருஸ்துவ நாடுகளிலோ அல்லது முஸ்லிம் நாடுகளிலோ கிருஸ்துவையாவது அல்லது நபி நாயகத்தையாவது அங்ஙனம் நாடகமேடைமீது சித்திரிப்பது கிடையாது. நமது நம்பிக்கை, சம்பிரதாயம் இவற்றை அனுசரித்து ஸ்ரீராமன் போலவும், ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மாவைப்போலவும் நடிப்பதற்கு இடமிருக்கிறதென்பதை நான் அறிவேன். ஆனால் நாடக வெற்றியை முன்னிட்டு மத உணர்ச்சியைப் பயன்படுத்திக்கொள்வது கலை அம்சத்துக்கு அழகன்று. அது மதமும் ஆகாது. புராதனக் கதைகள் எவ்வளவு தூரம் இந்த முறையில் சிக்கவைக்கப்பட்டுப் பயன்படுத்திக் கொள்ளப்படுகின்றன என்பதற்கு நமது பேரிலக்கியமான சிலப்பதிகாரத்திலிருந்து எடுக்கப்பட்டிருக்கும் கோவலன் கதை சிறந்ததொரு ருசுவாகும்.

அமெச்சூர் தியேட்டர்கள் நல்ல முறையில் ஆரம்பமாயின. நல்ல லட்சியங்களைக் கொண்டும் அவை விளங்கின. ஆனால் அவையும் பண ஆசைக்கு இடம் கொடுத்துவிட்டன. எனவே முதலில்கொண்ட உயர்ந்த லட்சியத்திலிருந்து அவை நழுவிவிட்டன. இப்போது பல அமெச்சூர் தியேட்டர்கள் தோன்றி நேர்மையற்ற முறையில் போட்டியிடவும் தலைப்பட்டுவிட்டன. இதனால் நாடகங்களின் தரம் குறைந்துவிட்டது. ஆயினும் அமெச்சூர் சபைகளினால் ஏற்பட்ட பலன்களையும், அவற்றின் சேவையையும் நான் குறிப்பிடத்தான் வேண்டும். அவை சிலவே ஆயினும் மதிப்பிற்குரிய விஷயம்தான். மாலை நேரத்தில் நாடகங்களை நடத்துவதினால் மனிதனுக்குத் தேக சிரமம் குறைகிறது. 4 மணிக்குமேல் நீடிக்காமல் நாடகத்தின் நேரம் கட்டுப்பாடும் செய்யப்படுகிறது. இன்று மிகச் சிறந்த

அமெச்சூர் சபைகளில்கூட சிறந்த உடைகளும், திரைகளும் இருப்பதாகச் சொல்ல முடியாது. ஆனால் கூடுமான வரையில் சரியான உடையும், திரைகளும் நாடகத்தில் இடம்பெறும்படி செய்ய முயற்சி செய்யப்படுகிறது. நன்கு ஒத்திகை பார்த்த சம்பாஷணை, கருத்துக்களை ஒன்றன்பின் ஒன்றாகக் கோத்து அமைக்கும 'முறை, சம்பாஷணையை நல்ல அழகான பாஷையில் அமைத்தல் முதலியவை நாடகத்தின் அம்சங்களாகி யிருக்கின்றன. நாடக வெற்றியை முன்னிட்டு, சகல நடிகர்கள் விஷயத்திலும் கவனம் செலுத்தப்படுகிறது.

ராவ்பகதூர் சம்பந்த முதலியார், ஸ்ரீமான் கிருஷ்ணஸ்வாமி ஐயர் ஆகியவர்கள் தமிழ்ப் பிரிவில் சில சொந்த நாடகங்களை அமைத்திருக்கின்றனர். அதே போலத் தெலுங்கிலும் மகாகவி கள்ளக்குரி ஸ்ரீ நாராயணராவ், ஸ்ரீ கே. வீரேசலிங்கம் பந்துலு முதலியவர்கள் நாடகங்களை வரைந்திருக்கின்றனர்.

அமெச்சூர் நாடகங்களில் சங்கீதத்துக்கும் உரிய ஸ்தானம் கொடுக்கப்பட்டுளது. திரைக்குப் பின்னிருந்து பாடும் குரூரமான முறைக்கு முற்றுப்புள்ளி வைக்கப்பட்டிருக்கிறது. முக்கியமாகக் காதல் கட்டங்களில் மட்டமாக நடிப்பது போய் கண்ணியமாக நடிப்பதென்பது ஆரம்பமாயிற்று. 'பபூன்' யதேச்சையாக நடிக்கலாம் என்பது போய் சமஸ்கிருத நாடகங்களில் இருப்பதைப் போல பின்னணியில் அவர்கள் இருக்கும் நிலை ஏற்பட்டது.

இவையெல்லாம் இருக்கின்றன; அபிவிருத்திகள் ஏற்பட்டிருக்கின்றன. இருப்பினும் தென்னிந்திய நாடக மேடைக்கு இன்னும் அநேகம் சங்கடங்களிருக்கின்றன. அமெச்சூர் தியேட்டர்களுக்கு எதிர்காலம் மிகப் பிரமாதமாக இருக்கப் போகிறது என்று எண்ணுகிறவர்களில் நானும் ஒருவன். நடிப்புக்கலை மிகவும் சிரமமான விஷயம். பிரபல நடிகராக வேண்டுமென்று யாராவது

விரும்பினால் தமது காலம், சக்தி, திறமை முதலிய அனைத்தையும் அக்கலைத் தேர்ச்சிக்காகச் செலவிடவேண்டும். நல்ல அமெச்சூர் தியேட்டர்கள் இருக்கலாம்; எப்போதும் அது நிலையாயும் இருக்கக்கூடும். ஆனால் கலை உணர்ச்சியுள்ள நாட்டினரின் விருப்பங்களை யெல்லாம் அவை பூர்த்தி செய்ய முடியாது. மேலும் அவைகளில் ஸ்திரீகளின் பாத்திரத்தை ஆடவர்கள் ஏற்றுக்கொண்டு நடிக்க வேண்டியிருக்கிறது. புருஷர்களைவிட ஸ்திரீகள்தான் தங்கள் பாகத்தை நன்கு நடிக்க முடியுமென்பதுபற்றி நான் திட்டமாகச் சொல்ல முடியவில்லை. இருப்பினும் ஸ்திரீகள் அவர்களது அமைப்பு, இயற்கையில் உள்ள வனப்பு, உரு ஆகியவைகளைக் கவனிக்கையில் புருஷர்கள் ஸ்திரீவேடம் புனைவதைவிட ஸ்திரீகளே அவர்கள் பாத்திரத்தை ஏற்பது பொருத்தமாயிருக்கும். இது எப்படியிருப்பினும், நாகரிகம் படைத்த எந்த நாட்டினரும் மீசையுடன் விளங்கும் ஆடவர்கள் நாடகமேடைமீது ஸ்திரீகளின் வேஷத்தில் தோன்றுவதைச் சகித்துக்கொண்டிருப்பதற்கில்லை.

தற்கால சமூக வாழ்வு, அரசியல் இவற்றிலிருந்து ஒரு குறிப்பான லட்சியத்தை நாடகக் கதையின் அமைப்பாகக் கொண்டவை பொதுவாகத் தென்னிந்திய நாடகங்களில் இல்லை, இதிலும் சில விலக்குகள் இருக்கின்றன. ஹென்றி இர்விங் அல்லது பர்னுடுஷா போன்றவர்கள் நம்மிடையே இருந்தால் நாம் அநேகம் உணர்ச்சி மிகுந்த கதைகளைச் சிருஷ்டித்திருக்க முடியும். நடிகர்களெல்லாம் பழுப்பு வர்ணத்திலும், வெள்ளை நிறத்திலும் நாடக மேடை மீது பதுமைகளைப்போல் தோற்றுவிக்கப்படுகின்றனர். இது ஏன் என்று தெரியவில்லை. கடவுளுக்குத்தான் பிரீதி! நாம் கறுப்பாக இருக்கிறோம் அல்லது மாநிறம்; இல்லையாயின் சற்று சிவப்பு. இந்த நிலைமையில் வெள்ளையர்களைப் போலச் செய்து ஏன் நமது தேசத்தாரின் நிறத்துக்கு நாடக மேடையில் அவமானம் ஏற்

படச் செய்யவேண்டும்? திரை ஏற்பாடுகளும் அபரிமிதமான அளவில் இருக்கின்றன. இவை எளிய முறையிலோ அல்லது சரியானபடியோ இல்லை.

அநேகமாக நாடகங்களில் கதை அமைப்பு, நடிகரின் நடிப்பு இவற்றைவிட சங்கீதமே மேலோங்கி இருக்கிறது. நாடகத்தை வேறாகவும், சங்கீத நாடகத்தை (Operas) வேறாகவும் தனித்தனியாகப் பாகுபாடு செய்யாமலிருக்கிறோம். இவையெல்லாவற்றையும் விடத் தென்னிந்திய நாடக மேடைக்குப் போதிய பணவுதவியில்லாதது பெருங் குறை. நவீன சாதனங்களுடன, தற்கால முறைக்கனுசரணையாக ஒரு தியேட்டரை நிர்மாணிக்க வேண்டும். அதில் திறமையும், செல்வாக்கும் படைத்த நடிகர்கள் இருக்கவேண்டும். நவீன முறையில் கவர்ச்சி மிகுந்த நாடகங்களை எழுதும் சக்தியுள்ள நாடக ஆசிரியர்கள் வேண்டும். இந்தப் பெரிய தேசீய வேலையைச் செய்யச் சில லட்ச ரூபாய் ஒதுக்கி வைக்கவேண்டும். அதற்கு இன்னும் யாரும் முன்வரக் காணோம்.

தென்னிந்திய நாடகமேடை சம்பந்தப்பட்டவரையில் வெகு துரிதமாக ஒரு கேடு வளர்ந்து வருகின்றது. இதை நான் குறிப்பிடுவது மிகவும் அவசியம். இதை உடனே, போதுமானபடி கவனித்துத் தடுக்காமற்போனால் கூடிய விரைவில் தென்னிந்திய நாடகத்துறையில் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்ற நோக்கமே தடைப்பட்டுப் போகும்.

சிறுவர்களை நடிகர்களாகக் கொண்ட நாடகக் கம்பெனிகளையே நான் குறிப்பிடுகிறேன். 12-வயது முதல் 15, 16 வயதுக்குட்பட்ட சிறுவர்களை யெல்லாம் பெரிய வயது வந்த புருஷர்களைப் போலவோ, ஸ்திரீகளைப் போலவோ வேஷம் போட்டுக்கொண்டு நடிக்கச் சொல்லுகின்றனர் இதன் பலன் என்ன தெரியுமா? சிறுவர்கள் பக்குவம் வருமுன்னர் நடிக்கவேண்டி வருகிறது. அவர்களுக்கு என்ன செய்கிறோம், பேசுகிறோம் என்று அர்த்

தம்கூடத் தெரிவதில்லை. நாடக மேடைமீது ஏதோ யந்திரம் போல நடிக்கின்றனர். இவர்களில் சிலர் முன்னெச்சரிக்கையாயிருந்து நடிக்கின்றனர் என்பது வாஸ்தவம்தான். ஆனால் மொத்தத்தில் பார்த்தால் நடிப்பு இயற்கைக்கு மாருகவே இருக்கிறது. தத்ரூபமாக இல்லை. இது ரஸிகர்களுடைய ருசியின் தரத்தைக் குறைத்துவிடுகிறது. எனவே நாடகத்தின் தரமும் சீர்கெட்டுவிடுகிறது.

இதில் மனித வர்க்கத்துக்கே தகாத அம்சமொன்றும் இருக்கிறது, இதைப் போலீஸாரோ, மாஜிஸ்ட்ரேட்டுகளோ கவனிக்காமலிருப்பதற்காக நான் வருந்துகிறேன், சென்னை சமூகச் சீர்திருத்த வாதிகளும் இந்த அம்சத்தைக் கவனிக்கவில்லை. சிறுவர்கள் பள்ளிக்கூடத்தில் படிக்க வேண்டிய பருவத்திலும், மூளையையும், உடலையையும் அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டிய காலத்திலும் நன்கு தூங்கவேண்டிய காலத்திலும் அவர்களுக்கு அவ்வசதிகள் இல்லாமல் தடுத்து, பணம் சம்பாதிப்பதற்காக அவர்களைப் பயன்படுத்திக் கொள்வது உண்மையில் கொடுமையான செயல். அநேகமாக அச்சிறுவர்களுக்குக் கொடுக்கும் பணமோ வெகு சொற்பம். அவர்கள் பக்குவ வயதடைவதற்கு முன்பாக அவர்களது எஞ்சிய வாழ்க்கையும் பல வகையில் பாழாகிவிடுகிறது.

இது ஒருபுறமிருக்க நாடகத்தைத் தொழிலாகக் கொண்ட கம்பெனிகள் இன்று இந்த இளம் குழந்தைகளுக்குப் பலவிதமான சபலங்களை வேறு உண்டாக்கிவிடுகினறன. தேகவலுவோடு அச்சிறுவர்கள் இருப்பினும் ஒழுக்கத்தில் சீரழிந்துவிடுகின்றனர். இந்தக் கொடுமையைத் தடுக்க, 18-வயதுக்குட்பட்டவர்களை நாடகங்களில் நடிக்கச் செய்யக்கூடாதென்று ஒரு தடைச் சட்டம் இயற்றவேண்டும். இதைத் தவிர, இதற்கு வேறு வழி இல்லை. ஜீவகாருண்யத்தை யொட்டிய இந்நோக்கத்தை நிறைவேற்றச் சட்டம் இயற்றுவது அவசியமென்று யோசனை கூறுகிறேன்.

தென்னிந்திய நாடகங்களின் எதிர்காலம் பற்றியே நான் இதில் பிரஸ்தாபிக்க வேண்டும். வயது வந்த பெரியவர்கள் நடிக்கவேண்டிய பாகத்தைச் சிறுவர்கள் நடிக்கும் வரையில் தென்னிந்திய நாடகம் நேர்மையாக விருக்குமென்று நினைக்க இடமில்லை. பொதுமக்கள் எல்லோருமாக ஒருமித்து நின்று, நாடகமேடையில் நகைப்புக்கு இடம் தரும்படி நடக்கும் இதுபோன்ற முறையை எதிர்க்க வேண்டும். ஆதரவளிக்கவும் கூடாது.

இன்னொரு கெடுதி. கட்டுப்பாடான நல்ல நாடகக் கம்பெனிகள் இல்லாதிருக்கையில், வேலையில்லாது இருக்கும் இரண்டு மூன்று நடிகர்களோ அல்லது நடிகைகளோ ஒன்றுகூடி நாடகம் நடத்தப்போவதாக விளம்பரப் படுத்துகின்றனர். நாடகத் தேதியன்று மேடைமீதுதான் அவர்கள் சந்திப்பார்கள். இதனுடைய பலன் என்னவென்பதை விளக்காமலேயே தெரிந்துகொள்ளலாம். இந்த நாடகத்தில் சம்பாஷணையில் தொடர்ச்சியோ ஒற்றுமையோ இராது. அவர்கள் ஹாஸ்யத்தைக் கொண்டோ, பாட்டைக் கொண்டோ ரஸிகர்களின் பொழுதைப் போக்கிவிடுவார்கள். நாடகக் கலையை நிரூபணம் செய்ய எவ்விதமான முயற்சியும் அங்கு இருப்பதில்லை. இவ்வாறு, பயிற்சியோ ஒத்திகையோ இல்லாமல் நினைத்த மாத்திரத்தில் நாடகம் நடத்தும் முறையும் பெருகிவருகிறது.

நாடகத்தைத் தொழிலாகக் கொண்டு நடத்தும் கம்பெனிகளிலே பாட்டுக்களுக்கு அளிக்கப்படும் முக்கியத்துவம்பற்றி ஏற்கனவேயே குறிப்பிட்டிருக்கிறேன். இன்னொரு குறைபாட்டையும் இப்போது இதில் சேர்த்துத் தெரிவிக்கிறேன். இந்த நாடகங்களில் பாட்டுக்கள் அதிகமாக இருப்பதோடன்றி சாஹித்தியத்தில் சொற்களின் அமைப்பு பொருத்தமாயிருப்பதில்லை. வர்ணமெட்டும் பலவிடங்களில் பொருத்தமின்றி இருக்கின்றது. ஒரு நடிகர் மனக்கஷ்டப் படும்போதோ அல்லது சரீரத்தில் ஹிம்ஸை ஏற்பட்டு வருந்தும்போதோ சந்தோஷத்தைத் தெரிவிக்

கும்படியான ஒரு பாட்டுப் பாடுவார்! அல்லது சந்தர்ப் பத்துக்குச் சற்றும் பொருந்தாத அர்த்தம்கொண்ட ஏதோ ஒரு பாட்டைப் பாடுவர்! இந்திய சங்கீதத்தில் சில சில ராகங்கள் சில சில வகையான உணர்ச்சிகளை உண் டாக்கும என்ற முறையுண்டல்லவா? இந்த விதியைப் பெரும்பாலும் இவர்கள் பின்பற்றி நடப்பதில்லை. இதன் பலன் விகாரமாக இருக்கிறது.

தென்னிந்திய நாடகங்களைப்பற்றி நான் தெரிவித் திருக்கும் குணதோஷங்களிலிருந்து நான் எதிர்காலத்தில் நம்பிக்கை கொள்ளாதவன் என்பதில்லை. தென்னிந்திய நாடக மேடைகள் நன்னிலை அடையலாமென்ற நம்பிக்கை எனக்குண்டு. தமிழிலும், தெலுங்கிலும் அதற்கு நல்ல பெயர் வரும் என்ற நமபிக்கையும் கொண்டவன் நான். ஆனால் முதன் முதலாகச் செய்ய வேண்டிய சீர்திருத்தம் என்னவெனில் உண்மையான நாடகங்களை எழுதும்படி செய்வதில் முயற்சிவேண்டும். இதிஹாசங்களிலும் புராணங்களிலும் யதேஷ்டமாக விஷயங்களிருக்கின்றன. புராதன காலம், இடைக்காலம் ஆகிய சமயங்களில் நம் நாட்டு மன்னர்கள் பலர் இருந்திருக்கின்றனர். சரித்திர பூர்வமாகவும், சிருங்கார ரஸமுள்ளதாகவும் ருசி மிகுந்த நாடங்களை எழுதக்கூடியவர்கள் முயற்சி செய்யலாம். குடி, மதுவிலக்கு, தீண்டாமை விலக்கு, விவாக சீர்திருத் தம் முதலிய தற்கால வாழ்க்கையிலுள்ள சமூகப பிரச்னை களைப் பற்றிய நாடகங்களையும் எழுதலாம். இவை பொது ஜனங்களின் கவனத்தைக் கவர்ந்து அவர்களது அறிவைப் பெருக்கப் பயன்படும். கடைசியாக நடைமுதல் அரசியல் பிரச்னைகள் இருக்கின்றன. இதில விவாதத்திற்கு இடம் தரக்கூடிய அம்சங்கள் நீங்கலாக, பொதுவாக மனித வர்க் கத்துக்குகந்த அம்சங்களைப்பற்றி தேசாபிமான உணர்ச்சி யுடன்கூடிய நாடகங்களை எழுதலாம். அயர்லாந்து எழுத் தாளர்கள் இதைப்போல எழுதியிருக்கின்றனர். உண்மை நாடக இலக்கியத்துக்கு இது விசேஷ சேவை செய்ததாக

வும் இருக்கும். சீரான ஸத்பிரஜையாக வாழ்வது, பொது வாழ்க்கை, சீலம் இவற்றைப்பற்றி யெல்லாம் நேரடியாகவே உயர்ந்த கருத்துக்களைத் தெரிவிக்கக்கூடிய நாடகங்களுக்கும் இன்றைய இந்தியாவில் இடமுண்டு என்று நான் யோசனை சொல்லுவேன். நாடக நுட்பம் தெரிந்த மேதாவிகள மேற்சொல்லிய முறைகளில் அவற்றை எழுதினால் மிகச் சிறந்த அபிவிருத்திக்கிடமாக இருக்கும்.

இத்தகைய நாடகங்கள் தயாரிப்பதற்கு எப்படி ஆக்கமளிப்பது என்ற பிரச்னை எழுகிறது. சர்க்காரும் இதில் தங்கள் கடமையைச் செய்ய வேண்டுமென்று யோசனை கூறுகிறேன். நாடகக்கலை வளர்ச்சிக்கு ஆக்க மளிப்பது நாகரிகமும், முற்போக்கும் வாய்ந்த சர்க்காரின் கடமைகளில் ஒன்று. ஸ்தலஸ்தாபனங்கள், சர்வகலா சாலைகள், முதலியனவும் நியாயமான சகல வழிகளிலும் சாத்தியப்பட்ட வரை இது போன்ற நாடகங்களுக்கு ஆதரவு கொடுக்க வேண்டும் என்பது என் யோசனை, மன்னர்கள், ஜமீன்தார்கள் முதலியவர்கள் தங்களுடைய பூர்வீக சம்பிரதாயத்தை மறக்காமல் நாடகங்கள் எழுது வதற்கு ஆதரவு அளிக்கும்படி கேட்டுக்கொள்கிறேன்.

இத்தகைய நாடகங்கள் பொது ஜனங்களுக்கு ரஸிக்குமா? வருமானம் கிடைக்குமா? என்று கேட்க லாம். நிச்சயமாக ரஸிக்கும்; பணமும் கிடைக்கும் என்று நான் சொல்லுகிறேன். என் நாட்டு மக்களுடைய ருசி எத்தகையது என்பது எனக்குத் தெரியும். இந்நாட கங்களைக் கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் ரஸிக்க ஆரம்பிப்பார்கள். பின்னர் அது பெரிதாக விரிவடையும்.

அடுத்தபடியாக, உடனே கவனித்துச் செய்ய வேண் டிய சீர்திருத்தம் ஒன்று; நாடகத்தைத் தொழிலாகக் கொண்டவர்கள் இதைச் செய்யாவிட்டால் அமெச்சூர் தியேட்டர்காரர்கள் உடனே செய்ய முற்பட வேண்டும்.

தனி நாடகத்தையும் பாட்டுக்களைக் கொண்டே நடக்கும் நாடகத்தையும் வெவ்வேருகப் பிரிக்கவேண்டும்.

உதாரணமாகத் தமிழில் "நந்தனர்", "வள்ளி" இரண்டையும் பாட்டுக்களால் ஆனதாகவே (Operas) செய்யலாம் என்பது என் யோசனை. தெலுங்கில் "ஹரிச்சந்திரா" "போலி டாக்டர்'' (Mock Doctor) இவற்றை அங்ஙனம் செய்யட்டும். இதர நாடகங்களை சங்கீதமே இல்லாமல் வைத்துக்கொள்ளலாம். இவ்வாறு கூறுவதற்குக் காரணம் சங்கீதத்திலுள்ள வெறுப்பன்று; அதனிடமுள்ள ஆசையும் அன்புமே. எவ்வளவு சிறந்த பாடகராக விருந்தபோதிலும் தங்கள் சம்பாஷணையின்போது பாடுவது வாழ்க்கை அனுபவத்தில் கிடையாது நாடகங்களில் மட்டும் இது அனுஷ்டானத்திலிருக்கின்றது. எனவே இது பொருத்தமில்லாதது ஆனல், பொதுவாக ஜனங்களுக்குச் சங்கீதத்தில் அபிமானம் இருக்கிறது. சங்கீதமும் நாடகமும் சேர்ந்தாற்போல் இருக்கவேண்டுமென்று அவர்களுக்குத் தோன்றுகிறது. ஆதலால் சில நாடகங்களை ஆரம்பமுதல் கடைசிவரையில் சங்கீதத்துடன் கூடியனவாக வைத்துக்கொள்ளலாம் என்று யோசனை சொல்கிறேன். இந்தச் சீர்திருத்தத்தால் நாடகமும் சங்கீதமும், அதனதன் ஸ்தானங்களை அடையும்படி செய்யலாம்.

மற்றொரு சீர்திருத்தத்தையும் செய்யவேண்டும். இது வெகு நாட்களுக்கு முன்னரே செய்திருக்கவேண்டும். கலை ரஸமுள்ள நடிக, நடிகைகளுக்குத் தென்னிந்திய நாடகத் தொழிலை அமைக்க, ஆலோசனைத் திறமையோடு கூடியவர்கள் முன்வரவேண்டும். இதன்மூலம் யதேஷ்டமாகப் பணம் கிடைக்க வழி இருக்கிறது. தேசாபிமானத்தோடு செய்யக்கூடிய சேவைக்கான சந்தர்ப்பமும் அதில் அடங்கியிருக்கிறது. இன்னொரு பலனும் கிட்டுகிறது. அதாவது படித்து வேலையில்லாமல் கஷ்டப்படும் சகோதர சகோதரிகளது பிரச்னையும் தீர இடமுண்டு. இன்றைய

நிலைமையில் இது சாதாரணமான அனுகூலமன்று. படித்து, கலை உணர்வுடன் கூடிய நடிக, நடிகைகளைத் தேர்ந்தெடுத்து நல்ல நாடகங்களை அமைத்து ஏற்பாடு களைச் செய்யும் பட்சத்தில் தென்னிந்திய நாடகங்களுக்குக் கண்டிப்பாக நல்ல காலம் உண்டு என்று சொல்லி விடலாம்.

நாடக மேடையில் ஸ்திரீகளே தங்கள் பாகத்தை ஏற்க வேண்டுமென்பது குறித்து ஏற்கனவே என் அபிப்ராயத்தைச் சொல்லிவிட்டேன். இடைக் காலத்தில் நிலைமை எப்படியிருப்பினும் இந்தியா இதர நாகரிக நாடுகளைப் பின்பற்றி நடக்கும்படியான காலம் வந்தே தீர வேண்டும். ஸினிமாக் கம்பெனிகளைப் போலவே நாடகங்களிலும் ஸ்திரீகளே ஸ்திரீகளின் பாகத்தை ஏற்றுக் கொள்ளவேண்டும். இதற்குத் தடையாக ஆரம்பத்தில் சில கஷ்டங்கள் இருக்கலாம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் கண்ணியமுள்ள ஸ்திரீகள் நாடகத்தில் தோன்றாத வரையில் தேசீயக் கல்வி வளர்ச்சிக்கு நாடகங்கள் சக்திவாய்ந்த சாதனமாக விருப்பதற்கில்லை. உயர்ந்த ஸ்தானத்தை அது பெறவும் முடியாது.

முக்கியமாகச் சென்னையில் முதல்தரமான ஒரு தியேட்டர் வேண்டும். நடிகர்கள், ரஸிகர்கள் இவர்களுடைய சௌகரியங்களை அனுசரிப்பதாக அது இருக்கவேண்டும். நல்ல காற்றோட்டம், நல்ல விளக்குகள் பொருந்திய நடிகர் அறை, நவீன சாதனங்கள் நிறைந்த மேடை, நடிகர்களை நன்றாய்ப் பார்க்கும்படியும், அவர்கள் பேச்சு எங்கும் கேட்கும்படியும் அமைந்து சுமார் 2000 பேர்கள் உட்கார வசதியுள்ள நாடக ஹால் இவைகளை அதில் ஏற்பாடு செய்யவேண்டும். சென்னையில் இதுபோன்ற தியேட்டர் ஏதும் இல்லை. சர்க்கார் ஏதேதோ வேறு விஷயங்களில் தீவிரமாயிருக்கின்றனர். சர்க்காரின் சிறந்த உதாரணத்தைப் பின்பற்றுகிறது கார்ப்பரேஷன்.

சென்னை நாடகாபிமானிகள் எல்லோரும் ஒன்ருகச் சேர்ந்து மேலே சொன்ன முறையில் சென்னையில் முதல் தரமான தியேட்டர் ஒன்றை நிர்மாணிக்க முயற்சி செய்ய வேண்டும். இதனுல் உடனே தென்னிந்திய நாடக மேடையின் சிறப்பு உயர்வதோடு இந்தியரல்லாத அந்நிய நாடகக் கம்பெனியாரும் சென்னைக்கு வந்து தங்கள் நாடகங்களை நடித்துக் காட்டும்படியான நிலையும் ஏற்படும். அவர்களுடைய உதாரணம் கவர்ச்சியைத் தருவதாயுமிருக்கும்.

# இந்தியக் கல்வியில்

### ரேடியோவின் பேருதவி—படக்காட்சியின் பயன்

இந்தியக் கல்விப் பிரச்னைகளில் மிக முக்கியமான தொன்றிருக்கிறது. இந்தியாவில் எழுதவோ, படிக்கவோ தெரியாதவர்கள் பெரும்பாலராயிருக்கிறார்கள். அவர்கள் எழுதுவார்களென்றோ, படிப்பார்கள் என்றோ எதிர் பார்ப்பதற்கில்லை. அவர்களுக்குச் சிறிதளவாவது கல்வி அறிவு ஏற்படும்படி செய்யவேண்டும். அது எப்படி? அதுதான் முக்கியமான பிரச்னை. இதர நாடுகளில் கல்வி அறிவு கொண்டவர்கள் தொகை அதிகமாகவே இருக்கிறது. தினப்பத்திரிகைகள், சஞ்சிகைகள், வாரப்பதிப்புகளும், சொற்ப விலையில் வாங்கக்கூடிய புத்தகங்களும் எழுத்தறிவு இயக்கத்துக்கு மிக்க உதவியாயிருந்திருக்கின்றன. நமது நாட்டில் எழுத்தறிவு மிகவும் சொற்பம். ஜனவிகிதாசாரத்திற்காக எழுதப்படிக்கத் தெரிந்தவர்கள் என்று கணக்கிடப்படுகிறவர்களின் புள்ளி விவரங்கள் அவ்வளவு சரியானவை அல்ல. எழுதவோ, படிக்கவோ தெரிந்துவிட்டால் மட்டும் ஒரு புருஷனோ அல்லது ஸ்திரியோ கல்வி அறிவு பெற்றுவிட்டதாகச் சொல்ல முடியாது. எழுதவும் படிக்கவும் ஒருவாறு சிறிது தெரிந்துகொண்டதுகூட, கொஞ்சம் கொஞ்சமாகச் சிலருக்கு மறந்து போய்விடுகிறது. ஆதலால், தங்களுடைய சுய முயற்சியாலோ அல்லது இலக்கியப் புத்தகங்கள் மூலமோ, கல்வி அறிவைச் சம்பாதித்தவர்களே கணக்கிடத் தக்கவர்கள். அவர்களின் விகிதம், புருஷர்

களில் நூற்றுக்கு ஒன்றும், ஸ்திரீகளில் ஆயிரத்துக்கு ஒன்றும் ஆகும். இந்த நிலைமையை நிவர்த்தி செய்து பாமரர்களாகவிருக்கும் இவ்வளவு பேர்களுக்கும் கல்வி புகட்டுவது எப்படி? 'வர்தா' கல்வித் திட்டப்படி சிறந்த தொரு முறையை வகுத்துக் கட்டாய ஆரம்ப பாடசாலை களைத் தொடங்கி அவைகளைத் திறமபட நடத்த ஒரு வரு ஷத்துக்குக் கோடிக கணக்கில் ரூபாய் வேண்டும இதன் படி அப்படியே தேவையான தொகை சுலபமாகக் கிடைத் தாலும, இந்தியாவைக் கல்வியறிவுள்ள நாடாக்க குறைந் தது ஒரு தலைமுறையாவது ஆகும ஆகவே இன்று முதல் இன்னும் 30 வருஷங்களுக்கு நாம் நம் மக்களுக்குக் கல்வி அறிவு புகட்டும எண்ணத்தைக் கைவிட்டு விடுவதா? அது தகுதியன்று.

எப்படியிருந்தபோதிலும் ஜனநாயகம் இந்த நாட்டில் நிலைபெறும்படி ஏற்பட்டுவிட்டது. எழுதப்படிக்கத் தெரிந்தவர்களுக்குச் சென்னை மாகாணத்தில் ஓட்டு உரிமை உண்டு. இது அமுலிலிருக்கிறது. இதர மாகா ணங்களிலும் கூடியசீக்கிரம் வந்துவிடும். மகாத்மா சாந்தி சமீபத்தில் ஓர் அறிக்கையை விடுத்தார். இப்போதைக்கு, இந்தியா எழுத்தறிவுக்காக ஓட்டு உரிமை உண்டு என்ற அளவில் திருப்திப்பட வேண்டியிருக்கிறது. ஏற்கனவே நான் சொன்னதைப் போல், கல்வி அறிவு பெற்றவர்கள் என்று சொல்லவோ, எதிர்பார்க்கவோ முடியாத பலர் இந்த ஏற்பாட்டின்படி வாக்காளர்களாக ஆவார்கள்.

இருந்தாலும் அவர்களுக்கெல்லாம் புத்தகங்களைப் படிக்கும் சக்தி கிடையாது. நிலைமை இப்படி இருக்கிறது. வாக்காளர்கள்தான் நமக்கு எஜமானர்கள். எனவே அவர்களுக்குக் கல்வி அறிவு ஏற்படும்படி செய்வது எப் படி? ஜனநாயக முறைகளில் இது மிகவும் பிரதானமான அம்சம். நல்லவர்களாக இருப்பவர்களுக்கு அவர்கள் ஓட்டுச் செய்ய முடியாமல் வகுப்புவாத உணர்ச்சியும் பூசலும் கொண்டவர்களுக்கு ஓட்டுப் போடும்படியான

அந்நிலையில் அவர்களை நாம் விட்டுவைப்பதா? இது நமது நாட்டுக்குப் பெருங்கேடாகும். ஆகவே பாமர மக்களுக்குக் கல்வி அறிவை புகட்டும் வேலையை உடனே கவனிக்க வேண்டும். அவர்களுக்கு எழுத்தறிவு ஏற்படும் வரையில் காத்திருக்கக்கூடாது

தற்கால ஆராய்ச்சிகளின் உதவியினாலும், தற்கால விஞ்ஞான வளர்ச்சியாலும் இந்தப் பிரச்னைக்கு பரிகாரம் காண்பதில் கஷ்டமில்லை நமக்கு ரேடியோ வசதி இருக்கிறது. பேசும் படங்களும் இருக்கின்றன. ரேடியோ இந்நாட்டிற்கு இன்னும் சொந்தமாகி விடவில்லை இது சர்க்காரின் கையில் உள்ள வரையில் நம் நாட்டினருக்குச் சொந்தமானதாகச் சொல்ல முடியாது ஒலி பரப்பும் இலாகா கண்ட்ரோலர் மிஸ்டர் பீல்டன், "மத்திய சர்க்கார் பிரதிநிதிகள், மாகாண சர்க்காரின் பிரதிநிதிகள், ஜனத்தலைவர்கள் ஆகியோரடங்கிய ஒரு கூட்டு ஸ்தாபனம் இந்நாட்டில் ரேடியோ மூலம் ஒலிபரப்பும் நிர்வாகத்தை ஏற்று நடத்தவேண்டு"மென்று பல தடவை சொல்லியிருக்கிறார். அப்போதுதான் ரேடியோ யதேச்சையாக நிலைபெறமுடியும்.

ஆனால் ஒரு விஷயம். இப்போது அகில இந்திய ரோடியோ நிர்வாகிகள் தங்களுடைய நிலையங்களிலிருந்து ஆங்கிலத்திலும் இந்திய பாஷைகளிலும் பேச்சுக்களை ஒலிபரப்ப ஏற்பாடு செய்திருக்கிறார்கள். இவ்விஷயத்தை இன்னும் நன்கு பரிசிலனை செய்து இந்நாட்டு மக்களுக்குக் கல்வி அறிவுண்டாக்கும் ஒரே நோக்கத்தோடு அதற்கேற்ப அமைக்க வேண்டும். ரேடியோ நிகழ்ச்சிகள் மனங் கவரும் தன்மை மிகுந்தனவாயிருப்பது அவசியம்; அத்தோடு அறிவை வளர்க்க உபயோகமாகவும் இருத்தல் வேண்டும். அந்நிகழ்ச்சிகள் ருசிகரமாகவும், ஊக்கம் தருபவையாகவும் அமையவேண்டும். ஜனங்களுக்கு ருசி தட்டும்படி நன்கு பேசக்கூடியவர்களைப் பிடிக்கவேண்டும். தற்காலிகமாக அல்லாமல், ஜனங்கள் சாச்வதமான முறை

யில் அறிவு வளர்ச்சி பெறும் வண்ணம் விஷயங்களைப் பொறுக்கி, அவைபற்றிப் பேசச் சொல்லவேண்டும். இது மிகவும் சிரமமான வேலை யென்றாலும், முக்கியமான வேலை. புருஷர்கள் கோஷ்டியிலும், ஸ்திரீகள கோஷ்டியிலும் நன்கு பேசக்கூடியவர்களைப் பொறுக்க வேண்டும். அவர்கள் சிறந்த சிந்தனை சகதி, மக்களின் மனோபாவத்தை உணரும் திறமை, அனுபவம் ஆகிய அம்சங்கள் உள்ளவர்களாக இருக்கவேண்டும. லட்சக்கணக்கான மக்களின் மனதில் பதியக்கூடிய வண்ணம் பேசுபவர்களாகவும் இருத்தல்வேண்டும்.

கிராமங்களில் ரேடியோ நிகழ்ச்சிகளை ஜனங்கள் பொதுவாகக் கூடிக் கேட்க வசதியாக ஒலிபரப்பு "ஸெட்டு"கள் அமைக்கத் திட்டம் போடவேண்டும். மேலே சொன்ன பிரசங்கங்களை அவர்கள்கேட்க ஏற்பாடு செய்யவேணடும். ஒவ்வொரு கிராமத்திலும இதுபோன்ற 'ஸெட்டு'களை அமைக்கலாம். அல்லது சில கிராமங்களை ஒன்று சேர்த்து அத்தொகுதி ஒவ்வொன்றுக்கும் ஒரு "ஸெட்டை" ஏற்படுத்தலாம். இந்த ரேடியோ நிகழ்ச்சிகளில் சங்கீதம் நாடோடிப் பாட்டுக்கள், நாடகங்கள், ஹாஸ்ய நாடகங்கள் முதலிய அம்சங்களும் இருக்க வேண்டும். இது போன்ற நிகழ்ச்சித திட்டதகை வகுக்கும்போது கிராமததாருடைய விருப்பு, வெறுப்பு முதலியவற்றிற்கு அனுகூலமான முறையில் அவ்விஷயங்களை நெருங்கித் தெரிந்துகொள்ள வேண்டும். இதற்கு மத்தியில் சில நல்ல பிரசங்கங்களுக்கு ஏற்பாடு செய்தால் எதிர்பார்க்கும் லட்சியம் சிததிபெறும். பண விஷயம் இதில் அடங்கியிருக்கிறது. பொது ஜனங்கள் ஒன்று சேர்ந்து கேட்கக்கூடிய "ஸெட்டு"களை நகரங்களில் ஏற்படுத்திவிட்டால் லட்சக்கணக்காகவுள்ள நமது கிராமங்களில் அவற்றைப் பொருத்தப் பணமிராது. நகரங்களிலே உள்ளவர்கள் ரேடியோ ஸெட்டுகளைச் சொந்தமாக வாங்கி வைத்துக்கொள்ள வசதி உண்டு. ஆனல்

கிராமங்களில் அப்படியில்லை. 50,000 பேர்களோ அல்லது அதற்கும் அதிகமாகவோ உள்ள நகரங்களில் பொது ஜனங்கள் ஒன்றாகச் சேர்ந்து கேட்கக்கூடிய "ஸெட்டு" கள் இருக்கக்கூடாது. அப்படியே வைகக வேண்டு மாயின், ரேடியோ நிலயத்துக்கு அதிகமாக லைசென்ஸ பணம் கட்டச செய்யவேண்டும. ஒன்று சோந்து கூட்டாகக் கேட்கக்கூடிய 'ஸெட்டு'களைக் கிராமஙகளுக் காக ஒதுக்கிவைத்து விடவேண்டும கிராமங்களில் பெரும்பான்மையோா ஏழைகள அவர்கள் சொந்தமாக ரேடியோ வைத்துக்கொள்ள முடியாது.

அடுத்த விஷயம் பேசும் படஙகள். இவை பிராபல்ய மடைந்திருக்கின்றன இவற்றின் உதவியையும நாம் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். பேசும் படங்கள், நீதி போதனை செய்யக் கூடியனவாகவும், அறிவு வளரச் செய்வனவாகவும் இருக்கவேண்டும். இவை தவிர, நம் முடைய ஸினிமாக் காட்சிச் சாலைகளில் எல்லாம் இந்த நாட்டின் சரித்திரம், பூகோளம் இவைபற்றிய விவரங் களைத் தெரிவிக்கக்கூடிய சிறிய படங்கள் காட்டப்பட வேண்டும். உலக சரித்திரம், பூகோளம், விஞ்ஞானத் தின் பயன், விஞ்ஞானத்தின் மூலம் இயற்கை வசப்படும் விதம், முதலியவற்றை எடுத்துக் காட்டக்கூடிய சிறிய படக்காட்சிகளைத் திரையிலிடவேண்டும். எழுத்தறிவுக் காக நமது நாட்டில் புதியதொரு "ஸர்விஸ்" ஆரம்பிக்க வேண்டும. இதரநாடுகளில் இது நடந்துவருகிறது. அங்கே எல்லாம் ஜனங்களுக்கு எழுதப் படிக்கத் தெரி யும். ஆனால் நம்நாட்டிலே புத்தகசாலைகள் செய்யவேண் டிய தொண்டை நம் சகோதர சகோதரிகள் ஏற்றுக் கொள்ள வேண்டும். அதாவது அவர்கள் நேரில் சென்று ஜனங்களுக்கு அறிவு புகட்டவேண்டும். இவ்வேலையைச் செய்பவர்கள் நன்கு படித்தவர்களாக இருக்கவேண்டும். மனதில் பதியும்படியான போதனைகள் நிறைந்ததாகவும், மக்களின் அறிவு வளரும்படியாகவும் பேசக்கூடிய சக்தி

அவர்களுக்கு இருக்கவேண்டும். இன்னும் பல வழிகள் இருக்கலாம். பல்வேறு மாகாண சர்க்கார்களும் கைக் கொள்ளவேண்டிய சில வழிகளையே நான் தெரிவித்திருக் கிறேன் நம் நாட்டில் பலவிதச் சங்கடங்கள இருக்கின் றன, அவற்றைப் பரிகரிகக நேரான மார்க்கமேதும் இல்லை. அறிவே வலிமை அறிவு விவேகத்துக்காகவுள்ள மார்க்கம். அந்த அறிவுக்கு அடிப்படை கல்வி. ஆகவே இன்னும் பல வருஷங்கள் எழுத்தறிவில்லாமல் இருக்கும் படியுள்ள நம்நாட்டு மக்களுக்குக் கல்வி அறிவு புகட்டு வது மிக முக்கியமான காரியம்.

# மகாத்மா காந்தி

இன்று இந்த யுத்தப்பித்துப் பிடித்த பைத்தியக்கார உலகில் சர்வசதாகாலமும் பகிரங்கமாக, நிச்சந்தேகமாக சமாதானத்திற்கும் சர்வஜன சகோதரத்துவத்திற்கும் பாடுபடும் ஒரு தனி மனிதர் இருக்கின்றார் என்றால் அவர்தான் மகாத்மா காந்தி. ஐரோப்பியரின் அருவருப்பில்லாவிட்டால் பலவருடங்களுக்கு முன்னரே சமாதான குணத்திற்காக மகாத்மா காந்திக்கு நோபல் பரிசு கிடைத்திருக்க வேண்டும். இந்தக் கட்டுரையில் நான் மகாத்மா காந்தியைப் பற்றி அரசியல்வாதியாகவோ, ஜனசமூகத்தின் தீர்க்கதரிசியாகவோ விசேஷமாகக் குறிப்பிடப் போவதில்லை. பொதுஜன சேவகர் என்கிற முறையிலேதான் அவரைப் பற்றி எழுதப்போகிறேன்

காங்கிரஸையும் இந்தியாவிலுள்ள கோடிக்கணக்கான மக்களையும் பின்பற்றும்படி செய்துள்ள அஹிம்சைக் கொள்கை அசக்தர்களின் ஆயுத மன்று. கோழைகளின் கவசமன்று. அசிரத்தைக்கு அணிகலனன்று. சுய மதிப்பைக் காப்பதற்குரிய சூலம். தீமையைக் கண்டு வெறுக்கும் உத்வேகம் தீமையிலிருந்து விடுதலை பெறும் மார்க்கம். ஆனால் பழிக்குப்பழி வாங்கும் கொள்கையை அடிப்படையாகக் கொண்டதன்று. அஹிம்சையை மேற்கொள்பவனுக்கும் அதனால் பாதிக்கப்பட்டவனுக்கும் அன்புப் பாசப் பிணைப்பு இல்லாவிட்டால் உலக சச்சரவுகளை அஹிம்சையைக் கொண்டே தீர்த்துவிட முடியும என்று கூறிவிட முடியாது. தந்தை—மகன், கணவன்—மனைவி, சகோதரன்—சகோதரி, இவர்களுக்குள் ஏற்படும் வித்தியாசங்களை அஹிம்சா பூர்வமான தியாகத்தினால் தீர்த்து விடலாம். குடும்ப விஷயத்தில் வெற்றிகரமாக

உபயோகிக்கத்தக்க ஆயுதத்தை அரசாள்பவர்களுக்கும், அடிமைகளுக்கும் உள்ள தகராறுகளைத் தீர்ப்பதில் வெற்றிகரமாக உபயோகித்ததுதான் மகாத்மா காந்தியின் தனிப்பெருமையாகும்.

இந்த முயற்சி ஓரளவு வெற்றி பெற்றிருக்கிறது. 1930—32-ல் நிகழ்ந்த சத்தியாக்ரஹ இயக்கம் இந்திய மக்களை மாத்திரமின்றி, இந்திய சர்க்காரையும் மாற்றிவிட்டது என்பதை யார் ஆட்சேபிக்க முடியும். இந்த முயற்சி பூராவும் வெற்றி பெற்றுவிட்டது என்று கூறிவிட முடியாது. ஆனால் சுயமதிப்புள்ள ஒரு மாபெரும் சமூகம் ஆயுதபலமின்றி மௌனமாகக் கஷ்டங்களை அனுபவிக்கும் சக்தியினால் பலம் பொருந்திய ஒரு மகத்தான அதிகார வர்க்கத்தை அந்த மறக்கமுடியாத நாட்களில் கலங்க வைத்துவிட்டது என்பது வெட்ட வெளிச்சம். இந்த அளவுக்கு அஹிம்சை இயக்கம் வெற்றி பெற்றதே. இந்திய மக்கள் மட்டும் சரியான முறையில் இந்த அஹிம்சை ஆயுதத்தை ஏற்றுப் பிரயோகிப்பார்களானால் பிறருடைய ரத்தம் ஒரு துளி சிந்தாமல் அவசியமானால் நம் உயிரைக் கொடுத்தாவது, இந்த நாட்டின் சுதந்திரத்தைப் பெற்றுவிடலாம் என்று மகாத்மா காந்தி நம்புகிறார்.

மகாத்மாவின் பூரண அனுமதி பெற்று காங்கிரஸ், பெரும்பான்மையுள்ள மாகாணங்களில் பதவியேற்றிருப்பது அஹிம்சை சோதனையை சட்டசபைகள் மூலம்நடத்த முயலுவதற்காகும். காங்கிரஸ் மந்திரிகள் மட்டும் நாணயமாக நேர்மையாக திறமையுடன் தங்கள் கடமையை நிறைவேற்றுவார்களாகில் சிறுபான்மையினரின் நம்பிக்கையை இழக்காமலிருக்க முயலுவார்களாகில் வகுப்புவாத மனப்பான்மையின்றி சுயநலமற்று உழைப்பார்களானால் ஓட்டுரிமை பெற்றுள்ள $3\frac{1}{2}$ கோடி மக்கள் காங்கிரஸ் மந்திரிகளை இடையறாது ஆதரித்து வருவார்களானால் 1935 ம் வருஷ அரசியல் அமைப்பின் நிபந்தனை

களுக்குட்பட்டு நமக்கு கிடைக்கக்கூடிய அதிகாரம் பூரா வையும் அதிகார வர்க்கத்திடமிருந்து ஜனப் பிரதிநிதிக ளுக்கு மாற்ற அஹிம்சை ஆயுதம் பேருதவியாயிருக்கும் என்பதில் சந்தேகமில்லை.

எதிர்காலம் எப்படியிருந்தாலும், சுதந்திர ஆர்வ முள்ள இநதிய மக்கள் தங்களுடைய போராட்டத்தை அஹிம்சை முறையில் நடத்த மகாத்மா காட்டிய வழி யின்மூலம் இந்தியாவுக்கு மட்டுமல்ல உலகத்திற்கே அவர் மகத்தான சேவைசெய்தவராகிறார் அந்தமான் தீவிலுள்ள அரசியல் கைதிகள் பயங்கர முறையைக் கைவிட்டதே மகாத்மாவின் அஹிம்சா முறையின் மாபெரும் வெற்றி யாகும். இக்கட்டுரை வெளியாகுமுன் அவர்கள் விடு தலைபெற்று தத்தம் மாகாணங்களுக்கு அனுப்பப்படு வார்களென நம்புகிறேன். இந்த இளைஞர்களின் மன மாற்றம் ஒன்றே மகாத்மாவுக்கு அஹிம்சையிலுள்ள அசையாத நம்பிக்கை நியாயமானது என்று உறுதிப் படுத்த போதுமானது.

கதர், குடிசைத் தொழில், புனருத்தாரணம் இவை மகாத்மா தேசத்திற்குச் செய்துள்ள கைங்கரியங்களில் அடுத்தபடியானவை. இந்தத் திட்டத்தின் அரசியல், பொருளாதார அம்சங்களைப் பற்றி நான் இங்கே குறிப் பிட விரும்பவில்லை. மனித சமூகத்திற்கு அவைகள் அளித்துள்ள நலன்களைப் பற்றியே குறிப்பிட விரும்பு கிறேன். நாம் இருக்கும் நிலையில் நம் கிராம மக்கள் சொந்த வீடுகளில் வசித்து, சொந்த நிலங்களை உழுது பயிரிட்டு ஆரோக்கியமாக வாழ்ந்து தங்கள் தேவைகளை அந்தந்த கிராமங்களிலோ அல்லது பக்கத்து கிராமங்களி லிருந்தோ பூர்த்தி செய்து கொண்டால்தான் பொருளா தாரத் துறையில் நாம் முன்னேறலாம் என்பது என் நம்பிக்கை. இம்மாதிரி வாழ்க்கையில்தான நம்முடைய சக்தியும் இருக்கிறது. துணி, இரும்பு, எஃகு சாமான் கள் சணல் சர்க்கரை மோட்டார்கள் பெரிய யந்திரங்கள்

ரயில்வே சாமான்கள் இவைகளை உற்பத்தி செய்யப் பெரிய ஆலைகள் தேவை என்பதை நான் ஒப்புக்கொள் கிறேன். மற்ற எல்லாத் தேவைகளையும் குடிசைகளில் செய்யப்படும் அழகான சாமான்களின் மூலமோ அல்லது மின்சார சக்தியினுல் இயக்கப்படும் சிறு கைத்தொழில் கள் மூலமோ பூர்த்தி செய்து கொள்ளலாம் என்பதே என் கருத்து தொழிலை இம்மாதிரி நடத்திஞல் தான் மனித சிருஷ்டிக்கு மதிப்பு ஏற்படும்.

இந்தியாவும், சைனுவும் ஆப்பிரிக்காவும் வெறும் சந்தை நாடுகளாக இருந்ததனுல் இங்கிலாந்திலும், ஐரோப்பாவிலும் யந்திரப் புரட்சி ஏற்பட்டது. இப் பொழுது எல்லாம் மாறிப்போய்விட்டது. ஒவ்வொரு தேசமும் பொருள் துறையிலும் தொழில் துறையிலும் பிறர் கையை எதிர் பார்க்காமல் வாழவே விரும்புகிறது. நம் நாட்டில் ஜனத்தொகை அதிகம் அவர்கள் தினசரி வருமானத்தை ஒரு அணு அதிகரிக்கச் செய்தாலும் கிரா மப் பொருள்களை எல்லாம் அங்கேயே செலவழிக்க வகை செய்யலாம். இந்த உண்மையை அறிந்துதான் மகாத்மா க்தர், கிராமக் கைத்தொழில்களை ஆதரிக்கச் சொல்லு கிருர். மாகாண சர்க்கார்கள் இந்தத் திட்டத்தை ஆதரிக்க முன் வந்திருப்பதால் மன அமைதியும் திருப்தி யும் அளிக்கும இந்த முறையை நாடு முழுதும் ஏற்றுக் கொள்ளும் எனபதில் சந்தேகமில்லை. தேவைகளை அதி கரித்துக் கொண்டே போவதில் எனக்கு நம்பிக்கை இல்லை. மகாத்மா காந்திக்கும் இதில் நம்பிக்கை இல்லை. தங்கள் சுயமதிப்பை அறிந்து பொதுஜன சுகத்திற்காக உழைக்கும் மக்களே நம் தேசத்தில் இருக்க வேண்டும் என்பது எங்கள் நம்பிக்கை.

தீண்டாமை விலக்கு விஷயத்தில் மகாத்மா காந்தி ஹிந்து மதத்திற்கும் உலகிற்கும் சிறந்த சேவை செய் திருக்கிருர். ஏதோ சில சீர்திருத்தக்காரர்கள் யாருக்குந் தெரியாமல் செய்து வந்த தொண்டை மிக்க சச்தி வாய்ந்த

அரசியல் கட்சியின் திட்டத்தில் ஒரு அம்சமாக ஆக்கிவிட்டார். சமூகக் கடமையாயிருந்தது, இன்று மனித வாழ்க்கைக்கு இன்றியமையாத பிரசாரமாகி விட்டது. ஹிந்து மதம் உயிர்வாழ வேண்டுமானால் தீண்டாமை ஒழிய வேண்டும். இந்தியா புது வாழ்வு பெற வேண்டுமானால் சட்டத்தின் கீழும் வாழ்விலும் அதன் மக்களெல்லாம் சமமாகப் பாவிக்கப்பட வேண்டும். தீண்டாமை விலக்குக்கு திருவாங்கூர் மன்னர் ஆதரவளித்து விட்டார். இனி இந்த உதாரணம் பிற இடங்களில் அனுஷ்டிக்கப்பட்டால் மக்களின் உயர் வாழ்க்கைக்கு ஹிந்துமதம் ஒரு உன்னத சாதனமாகிவிடும். இதை மகாத்மா காந்தி சாத்யமாக்கி விட்டார்.

மகாத்மாகாந்தியின் பொதுஜன சேவையைத் தவிர அவர் வாழ்க்கையில் இன்னும் சில அம்சங்களைப்பற்றிக் குறிப்பிட்டுவிட்டு இந்தக் கட்டுரையை முடிக்க விரும்புகிறேன். மகாத்மா மிகக் குறைந்த அளவு உடைதான் தரித்திருக்கிறார். ஆனால் நான் பார்க்கும் மனிதர்களுக்குள் அவர்மாதிரி சுத்தமானவரை நான் பார்த்ததில்லை. இரண்டு நாள் சேர்ந்தாற்போல் அவர் முகத்தில் மயிர் வளர்ந்து நான் பார்த்ததில்லை. அவர் உடை தூய வெள்ளையாயிருக்கும். அவர் வசிக்குமிடமும் சுற்றுப்புறமும் அதைவிட சுத்தமா யிருக்கும். அவர் தேகத்திலிருந்து ஒருவிதமான ஒளிவீசுகின்றது.

சம்பாஷணையில் மகாத்மாவுக்கு நிகர்கிடையாது. அனுதாபத்துடனும் பொறுமையுடனும் பிறர் சொல்லுவதை அவர் கேட்பார். பொதுவாழ்வில் ஈடுபட விரும்புபவர்கள் சிலகாலமாவது மகாத்மாவுடன் வாழவேண்டும் என நான் விரும்புகிறேன். ஏனெனில் அதுவே அவர்களுக்கு வேண்டிய சிறந்த கல்வியாகும்.

பெண்களுக்கு அவர் அளிக்கும் மதிப்பையும் குழந்தைகளிடம் அவர் பழகும் முறையையும் பார்த்தால் உலக

சிரேஷ்டரான மகாத்மாவா இவ்வளவு சகஜமாக சல்லா பம் செய்கிறார் என்ற பிரமிப்பு ஏற்படுகிறது

மகாத்மாவிடம் யாரும் தன் மனதைத் திறந்து பேசலாம் அவர் யாவையும் சரியாக அறிந்துகொள்வார்.

பாமரமக்களுக்கு அவரிடமுள்ள பக்திக்குக் காரணம் அவருடைய எளிய வாழ்க்கை மட்டுமல்ல, தேசத்திற் காகவும் உலகத்திற்காகவும் அவர் செய்துள்ள மகத்தான தியாகம் மட்டுமல்ல, அவர் சொல்வதை வாழக்கையில் அனுஷ்டித்து காட்டுவதேயாகும். அவர் காங்கிரஸ் தலைவராயிருக்க வேண்டுமென்கிற அவசியமில்லை. காங் கிரஸ் அங்கத்தினரா யிருக்கவேண்டும் என்கிற அவசிய மும் இல்லை. ஆனால் ஹிட்லர் ஜெர்மனியிலிருப்பதைவிட முஸோலினி இதாலியி லிருப்பதைவிட டிவேலரா அயர் லாந்திலிருப்பதைவிட உண்மையாக இந்திய மக்களின் நிகரற்ற தலைவராவார் ஆனால் ஹிட்லர் முஸோலினி களின் சர்வாதிகாரம் போன்றதல்ல காந்திஜீயின் சர்வாதி காரம். ஜனங்களின் சார்பாக நியாயமாகப் பேசக்கூடிய தலைவர்களுள் மகாத்மா ஒரு தனிப்பெரும் ஸ்தானம் வகிக்கிறார். அவர் மிகவும் சுயநலமற்ற மிகுந்த சகிப்புத் தன்மை வாய்ந்த கூர்மையான அறிவு படைத்த தலைவ ராகத் திகழ்கிறார். அவருக்குச் சொந்த ஆசை எதுவும் கிடையாது பதவிமோகம் என்பது கிடையவே கிடை யாது. அவருக்கு ஆசை என்று ஒன்று இருக்குமானால் அது அவருடைய லட்சியங்கள் ஜனங்கள் மனதைக் கவர்ந்து அவைகளை அவர்கள் பின்பற்ற வேண்டுமென்பதுதான்.

இன்று நம்மிடையே மகாத்மாகாந்தி வசிப்பது நமக்கு பெரும் பாக்கியம். நம்மில் சிலர் அவசரமாக சுயராஜ்யம் வேண்டுமென்று விரும்பினோமானால் அவர் வாழ்நாளி லேயே அந்தப் பெரும்பேற்றை அடையவேண்டும். ஏனெனில் நாம் சுயராஜ்யம் அடைந்தால் அவர் அந்த ஆட்சியை நடத்தும் முறையில் இந்திய மக்கள் வாழ்வில் சுகமும் சந்தோஷமும், திகழ்வதுடன் உலகிற்கே நம்நாடு வழிகாட்டியாயிருக்கும்.

# ஹிந்து விவாகம்

மனித வாழ்க்கையில் விவாகம் என்பது ஒரு முக்கிய மான சம்பவம். சாதாரணமாக ஒருவருக்கொருவர், ஏற் கெனவே எவ்வித சம்பந்தமும், பரிச்சயமும்கூட இல்லாத ஒரு ஆண் பிள்ளைக்கும் ஒரு பெண்ணுக்கும்,—விவாகத் தின் மூலமாக, தாய் தந்தையர்க்கும் பிள்ளைக்கும், சோதர சோதரிகளுக்கும், மற்றும் நெருங்கிய பந்துக்களுக்கும், வெகு காலம் நெருங்கிப் பழகிய சிநேகிதர்களுக்குமுள்ள சிநேகத்தையும், அன்பையும் காட்டிலும் அதிகமான, சாசுவதமான அன்பைச் சிருஷ்டிக்க நாம் முயலு கின்றோம்.

அர்த்தபுஷ்டியுடைய சம்ஸ்கிருத ஸ்லோகம் ஒன்று சுருக்கமாகச் சொல்வதுபோல, ஒரு பெண்ணுக்கு விவாகம் ஆக வேண்டுமென்றால் விவாகத்திற்கு ஏற்பாடு செய்யும் பிள்ளையைப்பற்றி, அவன் நல்ல குலத்தில் வந்தவனா யிருக்கவேண்டுமென்று பந்துக்களும், மாப்பிள்ளை நல்ல ரூபவானாயிருக்க வேண்டுமென்று பெண்ணும், மாப் பிள்ளை நல்ல பணக்காரனாயிருக்க வேண்டுமென்று தாயும், மாப்பிள்ளை படித்தவனா யிருக்கவேண்டுமென்று பெண்ணின் தகப்பனும் கல்யாண காலத்தில் வயிறார உணவு வேண்டுமென்று மற்றவர்களும் எதிர் பார்க் கின்றார்கள்.

ஹாஸ்யமாக எழுதின போதிலும் இதில் உண்மை அடங்கியிருக்கிறது. எல்லாவற்றைக் காட்டிலும் குலம் முக்கியம். தமிழ்ப் பழமொழி அழகாகச் சொல்லுவது போல "விரை ஒன்று போட்டால் சுரை ஒன்று முளைக் காது" சாதாரணமாக - வ்யதிரேகங்கள் இருக்கலாம் - விலக்குகள் இருக்கலாம்—நல்ல குலத்தில் உதித்த ஒரு

பிள்ளை நல்ல குணவானுகவும், நன்னடத்தை யுள்ளவனுக வும், மரியாதை யுள்ளவனுகவும் இருப்பான் என்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஆதலால்தான் பெண்ணைச் சேர்ந்த உறவினர்கள் எல்லோரும் நல்ல குலத்தை எதிர் பார்க்கின்றனர் எனக் கவி எழுதி யிருக்கின்ருர்.

ஆனுல் குலம் மாத்திரம் போதாது. முக்கியமாக, இல்வாழ்க்கையில் கணவனும் மனைவியும் ஒருவருக் கொருவர் குறையாத அன்பும் பற்றுதலும் காட்ட வேண்டுமென்ருல், ஒருவருக்கொருவர் உண்மையான சிநேகமும், மரியாதையும் உள்ளவர்களா யிருக்கவேண் டும். நாளாவட்டத்தில் ஒருவரை யொருவர் நன்ருக அறிந்துகொண்டு அவர்களுக்கு சிறப்பாகக் குழந்தைகள் பிறந்த பிறகு, எப்படியிருந்த போதிலும் புருஷனும் மனைவியும் சிநேகமாகத்தான் தங்கள் வாழ்க்கையை நடத்துகின்ருர்கள். ஆனுல் முக்கியமாகச் சிறு வயதில் கல்யாணமானவுடன் புருஷனும் மனைவியும் ஒருவருக் கொருவர் அன்பு பாராட்ட வேண்டுமென்ருல், புருஷனும் மனைவியும் குரூபிகளல்லாது, ஒருவரை யொருவர் பார்த் துச் சந்தோஷமடைய நல்ல ரூபத்தை யுடையவர்களாகத் தான் இருக்கவேண்டும். 'ரூபத்தால் என்ன?—குணம் தான் பெரிது' என்று சொல்வது எளிது. ஆனுல் சிறுவர் கள் மனதில்—ஆணு யிருந்தாலும். பெண்ணு யிருந்தாலும் —ரூபம் பெரிதாகத்தான் தோன்றும். ஆதலால்தான் பிள்ளை யிடத்தில் பெண், ரூபத்தை எதிர் பார்க்கிருள் என்று கவி எழுதி யிருக்கின்ருர்.

இது விஷயத்தில், ஹிந்து விவாகத்திற்கும் மற்ற விவாகங்களுக்கும் உள்ள வித்தியாசத்தைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகின்றேன். மற்ற விவாக சம்பிரதாயங்களில் வேறு விஷயங்களைப்பற்றிப் பெண் பிள்ளைகள் கவனித்தபோதிலும், ரூபம்தான் பெரிது என்று கருதுகிருர்கள். ஆனுல் ரூபத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு கல்யாணம் செய்வது என்ருல் அது

மோசமாகவும் முடியலாம். “வெளுத்தது எல்லாம் பாலல்ல” — “பளிச்சென்று வீசுவதெல்லாம் தங்கமாகாது.” ஆதலால்தான் ‘ரூபம்’ அவசியம் என்று ஒருவாறு ஒப்புக்கொண்ட போதிலும், ‘ரூபம் மாத்திரம் போதாது; மற்றவைகளும் அவசியம், என்பதைக் கவி குறிப்பாக எழுதி யிருக்கின்ருர்.

தாயார், மாப்பிள்ளைக்குப் பணம் இருக்கவேண்டுமென எதிர் பார்க்கின்ருள். பணமில்லாது வாழ்வது அரிது என்பது எல்லோரும் அறிந்த விஷயம். ஏழைகள் வாழவில்லையா என்று கேட்கலாம். ஆனால் ஏழைகளுள்பட ஏழ்மைத் தன்மையை யாரும் விரும்பவில்லை. ஆதலால் கல்யாணம் பண்ணிக் கொடுக்கும் காலத்தில் மாப்பிள்ளை பணக்காரனு யிருக்கவேண்டுமென எதிர் பார்ப்பது சகஜம்தான். காலத்திற்கேற்ப, மற்றவர்கள் சம்பாதித்து வைத்திருந்த பணத்தையாவது, மாப்பிள்ளை சரியாகச் சேமித்து வைத்துச் செலவு செய்யும் யோக்கியதையுள்ளவனு யிருக்கவேண்டும். தன்னுடைய சாமர்த்தியத்தால் தானே சம்பாதிக்கக்கூடிய யோக்கியதை யுள்ளவனு யிருக்கின்ருனு என்பதுதான் முக்கியம். இந்த விஷயத்தில் கொஞ்ச காலத்திற்குள் ஏராளமான மாறுதல்கள் ஹிந்து சமூகத்தில் ஏற்பட்டிருக்கின்றன.

கொஞ்ச காலத்துக்குமுன் வரை மெட்ரிகுலேஷன் எப். ஏ., பி. ஏ., பி. எல்., எம். ஏ., முதலிய பட்ட மிருந்தால், போதும் என்று, பெண்ணைப் பெற்றவர்கள் சந்தோஷமாக, இந்தப் பட்டம் பெற்றவர்களுக்கு ஏராளமான வரதக்ஷிணையுடன், தங்கள் பெண்களை விவாகம் செய்து கொடுத்து வந்தார்கள். ஆனால் இப்பொழுதோ வேலையில்லாத் திண்டாட்டத்தை—முக்கியமாக இந்தப் பட்டதாரிகளிடையேயுள்ள வேலையில்லாத் திண்டாட்டத்தை—பார்த்து, அப்பேர்ப்பட்ட பட்டதாரிகளுக்குச் சந்தோஷமாகப் பெண்களைக் கல்யாணம் செய்து கொடுக்கும் வழக்கம் குறைந்துகொண்டு வருகிறது. அப்படிச்

செய்தால் இந்தப் பட்டதாரிகளுக்குப் பெண்ணைக் கொடுப்பதோடு கூட, மாப்பிள்ளைகளுக்கு வேலை சம்பாதித்துக் கொடுக்கும் பொறுப்பும் பெண்ணின் பெற்றோருக்கு ஏற்பட்டு விடுகின்றது. ஆகவே இப்பொழுது, ஒன்று, சொத்து ஜாஸ்தியாக இருக்கவேண்டும், அல்லது, மாப்பிள்ளை நல்ல வேலையில் இருக்க வேண்டுமென்று பெண்களின் தாயார்கள் எதிர் பார்க்கின்றனர்.

கவி, அடுத்தாற்போல், பெண்ணைப் பெற்ற தகப்பன், மாப்பிள்ளை படித்தவனு யிருக்க வேண்டுமென்று எதிர் பார்க்கின்றான் என்று எழுதி யிருக்கின்றார். இது மிகவும் நியாயம்தான். ஆனால் நம் நாட்டில் இப்பொழுது படித்தவன் எப்படியாவது சம்பாதிக்க வேண்டுமென்று எதிர் பாாக்கின்றோம். படிப்பை ரூபாய், அணு, பைசா விலை போட்டுச் சீர்தூக்கிப் பார்க்கின்றோம். அதில் தவறும் இல்லை. ஆயினும், மாப்பிள்ளை யிடத்தில் தாயானவள் பணத்தை எதிர் பார்த்து, தகப்பன் படிப்பை எதிர் பார்க்கின்றான் என்றால், என்ன பணமிருந்த போதிலும் என்ன அழகு இருந்தபோதிலும், படிப்பு இல்லாவிட்டால் விவேகமில்லை; விவேக மில்லாவிட்டால் ஒழுக்கமில்லை; ஒழுக்க மில்லாவிட்டால் இல்வாழ்க்கையை நாணயமாக நடத்த முடியாது என்பதை அறிந்துதான், மாப்பிள்ளை படித்தவனுக இருக்க வேண்டுமென்று தகப்பன் எதிர் பார்க்கின்றான். சமஸ்கிருதத்தில் "ஸ்ருதம்" என்று எழுதியிருக்கிறது. அதாவது, நல்ல படிப்பு எனப்பொருள்.

இவ்வளவு குணங்களும் பொருந்திய மாப்பிள்ளையைச் சம்பாதிக்கும் வழியில், நவீன காலததில் கொஞ்சம் மாறுதல்கள் ஏற்பட்டபோதிலும், சாதாரணமாக ஹிந்து குடும்பங்களில், தாயும் தகப்பனும், மற்றும் நெருங்கிய உறவினர்களும், பெண் பக்கத்தினரும், பிள்ளை பக்கத்தினரும் நன்றாகப் பரிசீலனை செய்து, வரன, வதூக்களைப் பற்றி நன்றாக விசாரித்து, பலரையும் கேட்டு, ஜாதகம் சகுனம் முதலியவை பார்த்து, பெண், பிள்ளை இவர்களின்

மனத்தையும் ஒருவாறு அறிந்து, தங்கள் மனத்திற்கொப்பக் கல்யாணம் செய்தால், பெண்ணும் மாப்பிள்ளையும் நீடூழி காலம் சுகமாகவும், சமூகத்தில் நல்லவர்களாகவும் வாழ்வார்கள் என்று தெரிந்து, பினனரே நிச்சயம் செய்கின்றனர்.

கொஞ்சகாலமாக, சிறப்பாகச் 'சாரதா' சட்டம் ஏற்பட்ட பின்னர், தாய் தந்தையர்களும் மற்றுமுள்ள உறவினர்களும், பெண், பிள்ளை இவர்கள் மனததை அறிந்து கல்யாணம் நிச்சயம் செய்யும் வழக்கம் அதிகமாகிக்கொண்டு வருகிறது. எனக்குத் தெரிந்த மட்டில் இப்பொழுமு ஹிந்து மதத்தைச் சேர்ந்தவர்கள ஒரு கல்யாணம் என்றால், பெண், பிள்ளைகளின் மனத்தைச் சூசகமாகவாவது தெரிந்துகொண்டுதான் செய்கிறார்கள். மேல்நாடுகள் போல் பெண்ணும் பிள்ளையும் தனியாக, அந்தரங்கமாகச் சந்தித்துப் பழகிய பிற்பாடு கல்யாணம் செய்துகொள்வது என நிச்சயம் செய்துகொள்ளும் வழக்கம் நம நாட்டில் இல்லை என்றே சொல்ல வேண்டும். ஆனால் பெண், பிள்ளைகளின் சம்மதமில்லாமல் கல்யாணம் செய்யும் காலம் மலையேறிவிட்டது. இது நியாயம்தான். போகப் போக என்ன மாறுதல்கள் ஏற்படுமோ சொல்லமுடியாது. இப்போதிருக்கும் விஷயங்களைக் கவனிக்கும்பொழுது இம்மாதிரி, தாய் தந்தையர்களும், உறவினர்களும் தீர விசாரித்துக் கல்யாணம் நிச்சயிப்பதுடன், மற்றும் ஜாதகம், சகுனம் முதலியவைகளையும் பெண், பிள்ளைகளின் அபிப்பிராயங்களையும் பார்த்துச் செய்யும் கல்யாணங்களால் கூடிய மட்டிலும் தம்பதிகள் நீடூழி காலம் சுகமாகவும் சந்தோஷமாகவும் வாழ்வார்கள் என்றும், அப்படி அவர்கள் சுகமே வாழ இந்த வழக்கங்கள் சாதனமாக இருக்குமென்றும் நான் நம்புகின்றேன்.

ஜாதகம் பார்ப்பதில் நம்பிக்கையில்லை என்று சிலர் கூறுகின்றனர். நான் அதில் சேர்ந்தவனில்லை. அப்படிச்

சொல்கின்றவர்கள்கூட ஜாதகம் பார்க்கின்றார்கள். எனக்கு ஜாதகப் பொருத்தம் பார்ப்பதில் நம்பிக்கை உண்டு. ஜோதிஷ சாஸ்திரம் பொய்யில்லை. ஆனால் அதிலிருந்து நிச்சயமாய், உள்ளங்கை நெல்லிக்கனி போல முன்னடியே எல்லாவற்றையும் அறிந்துவிடலாம் என்று எதிர்பார்ப்பது சரியன்று

நல்ல ஜோசியர்கள்—நியாயமாகச் சொல்கின்றவர்கள்—நன்றாய்ப் படித்தவர்களைப் பார்த்து ஜோசியம் கேட்கவேண்டும் ஜாதகப் பொருத்தம பார்த்துக் கல்யாணம் நிச்சயம் செய்வதுதான் சரி என்பது என்னுடைய கருத்து

பெண்களுக்குச் சாரதாச் சட்டப்படி 14 வயதானவுடன் கல்யாணம் செய்யலாம் என்றிருந்த போதிலும், இன்னும கொஞ்ச கால மாகட்டுமென்று தாமதம் செய்தால் பிற்பாடு பல கஷ்டங்கள் நேரிடுகின்றன என்பது எனக்குத் தெரியும் பெண்களுக்கு 17, 18 வயதாகிவிட்டால் பிறகு சரியான மாப்பிள்ளை அகப்படுவது மிகவும் சிரமமாக இருக்கின்றது. நாம் தேசத்தில் அவ்வளவு நாள் பொறுத்துக் கல்யாணம் செய்ய வேண்டிய அவசியமில்லை என்பது என்னுடைய அபிப்பிராயம. 15, 16 வயதான பெண்களுக்கு, 21, 22-க்கு மேல் 25, 26-க்குள் மாப்பிள்ளை பார்த்துக் கல்யாணம் செய்து கொடுப்பதுதான் நம் தேச சீதோஷ்ண ஸ்திதிக்கும், நாகரிகத்திற்கும், சரீர வளர்ச்சிக்கும், நம் வம்ச விருத்திக்கும் சரியானதென்று நான் நம்புகின்றேன். நம் கல்யாணத்தை ஆங்கிலத்தில் 'பிட்ரோத்தல்' (Betrothal) என்று சொல்வார்கள். கல்யாணம் ஆன இரண்டு, மூன்று வருடங்களுக்குப் பிறகுதான் பெண்ணும் பிள்ளையும் புருஷன் மனைவியாக வாழ ஆரம்பிக்கின்றனர். அப்படி யிருப்பது நியாயம்தான். சுமார் 17, 18, வயதுக்குப் பெண் புக்ககம் செல்லும்பொழுது, பிள்ளைக்கு 25, 26 வயதிருக்கும். அப்படி வாழ்வது நியாயம், சகஜம் என்று

நம்புகின்றேன். கல்யாணம் செய்வதை மிகவும் தள்ளி வைப்பதால் நலம் இல்லை; அதனால் கெடுதல்கள் சம்பவிக்கும் என்றே நான் கருதுகிறேன்.

மற்றொரு விஷயம். ஏன் கலப்பு விவாகம் செய்து கொள்ளக் கூடாதென்று சிலர் கேட்கலாம். எல்லா இனத்தினரும் கலப்பு விவாகம் செய்து கொள்ளக் கூடாதா எனக் கேட்டால், அதற்கு நான் தர்க்க பூர்வமாகப் பதில் சொல்ல முடியாது. ஆனால் சாஸ்திர பூர்வமாக அதற்கு ஆட்சேபம் கூற முடியும்.

மேலே சொன்னபடி, கல்யாண மூலமாக, வேறு எந்த விதமான சிநேகத்தையும் அனைபையும் காட்டிலும், அதிகமான, நெருங்கிய பந்துவத்தையும் அன்பையும் ஏற்படுத்த நாம் முயலுவதால், கூடிய மட்டில் ஆணும் பெண்ணும்—கல்யாணம் செய்து கொள்பவர்கள்—பழக்கத்திலும், நடை யுடை பாவனைகளிலும், எண்ணங்களிலும் ஒத்திருந்தால்தான், அன்பையும் நெருங்கிய பந்துவத்தையும் வளர்ப்பதற்கு உதவியா யிருக்கும். ஒருவருக் கொருவர் சரியான வழியில் பொருந்தாத பழக்க வழக்கங்கள் உள்ளவர்களுக்குள் கல்யாணம் செய்வது கொஞ்சம் சிரமமான காரியந்தான். ஆயினும் ஹிந்து மதத்தில் பிற்பாடு சீர்திருத்தங்கள் வந்தாலும் வரலாம். அப்படி வராவிட்டாலும் இப்பொழுது இருப்பது போல் பிராமணர்களுக்குள்ளும், மற்ற ஜாதிகளுக்குள்ளும் அவ்வளவு அதிக வித்தியாசங்கள் இருப்பது அவசியமில்லை. சாஸ்திர சம்மதமாக வித்தியாசங்களில்லை என்றே நான் நம்புகின்றேன். அவர்களுக்குள் அப்படிப் பட்ட வித்தியாசம் பாராட்டாமல் கல்யாணம் செய்யும் காலம், போகப்போக வரலாம்.

மேலே சொன்ன ஸ்லோகத்தில் கடைசியாக, மற்றவர்கள் எல்லோரும் கல்யாண காலத்தில் வயிறார உணவு வேண்டு மென்று எதிர்பார்ப்பதாகக் கவி எழுதி யுள்ளார். அதில் ஓர் உண்மை இருக்கிறது. நான்

இப்பொழுது ஏழைகளைப் பற்றி எழுதவில்லை. சாதாரண மாக, பணம் உள்ளவர்கள் கல்யாணம் செய்வதில் பெண், பிள்ளைகளை சார்ந்த உறவினர்களுக்கும் மற்றவர் களுக்கும் சந்தோஷம் உண்டாவதுடன் கிராமத்திலோ, பட்டணத்திலோ உள்ள ஏழை மக்களுக்கும் சந்தோஷத் தைக் கொடுக்கவேண்டு மென்பது நம்முடைய விவாகங் களில் ஒரு முக்கிய அம்சம். ஆகையால்தான் கல்யாண காலத்தில் எந்த விருந்தாளி வந்த போதிலும் இல்லை என்று சொல்லாமல் விருந்தளிப்பது என்று கிருஹஸ்தர் களில் பெரும்பாலோர் இன்னமும் நம்பி யிருக்கிறாகள்.

ஆனல் கொஞ்ச காலமாக பெரிய பணக்காரர்கள் கூட நிரம்ப சிரமமாக இருக்கிறதென்று சாக்குப் போக்குச் சொல்லி, நான்கு நாள் கல்யாணம் செய்யாது, பிராமணர்களுள்பட எல்லாரும் ஒரு நாள் கல்யாணம் போதும் என்று ஆரம்பித்துவிட்டாாகள். அதைப்பற்றி ஒரு வார்த்தை சொல்ல விரும்புகின்றேன்.

நமக்கு சிரமமிருக்கலாம். ஆனல், கல்யாணம் செய்து கொள்ளும் பெண்களும் பிள்ளைகளும் தங்கள் வாழ் நாளில், ஒரு தரம்தான் கல்யாணம் செய்துகொளகின் றனர். ஆதலால் அவர்களுக்கு நான்கு நாள் கல்யாணம் என்ருல் அந்த நாட்களே சந்தோஷம் கொடுக்கும் நாட்கள். நம்முடைய விவாகப் பழக்கத்தில் குதூகலம் ஒரு பக்கமிருக்க, வைதிக சிரத்தையுடனும், லௌகிக சிரத்தையுடனும் செய்தால் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் மிகவும் சந்தோஷமாயிருக்கும். அவர்கள் என்றும் அழியா நேசத்துடன் வாழ உதவியாக இருக்கும். மற்றவர்களும் காலா காலத்தில் சாப்பிட்டுவிட்டு உறங்கிக் கொள்ளலாம். ஆகவே ' ஒரு நாள் கல்யாணம்' செய்வதை விட்டு விட்டு, பணக்காரர்கள் நான்கு நாள் கல்யாணம் செய்ய வேண்டுமென்று நான் சொல்வேன். கவி கூறி யிருப்பதுபோல இதர ஜனங்களும் வயிருர உண்ணக் கல்யாணம் செய்தல் வேணடும்.

# சௌந்தரிய நகரம்

**ந**ம் நாட்டிலுள்ள ஒவ்வொரு நகரமும் சௌந்தரிய நகரமாக்கப்பட எல்லோரும் முயலவேண்டும் என்பதை ஒருவராலும் மறுக்க முடியாது. ஆயினும் அகத்தழகின்றி முகத்தழகு ஏற்படாது. நகரங்களில் தொத்து வியாதிகளும், அசுத்தமான தெருக்களும், அவற்றை ஜனங்கள் கண்டபடி ஆபாசம் செய்தலும், அசுத்தமான உணவுப் பொருள்கள வியாபாரமாவதும், காற்று வெளிச்சமற்ற நகரங்களைப் போன்ற வீடுகளில் மக்கள் வசிப்பதும் ஆகிய கெட்ட அம்சங்கள் பரவி இருந்தால், தோட்டங்களால், வாசக சாலைகளால், விளையாடு மிடங்களால், சங்கீத நாடக சாலைகளால் மாத்திரம் நகரங்களை அழகு படுத்திவிட முடியாது என்பது எனக்கு நன்முகத் தெரியும்.

ஆனல் இவ்விரண்டிற்கும் முரண்பாடு இல்லை என்பது என் துணிபு. நகரில் பசி, பிணி, அசுததம் ஆகியவை அறவே ஒழியும்வரை நகரை அழகுபடுத்த முயல்வது வீண் காரியம் என்பதை நான் ஒப்புக்கொள்ள முடியாது.

இவ்விரண்டு காரியங்களையும் ஒருமிக்க ஏக காலத்தில் இடைவிடாது செய்து வரவேண்டும். இவ்விஷயங்களில் நகர பரிபாலன சபைகள் ஈடுபடவேண்டும். ஆனல் நகர பரிபாலன சபைகள் தங்கள் காரியங்களைச் செவ்வனே செய்வதில் அநேக இடையூறுகள் இருக்கின்றன. முதலில் பணக் குறைவு. அந்தக் குறையைத் தீர்க்க மூன்று வழிகள் உள்ளன. (1) நகரவாசிகள்

எல்லோரும்—சிறப்பாகப் பணக்காரர்கள்—நகர சீர்திருத் தத்திற்கும் நகரை அழகுபடுத்துவதற்கும் போதுமான வரிகளைக் கொடுக்கத் தயாராக இருத்தல். (2) நகர பரிபாலன சபையார், நகர பால் விநியோகம், போக்கு வரவு வசதிகள், மின்சார சப்ளை முதலிய பொதுஜன சேவைகளைச் செய்யும் சங்கங்களை ஏற்படுத்தி, அவற்றில் நூற்றுககு 51 வீதம் பங்கெடுத்து நடத்திப் பொருள் ஈட்டல். (3) மாகாண அரசாங்கங்கள், நகரங்களுடைய இன்றியமையாத் தேவைகளுக்கு—முக்கியமாக, நிரந்தர நகர முன்னேற்ற ஏற்பாடுகளுக்கு கடன் கொடுத்தும் நன்கொடை அளித்தும் உதவி செய்தல்.

இவ்விதமான வழிகளில் எல்லாம் பொருள் தேடிய போதிலும, அதைச் சிக்கன முறையில் செலவு செயதல் அவசியம். என் அனுபவத்தில் கண்ட அளவில் பெரும் பாலும் பொருந்தாத விஷயங்களில்தான் இச் சிக்கன உணர்ச்சி நகர சபையாருக்கு உண்டாகின்றது. எங்கெந்த விஷயங்களில் சிக்கன உணர்ச்சி உண்டாகலாமோ அந்தந்த விஷயங்களில் உண்டாவதில்லை. நம் சொந்தப் பணத்தைச் செலவு செய்வதில் எவ்வளவு யோசனை, திட்டம், அக்கறை, கவலையைக் கையாளுவோமோ, அவ்வளவுக்குக் குறையாதபடி பொதுப் பணத்தைச் செலவு செய்வதிலும் நாம் கையாளவேண்டும்.

நகர பரிபாலனத்தை முன்னிட்டு நகரங்கள் பல பகுப்புகளாகப் பிரிக்கப்பட்டு, பகுதிப் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். இந்தப் பகுதிப் பிரதிநிதிக ளிடையே தங்கள் தங்கள் பகுதிகளின் காரியங்களைக் கவனிக்கும் விஷயத்தில் அளவுகடந்த போட்டி ஏற்படு வதால் நகரின் பொது முன்னேற்றம் தாமதப்படுகின்றது. சில சமயங்களில் அதற்குத தடையும் ஏற்பட்டுவிடு கின்றது. பகுதி அங்கத்தினர்கள் தங்கள் தங்கள் பகுதி வாசிகளுடைய குறைகளைக் கவனிக்க வேண்டியது

அவசியமாயினும் பகுதி உணர்ச்சி மேலிட்டால் நகரப் பொது முன்னேற்றத்தில் அக்கரை குறையலாகாது.

பணக் குறை இல்லாமல் நகரசபை அங்கத்தினர்களும் திறம்பட வேலை செய்தாலும், ஒரு நகரை சௌந்தரிய நகரமாக்கும் வேலை பெரும்பாலும் நகரசபை அதிகாரிகள் கையில்தான் இருக்கிறது. அவர்கள் ஆண்டவன் ஒருவனைத் தவிர வேறு எவருக்கும் அஞ்சாது, தாம் பெறும் ஊதியத்திற்குத் தக்க ஊழியம் செய்யும் கருத்துடன், மனச் சாட்சிக்கு வஞ்சனையின்றி உழைத்தால் தான், நகரங்கள் சௌந்தரியமாகும். நான் கண்ட அளவில் இத்தன்மை சாதாரணமாக நகரசபை அதிகாரிகளிடையே வேண்டிய அளவுக்கு இருப்பதாகத் தெரியவில்லை. இந்த விஷயத்தில் நான் நகரசபை அதிகாரிகளை மட்டும் குறை கூறத் தயாராக இல்லை. நகரசபை அங்கத்தினருள் சிலரோ பலரோ, நகர மாந்தரிற் சிலரோ பலரோ, நகர சபை அதிகாரிகள் தத்தம கடமைகளைச் செய்யும் விஷயத்தில் அவர்களுடன் ஒத்துழைத்து அவர்களுக்குத் துணை நிற்பதில்லை. நகர மகா ஜனங்களும், அவர்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகள் அடங்கிய நகர சபையாரும், நகர வரவு செலவு திட்டம, நகர பரிபாலன சட்டங்கள், நகர முன்னேற்றப் பொதுக் கொள்கைகள் முதலியவற்றைத் தீர்மானிப்பதோடு மட்டும தம கவனத்தை நிறுத்த வேண்டும். அவற்றிற்கு உட்பட்டு, நாணயமாக நடக்கும் வரையில், நகர நிர்வாக சம்பந்தமாக நகர சபை உத்தியோகஸ்தர்களை சர்வாதிகாரிகளாக விட்டுவிட வேண்டும். இந்தச் சீர்திருத்தங்கள் கூடிய சீக்கிரத்தில் நம் நாட்டில் ஏற்பட வேண்டுமென்று நான் கடவுளை வேண்டுகின்றேன்.

சென்னை நகரைப் பொறுத்தமட்டில், இதை ஒரு நந்தவன நகரமாக (Garden City) கூடிய சீக்கிரத்தில் செய்ய முடியும். அதன் பொருட்டுத்தான் சில நாட்களுக்கு முன்

சென்னை நகர சபையார், நகர அபிவிருத்தி சங்கம் (City Improvement Trust) ஒன்றைச் சட்டப்படி அரசாங் கத்தார் நிர்மாணம் செய்யவேண்டும் என்று தீர்மானித் திருக்கிறார்கள். அரசாங்கத்தாரும் அதைக் கூடிய சீக்கிரம் செய்வார்கள் என்றே நான் நம்புகிறேன்.

நம் நகரில் கேவலம் மிருகங்கள்கூட வசிக்கத் தகுதி யற்ற குடிசைகளுள்ள மைதானங்கள் சுமார் 200 இருக் கின்றன. முக்கியமாக இவற்றைச் சீர்திருத்தி, அந்த இடங்களில் வசிக்கும் ஏழைகளுக்கு, கூடுமானால் நகரிலோ, நகருக்கு வெளிப்புறத்திலோ, இருப்பிட வசதி கள் அளிக்கவேண்டும்; அதுமட்டுமன்று. சிந்தாதிரிப் பேட்டை, ஜியார்ஜ் டவுன், திருவல்லிக்கேணி போன்ற இடங்களில் பல மக்கள் நெருக்கடியான வீடுகளில் இருப் பிட வசதிகளுக்கு மிகவும் கஷ்டப்படுகிறார்கள். கூட்டு றவுச் சங்கங்கள் மூலமாகவும், மற்ற வழியாலும், நல்ல வீடுகள் கட்டி அவர்கள் சுகமாக வாழ்வதற்குச் சாத னங்கள் செய்யவேண்டும். தவிர, வீடு வாசல்கள் இல்லாமல் ஆயிரக்கணக்கான ஆண் பெண்கள், குழந் தைகள், நகரின் தெருக்களிலும் சந்துகளிலும் பிறக்கின் றார்கள்; வாழ்கின்றார்கள்; இறக்கின்றார்கள். இவர் களுக்கு ஆங்காங்கு விடுதிகள் கட்டி, சுகாதாரத்துக்கு வேண்டிய வசதிகளையும் தேடிக் கொடுக்கவேண்டும். இவ்வளவு மட்டும் செய்யச் சுமார் இரண்டு கோடி ரூபாய் வேண்டியிருக்கும். நகரம் எப்பொழுதும் அழகாயிருப்ப தற்கு இது அடிப்படையான காரியமாகும்.

நகரத்தில் வியாதிகளும், கொசுவும் இருப்பதற்கு முக்கிய காரணம் இங்குள்ள மாட்டுக் கொட்டில்கள். ஆதலால் நகரம் அழகாக வேண்டுமானால், பால் கொடுக் கும் பசு எருமைகளையும் மற்றக் கால்நடைகளையும் நகரை விட்டு அகற்றி, கூடுமான வரையில் தாம்பரம், ஆவடி போன்ற இடங்களில் வைத்து, நல்ல சுத்தமான பாத்திரங் களில் பாலை ரயில் வழியாகக் கொண்டு வந்து நகர

மக்களுக்கு சுத்தமான பால் கிடைக்கும்படி செய்ய வேண்டும்.

எல்லாவற்றையும்விட நகர மக்களின் மனம் நகர முன்னேற்றத்தில் ஈடுபடவேண்டும். அதன் பொருட்டுத் தான் வாரந்தோறும் நகர பரிசுத்தப் பிரசாரம் செய்ய முயன்று வருகின்றேன். சிலர் ஒருவாறு ஒத்துழைக்கின்றார்கள்; பலா அவ்வாறு செய்யவில்லை. நகர வாசிகளும் நகர சபை சுகாதார அதிகாரிகளும் நகரசபை அங்கத்தினர்களும் ஒதத்துழைத்தால், நம் தெருக்களிலும் சந்துக்களிலும் குப்பையைக் கொட்டியும், குழந்தைகள்—பெரியவர்களும்கூட—ஆபாசஞ் செய்தும், நகரம் அசுத்தமாகிற அநியாயம் ஒழியும்.

நம் நகரின் எதிர்காலத்தைப் பற்றிய என் ஆசையையும், ஆசியையும் கூறி இக்கட்டுரையை முடிக்கின்றேன்.

தெற்கே தாம்பரம் முதல் வடக்கே ஆவடி வரையிலும், கிழக்கே கடல்முதல் மேற்கே பூந்தமல்லி வரையிலும், நகரம் பரவவேண்டும்.

ஏழை மக்கள் உள்பட எல்லோரும் வசிக்க நல்ல வீடுகள் இருக்கவேண்டும். நகருக்கு, அதிலும் குழந்தைகளுக்கு வேண்டிய நல்ல பால் வெளியிலிருந்து வரவேண்டும. ரஸ்தாக்களும் சந்துகளும் ஒருங்கே பளிங்குபோல் பரிசுத்தமாயிருக்க வேண்டும். தூசி பறக்கக்கூடாது. நகரில் வியாதியே வரலாகாது; அப்படி வந்தால் விரைவில் குணமாவதற்கு வேண்டிய வைத்திய வசதிகள் ஏற்பட வேண்டும். குழந்தைகள் எல்லோரும் படிப்பதற்கு ஆங்காங்கு பள்ளிக்கூடங்கள் ஏற்படவேண்டும். ஏராளமான நல்ல தண்ணீர் எல்லா ஜனங்களுக்கும் கிடைக்க வேண்டும். ஜனங்களும் தண்ணீரைச் சேதம் செய்யலாகாது. நகரம் முழுவதிலும் தரைக்கீழ்ச் சாக்கடைகளும், பம்பாய்ச் கக்கூஸ்களும் ஏற்படவேண்டும். சாக்கடைத் தண்ணீர் கடலில் போய்விழாமல் நவீன முறையில் உபயோகப்படுத்தப்படவேண்டும். நகரில் உள்ள எல்

லாப் பொது இடங்களும், நந்தவனங்கள் அல்லது விளை யாடுமிடங்கள் அல்லது ரேடியோ இடங்களாக இருக்க வேண்டும். கடற்கரையில், கடல் ஓரமாகத் தண்ணீர் அருகே புதிய ரஸ்தா போடப்படவேண்டும். இப்போ துள்ள கடற்கரைச் சாலையில் வண்டி வாகனங்கள் செல்ல வேண்டும் இரண்டு சாலைகளுக்கும் இடையில், விளை யாடு மிடங்கள், நீந்து மிடங்கள், தோட்டங்கள், கஸரத் துச்சாலைகள் முதலியன ஏற்பட வேண்டும். வாரம் ஒரு முறையாவது ஏழை மக்களும் அங்கே செல்ல ஏற்பாடு செய்யவேண்டும்.

இவ்வளவு காரியங்களையும் நாம் செய்வோமானால் நம் நகரம் சௌந்தரிய நகரமாகும். சௌந்தரிய நகர மானால் ஆண்டவன் சாந்நித்தியம் ஏற்படும். சில்லறைச் சண்டை சச்சரவுகள் ஒழியும். எல்லோரும் யோக்கியர்க ளாக, நல்லவர்களாக வாழ்வார்கள். இவ்விஷயத்தில் நமக்கு வேண்டியவை: சிரத்தை, நம்பிக்கை, கொஞ்சம் தன்னல மறுப்பு. இவற்றை நமக்கு ஆண்டவன் அளிக்க, நம் நாளிலேயே நம் நகரைச் சௌந்தரிய நகரமாக்கிப் பார்ப்போமாக!

# கலையின் சிகரம் சங்கீதம்

தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டியின் சார்பாக நடக்கிறது இந்த சங்கித விழா. எனனுடைய மதிப்பிற்குரிய நண்பரும் பிரபல சங்கீத வித்வானுமான ஸ்ரீமான் டைகர் வரதாச்சாரியார் இதைத் திறந்து வைக்கிறார். இக் கொண்டாட்டத்திற்கு எல்லோரையும் இங்கு வரவேற்பதில் எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி. ஒருகால் சிலர் "காங்கிரஸ் ஒரு சங்கீத விழாவை நடத்துகிறதே! இது அதி நூதனமாக அல்லவா இருக்கிறது?" என்று நினைக்கலாம். காங்கிரஸ் ஸ்தாபனத்தின் உட்கருத்தை உணருவோருக்கு அந்த ஆச்சர்யம் மறைந்துவிடும். ஸ்வராஜ்யம் பெறுவதற்காகத் தொண்டாற்றுகிறது காங்கிரஸ். அது அந்நிய ஆட்சியிலிருந்து தாய்நாடு விடுதலை பெறுவதற்காகமட்டும் சேவை புரியவில்லை. தாய் நாட்டின் ஜீவநாடி புத்துயிர் பெறுவதற்காகவும் அது வேலை செய்கிறது. கலை ரஸானுபவம் இவை இரண்டையும்விட, தாய்நாட்டில் மிகவும் மேம்பட்ட அம்சங்கள் எவை? இந்தியா சுதந்திரமாகவிருந்து தானே ஆட்சி புரிந்து வந்த காலத்திலே இந்நாட்டின் பல கலைகளும், சிறப்பாக சிற்ப, சித்திரக் கலைகளும் செழித்துக் கொழித்து வளம்பெற்றிருந்தன. இந்தக் கலைகளுக்கெல்லாம் சிகரம்போன்று பிரகாசித்தது சங்கீதம். அந்நிய ஆட்சி இருந்தும்கூட, இன்று இதர சங்கீதங்களைவிட நம் மக்களுக்குக் கர்நாடக சங்கீதத்திலும், ஹிந்துஸ்தானி சங்கீதத்திலும் பிரேமை அதிகம். அவை அவர்களிடம் தனி இடம் பெற்றுப் பரிமளிக்கின்றன வாய்ப்பாட்டை எடுத்துக்கொள்வோம். நமது வித்துவான்களுக்குக் கணிப்பான சாரீர சுகம் இருக்கிறது. பாட்டில் பலவகை பயின்றிருக்கிறார்கள். தனிப்பட்ட

கற்பனையும் அவர்களிடம் அமைந்திருக்கிறது. இந்த அம்சங்கள் எல்லாவற்றிலும் நமது வித்வான்களுக்கு நிகரே கிடையாது. வாத்தியங்களை எடுத்துக்கொண்டாலும் அப்படியேதான் வீணை, புல்லாங்குழல் மிருதங்கம் ஆகிய உயர்ந்த இசைக் கருவிகளுக்கு இணையாக நாகரிகம் முதிர்ந்த இந்த உலகத்தில் வேறு எவையேனும் இருக்கின்றனவா? இந்திய சங்கீத நிபுணத்வ அம்சத்தின் அற்புத சிருஷ்டிகள் அவை.

இந்தியா மீண்டும் சுதந்திர நாடாகப் புத்துயிர் பெறும்போது இந்நாட்டின் கலையும், ரஸானுபவமும் மறுபடியும் தழைக்கும். இந்தியாவில் சங்கீதத்துக்கு பழம்பெரும் புகழ் உண்டு. நவ இந்தியாவில் மேலும் அதற்குப் புகழ் பல கிட்டவேண்டுமென்பது என்னுடைய மனப்பூர்வமான பிரார்த்தனை. ஸ்வராஜ்ய இயக்கத்திலே கலையின் மறு மலர்ச்சியும் ஒரு பகுதிதான். எனவே காங்கிரஸ் இதிலும் சிரத்தை கொண்டிருக்கிறது. ஆதலால் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி இந்த சங்கீத விழாவுக்கு ஏற்பாடு செய்து தேசீய வாழ்வின் சகல துறைகளிலும் புத்துயிர் பிறக்கும்படி செய்வதில் தனக்குள்ள ஊக்கத்தை நிரூபித்திருக்கிறது.

கலைகளால் முக்கியமாகச் சங்கீதத்தால் சுதந்திரப் போராட்டமே சுலபமானதாயும் இனிமை தோய்ந்ததாயும் இருக்கும்படி செய்துகொள்ள முடியும். ஆவேசம் ஊட்டக் கூடிய தேசீய கீதங்கள் காரணமாக இதர நாடுகளில் மகத்தான தியாகங்களை நாட்டுக்காகச் செய்திருக்கிறார்கள். இதர நாடுகளில் நடந்த சுதந்திரப் போராட்டச் சரிதைகளைப் படித்தவர்களுக்கு இவ்விஷயம் தெரியும். நமது சொந்த நாட்டிலே பங்கிம் சந்திர சாட்டர்ஜியின் "வந்தேமாதர" கீதமும், தமிழ்நாட்டிலே கவியரசர் சுப்பிரமண்ய பாரதியார் இயற்றிய நெஞ்சை அள்ளும் தேசீய கீதங்களும் தேசாபிமானிகளுக்கெல்லாம் உற்சாகம் தரத் தக்கவையாக விளங்குகின்றன. சங்கீதத்தைச் சாதன

மாகக்கொண்டே நாடு விடுதலையை நாடி முன்னேற வேண்டுமென்று சொல்வேன். பல காரியங்களைச் சாதிக்கவல்லது சங்கீதம். நம்மை தேசபக்தி கொள்ளும் படி செய்கிறது சங்கீதம். சங்கீதம நம்மை எல்லாம் தன்னலமற்ற தியாக வீரர்களாக்கவுமகூடும் இந்த உண் மையை அங்கிகரிப்பதற்கு அறிகுறியாகவே தமிழநாடு காங்கிரஸ் கமிட்டி இவ்விழாவை நடத்துகிறது

நமது சஙகீத வித்வான்களுக்கெல்லாம் சமூகத்தில் அந்தஸ்தும், மதிப்பும் பெருகவேண்டும்; அது தழைத்து வளரவேண்டும். நாகரிகம், கௌரவம் முதலிய அம்சங்கள் நிறைந்த ஸமாஜங்களில் அவர்களை உயர்வாக மதித்து வரவேற்று மரியாதை செய்யவேண்டும். ஒரு காலத்தில் நம் வித்வான்கள் இந்த மாதிரியான அந்தஸ்தை வகித்துத் தான் வந்தார்கள். ராஜ தர்பார்கள், பிரபுக்கள இவர்க ளெல்லாம் வித்வான்களை அக்காலத்தில் ஆதரித்ததுதான் அதற்குக் காரணம். ஆனால் இனறைய நிலைமை, ஒரு சிலரைத் தவிர மற்ற வித்வான்களெல்லாம் தங்களுக்கு உரிய அந்தஸ்தை வகிக்கவில்லை. அந்த அந்தஸ்தும் ஸ்தா னமும் அவர்களுக்குக் கிட்டவேண்டும். அப்போதுதான் தேசத்தின் கலாசார மறுமலர்ச்சிக்கும், நாட்டின் முன் னேற்றத்துக்கும் வித்வான்கள் தங்களுடைய சிறந்த பணியைச் செய்யமுடியும். நாட்டைப் புத்துயிர் பெறும் படி செய்யும் தொண்டிலே வித்வான்களெல்லோரும் காங் கிரஸில் சேர்ந்து சேவை செய்ய முன்வரவேண்டுமென று அழைக்கிறேன். சகா ஊழியர்களாக இருந்து தொண் டாற்ற முன்வரவேண்டுமெனத் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டி நம் சங்கீத வித்வான்களை வேண்டிக் கொள் கிறது.

ஊதியம் ஏதும் பெருமல் இவ்விழாவில் கச்சேரிகள் செய்ய இசைந்த வித்வான்கள் அனைவருக்கும் என் நன்றி யைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்களுடைய தாராள மனோபாவத்துக்குத் தக்க முறையில் எப்படி

நன்றி தெரிவிப்பதென எனக்குத் தெரியவில்லை. தேச பக்தி கொண்ட காரணத்தால்தான் வித்வான்கள் இந்த கைங்கர்யத்தைச் செய்ய முன் வந்திருக்கிறார்கள். இதற்காக நாங்கள் அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறோம். எல்லா வித்வான்களும் இங்கே கச்சேரி செய்ய வரும்போது கதர் ஆடை தரித்து வரும்படி நான் அவர்களைக் கேட்டுக்கொண்டிருக்கிறேன். என் வேண்டுகோளுக்கு அவர்கள் இணங்குவார்கள் என்றும் நம்புகிறேன். கதர் உடுத்துவதென்று அவர்கள் ஒருமுறை ஆரம்பித்துவிட்டால் எப்போதுமே கதரைத்தான் அவர்கள் உடுப்பார்கள் என்பது எனக்குத் தெரியும். காங்கிரஸ் மதிப்பு உயரும் என்பதற்காக மட்டும் அவர்களை நான் கதர் உடை உடுக்கச் சொல்லவில்லை. அதை அணிவதால் நாட்டினரிடையே அவர்களுக்குள்ள மதிப்பு இன்னும் பிரபலமடையும்.

இந்த சமயத்தில் இவ்விழாவுக்கு விஜயம் செய்திருக்கும் எல்லோருக்கும் மீண்டும் நல்வரவு கூறுகிறேன்.

# வந்தனோபசாரம்

இதுவரை நமது தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களின் அற்புதமான பிரசங்கங்களையும் அருமையான கட்டுரைகளையும் படித்தோம். அதற்காக நாம் அவர்களை என்றும் மறவாமல் ஞாபகத்தில் வைத்து வணக்கம் செலுத்துவோமாக!

இந்தப் புத்தகத்தில் வெளிவந்திருக்கும் கிராமபோன் பேச்சை வெளியிட அனுமதியளித்த, பம்பாய் நேஷனல் கிராமபோன் ரெக்கார்டு மானுபாக்சரிங் கம்பெனி லிமிடெட்டுக்கும், ரேடியோ பிரசங்கங்களை வெளியிட அனுமதியளித்த ரேடியோ நிலைய நிர்வாகிகளுக்கும், பத்திரிகைக் கட்டுரைகளை வெளியிட அனுமதிதந்த ஆசிரியர்களுக்கும், ஆங்கிலப் பிரசங்கங்களையும் கட்டுரைகளையும் மிக அருமையாக தமிழாக்கித்தந்த ஹிந்துஸ்தான் ஆசிரியர் ஸ்ரீ. ரா. நாராயண அய்யங்கார் அவர்களுக்கும் நண்பர் ஸ்ரீ. எஸ். நீலமேகம் அவர்களுக்கும், அவைகளை மேற்பார்த்து உதவிய உத்தரமேரூர் ராமகிருஷ்ண மிஷன் ஹைஸ்கூல் ஸ்ரீ. ஜி. சேஷாத்திரி அய்யர் அவர்களுக்கும் எங்கள் வந்தனத்தை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

இப்புத்தகத்தை வெளியிட அனுமதியளித்து பல விதத்திலும் உதவிபுரிந்த ஸ்ரீ சத்தியமூர்த்தி அவர்களின் மனைவியார் ஸ்ரீமதி பாலசுந்தரம்மாள் அவர்களுக்கும், அருமைப் புதல்வி ஸ்ரீமதி லக்ஷ்மிதேவி அவர்களுக்கும், மைத்துனர் ஸ்ரீ தியாகராஜன் அவர்களுக்கும் எங்கள் வணக்கத்தை தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

**தமிழ்ப் பண்ணையாளர்**